# கொங்கு வேளாளக் கவுண்டர்களின் பழக்கவழக்கங்கள்
## (திண்டுக்கல் மாவட்டம்)

அழகப்பா பல்கலைக்கழக
முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காக
அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்
**ஆ. திலகம்**

நெறியாளர்
**முனைவர் அ. விசுவநாதன்**






தமிழ்த்துறை
அழகப்பா பல்கலைக்கழகம்
காரைக்குடி - 630 003.


2002

முனைவர் அ.விசுவநாதன் எம்.ஏ., எம்.லிட்., பிஎச்.டி.,
பேராசிரியர்/தமிழ்த்துறைத் தலைவர், (ஓய்வு)
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி – 630 003.

நாள் 11. 2. 2002

## நெறியாளர் சான்றிதழ்

"கொங்கு வேளாளக் கவுண்டர்களின் பழக்க வழக்கங்கள்" (திண்டுக்கல் மாவட்டம்) என்னும் தலைப்பில் திருமதி ஆ.திலகம் அவர்கள் முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காகச் செய்த இந்த ஆய்வு அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப்பட்டது என்றும், இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அளிக்கப்படவில்லை என்றும் உறுதி அளிக்கிறேன்.

அ. விசுவநாதன்

(அ.விசுவநாதன்)

நெறியாளர்

திருமதி ஆ. திலகம் எம்.ஏ., எம்.ஃபில்.,
தேர்வுநிலை விரிவுரையாளர்,
தமிழ்த்துறை,
அருள்மிகு பழனியாண்டவர் கலை & பண்பாட்டுக் கல்லூரி,
பழனி – 624 601.

நாள் 11. 2. 2002

## ஆய்வாளர் உறுதிமொழி

"கொங்கு வேளாளக் கவுண்டர்களின் பழக்க வழக்கங்கள்" [திண்டுக்கல் மாவட்டம்] என்னும் தலைப்பில் முனைவர் [பிஎச்.டி] பட்டத்திற்காக எழுதப்பெற்ற இவ்வாய்வு எனது சொந்த முயற்சியால் உருவானது என்றும், இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அளிக்கப்படவில்லை என்றும் உறுதி அளிக்கிறேன்.

ஆ.தி

ஆய்வாளர்

அ. விசுவநாதன்

உறுதிக்கையொப்பம்
நெறியாளர்,
முனைவர் அ.விசுவநாதன் எம்.ஏ., எம்.லிட்., பிஎச்.டி.,
பேராசிரியர்/தமிழ்த்துறைத் தலைவர், [ஓய்வு]
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி – 630 003.

11/2/2002

துறைத்தலைவர்
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி-630 003.

# நன்றியுரை

"கொங்கு வேளாளக் கவுண்டர்களின் பழக்க வழக்கங்கள்" [திண்டுக்கல் மாவட்டம்] என்னும் தலைப்பில் முனைவர் [பிஎச்.டி] பட்டத்திற்கு ஆய்வு மேற்கொள்ள அனுமதி வழங்கிய அழகப்பா பல்கலைக்கழகத் துணைவேந்தர், ஆட்சிக்குழு உறுப்பினர்கள் ஆகியோருக்கு என் உளம் நிறைந்த நன்றி.

அழகப்பா பல்கலைக்கழகத்தில் ஆய்வு மேற்கொள்ள அனுமதி வழங்கிய அருள்மிகு பழனியாண்டவர் கலை & பண்பாட்டுக் கல்லூரி முதல்வர் அவர்களுக்கு என் நன்றி.

ஆய்வு நெறியாளராக இருந்து ஆய்வுத் தொடக்கத்திலிருந்து இறுதிவரை எல்லா நிலைகளிலும் ஆய்வு முறைகளை நெறிப்படுத்தி புதுமைகளைக் கண்டு காட்டி இவ்வாய்வு சிறப்புற அமையப் பல்லாற்றானும் உறுதுணை புரிந்த அன்பிற்கும் மதிப்பிற்கும் உரிய அழகப்பா பல்கலைக்கழக முன்னாள் தமிழ்த்துறைத் தலைவர், பேராசிரியர் முனைவர் அ.விசுவநாதன் அவர்களுக்கு எந்நாளும் நன்றிகூறக் கடமைப்பட்டுள்ளேன்.

கொங்கு வேளாளர்களிடத்துள்ள அரிய மரபுகளையும், பழக்கங்களையும் விளக்கிய போற்றுதலுக்கும் வணக்கத்திற்கும் உரிய பழனி தவத்திரு சாது சண்முக அடிகளார் அவர்கள் பொன்னார் திருவடிக்கு என் நன்றியைச் சமர்ப்பிக்கிறேன்.

அரிய பல கருத்துகளையும், நூல்களையும் தந்துதவிய பேரூர் தமிழ்க்கல்லூரி முன்னாள் முதல்வர் முனைவர் ந.ரா.சென்னியப்பன் அவர்களுக்கு என் உளம் கனிந்த நன்றி.

என் ஆய்வின் பொருட்டுச் செல்லுமிடங்களுக்கெல்லாம் உடன் வந்து, ஆய்வு சிறப்பாக நிறைவுற ஊக்கப்படுத்திய என் துணைவர் பேராசிரியர் திரு ப.ச.பழனிச்சாமி அவர்களுக்கு என் நன்றி.

ஆய்விற்கு வேண்டிய தரவுகளைச் சேகரிக்க உறுதுணை புரிந்த அனைத்துத் தகவலாளர்களுக்கும் என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

சிறந்தமுறையில் கணிப்பொறித் தட்டச்சு செய்து கொடுத்து உதவிய செல்வம் கணிணி நிறுவனத்தினருக்கு என் நன்றி.

ஆ. திலகம்

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகநா. | - | அகநானூறு |
| ஆ.எண். | - | ஆவண எண்கள் |
| உ.ஆ. | - | உரையாசிரியர் |
| ஐங். | - | ஐங்குறுநூறு |
| கலி. | - | கலித்தொகை |
| குறிஞ்சி. | - | குறிஞ்சிப்பாட்டு |
| குறுந். | - | குறுந்தொகை |
| சிலம்பு. | - | சிலப்பதிகாரம் |
| சிறுபாண். | - | சிறுபாணாற்றுப்படை |
| தொல் | - | தொல்காப்பியம் |
| நற். | - | நற்றிணை |
| நூ. | - | நூற்பா |
| ப. | - | பக்கம் |
| ப.ஆ. | - | பதிப்பு ஆசிரியர் |
| பக். | - | பக்கங்கள் |
| பதிற்று. | - | பதிற்றுப்பத்து |
| பி.சே.ஆ.எண். | - | பிற்சேர்க்கை ஆவண எண்கள் |
| பெருங். | - | பெருங்கதை |
| புறநா. | - | புறநானூறு |
| மதுரை. | - | மதுரைக்காஞ்சி |
| மு.கூ.நூ. | - | முற்கூறிய நூல் |
| மேலது. | - | மேலே குறிக்கப்பட்ட நூல் |
| Ibid. | - | Ibidem |
| Op.Cit. | - | Opera Citate |
| P. | - | Page |
| PP. | - | Pages |
| S.I.I. | - | South Indian Inscriptions |
| Vol. | - | Volume |

# பொருளடக்கம்


| இயல் எண் | | பக்க எண் |
|---|---|---|
| | முன்னுரை | 1 |
| 1. | கொங்கு நாடு | 7 |
| 2. | பழக்க வழக்கங்கள் — விளக்கம் | 20 |
| 3. | ஆவணங்கள் உணர்த்தும் அரிய பழக்க வழக்கங்கள் | 34 |
| 4. | கொங்கு வேளாளக் கவுண்டர்களின் பழக்க வழக்கங்கள் | 49 |
| 5. | இற்றை நாள் மாற்றங்கள் | 148 |
| 6. | தனித்தன்மைகள் | 162 |
| 7. | இருவகைத் தாக்கங்கள் | 204 |
| | முடிவுரை | 216 |
| | துணைநூற்பட்டியல் | 222 |
| | பின்னிணைப்புகள் | |
| | நிழற்படங்கள் | |

ஆய்வுத்தலைப்பு

ஆய்வு நோக்கம்

முன் ஆய்வுகள்

ஆய்வு எல்லை

ஆய்வு மூலங்கள்

ஆய்வு அணுகுமுறை

ஆய்வுப் பகுப்பு

இயல் விளக்கங்கள்

# முன்னுரை

உலகில் வழங்கும் மொழிகள் பலப்பல. மொழிகள் பேசும் மக்களும், ஒரு நாட்டினர், ஒரு இனத்தினர் அல்லர். பல்வேறு நாடுகளிலும் பல்வேறு மொழிகளைப் பேசும் மக்கள் வாழ்ந்து வருகின்றனர். மக்கள் பேசும் மொழிகள் பலவற்றுள்ளும் இலக்கியங்கள் தோன்றிப் பெருகியுள்ளன, பெருகி வருகின்றன. இலக்கியங்கள் மக்களின் பண்பாட்டுக் கருவூலங்களாகப் போற்றப் பெறுகின்றன. முந்தையோர்களின் வாழ்வியல் முறைகள், பழக்க வழக்கங்கள், மரபுகள், அரசியல் போன்றனவற்றை அறியத் துணைநிற்பன அவ்வம்மொழியில் வழங்கும் இலக்கியங்களே ஆகும்.

ஒரு கால கட்டத்தில் வாழ்ந்த ஓர் இனத்து மக்களின் பழக்க வழக்கங்கள், வாழ்வியல் நெறிமுறைகள் முதலியவற்றை இற்றை நாள் அவ்வினத்தார் அறிதல் இன்றியமையாதது ஆகும். வாழ்வைச் செம்மைப்படுத்திக் கொள்ளவும் பின்பற்றவும் அவை துணை நிற்கும்.

## ஆய்வுத்தலைப்பு

"கொங்கு வேளாளக் கவுண்டர்களின் பழக்க வழக்கங்கள்" [திண்டுக்கல் மாவட்டம்] என்பது ஆய்வுத்தலைப்பு ஆகும்.

## ஆய்வு நோக்கம்

சங்க காலந்தொடங்கி, தமிழகத்தின் ஒரு பகுதியாகக் கொங்குநாடு விளங்கி வருகின்றது. கொங்கு நாட்டைப்பற்றி அறிய இலக்கியங்கள், கல்வெட்டுகள், பட்டயங்கள் போன்றவை நிரம்ப உள. கொங்கு நாட்டில் வாழும் மக்கள் பல இனத்தவர் ஆயினும்,

வேளாளக் கவுண்டர்களே மிகுதியும் வாழ்ந்து வருகின்றனர். அவர்தம் பழக்க வழக்கங்களை அறிதல் சாலச் சிறந்ததாகும் என்பது இந்த ஆய்வின் நோக்கமாகும். வேளாளக் கவுண்டர்களின் பழக்க வழக்கங்களை ஒப்பீட்டு முறையில் காண்பதும், முந்தைய நிலை என்ன? இன்றைய நிலை என்ன? மாற்றங்கள் என்ன? மாற்றங்களுக்குக் காரணம் என்ன? என அறிதலும், ஆய்வின் நோக்கமாகும்.

## முன் ஆய்வுகள்

கொங்கு வேளாளக் கவுண்டர்களின் பழக்க வழக்கங்களைப் பற்றிய நூல்கள், கட்டுரைகள், ஆய்வேடுகள் பல உள்ளன. கோவைகிழார் [கோ.ம.இராமச்சந்திரஞ்செட்டியார்] எழுதிய, “கொங்கு நாட்டு வரலாறு”, வி.ராமமூர்த்தி எழுதிய, “Histroy of Kongu”, வால சுந்தரக் கவிராயர் எழுதிய, “கொங்கு மண்டல சதகம்”, புலவர் செ.இராசு எழுதிய, “கொங்கு நாட்டுச் சமுதாய ஆவணங்கள்”, எசு.ஏ.ஆர்.சின்னுச்சாமிக் கவுண்டர் எழுதிய, “கொங்கு வேளாளர் புராண வரலாறு”, தே.ப.சின்னச்சாமி எழுதிய, “கொங்கு வேளாளர் சடங்குகளில் பண்பாடு”, க.கிருட்டிணசாமி எழுதிய, “கூட்டமும் திருமணமும்”, “கொங்கு நாட்டுப்புறப் பாடல்கள்” ஆகிய இரு நூல்கள், சி.சுப்பிரமணியம் எழுதிய, “கொங்கு நாட்டு மங்கல வாழ்த்துப் பாடல்”, புலவர் குழந்தையின், “கொங்குநாடு” முதலான நூல்கள் இவ்வாய்வுக்கு முன்னோடி நூல்களாகும்.

மேற்கண்ட நூல்களில் பழக்க வழக்கங்களைப் பற்றி முழுமையாக விரிவாகச் சுட்டப் பெறவில்லை. மற்றும் இன்றைய நிலையில் பழக்க வழக்கங்களில் ஏற்பட்டுள்ள மாற்றங்கள் பற்றியும் குறிப்பிடப்படவில்லை. ஆதலால் இவற்றை ஆராய்தலை அடிப்படையாகக் கொண்டு, இத்தலைப்பு ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்டது.

## ஆய்வு எல்லை

கொங்கு வேளாளக் கவுண்டர்கள் கொங்கு நாட்டில் பரந்துபட்ட இடங்களில் வாழ்ந்து வருகின்றனர். அவர்தம் பழக்க வழக்கங்கள் முழுமையையும் ஆய்விற்கு மேற்கொள்ளின் பெருகும் என்று கருதி, "திண்டுக்கல் மாவட்டம்" மட்டும் ஆய்வு எல்லையாகக் கொள்ளப்பட்டது.

## ஆய்வு மூலங்கள்

மேலே சுட்டப்பெற்ற நூல்கள் ஆய்வுக்குத் துணைநின்றன. பேட்டி மூலமும், வினா–நிரல் மூலமும் பெற்ற தரவுகள், மேற்சுட்டிய நூல்களுடன் ஆய்வு மூலங்களாகக் கொள்ளப்பெற்றன. இற்றை நாள் மாற்றங்கள் பற்றி அறிவதற்கும், தாக்கங்கள் பற்றி அறிவதற்கும் கள ஆய்வில் திரட்டிய செய்திகளே ஆய்வு மூலங்கள் ஆகும்.

## ஆய்வு அணுகுமுறை

கொங்கு வேளாளக் கவுண்டர்களின் சமுதாயப் பழக்க வழக்கங்களை ஆராய்தலின், சமுதாயவியல் அணுகுமுறையும், இற்றை நாள் பழக்க வழக்கங்களுடன் ஒப்பிட்டுப் பார்த்தலின் ஒப்பீட்டு அணுகுமுறையும், உள்ளனவற்றை விளக்குதலின் விளக்க அணுகுமுறையும் இவ்வாய்வில் மேற்கொள்ளப்பட்டன.

## ஆய்வுப்பகுப்பு

இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஏழு இயல்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அவையாவன,

முன்னுரை

1. கொங்கு நாடு
2. பழக்க வழக்கங்கள் – விளக்கம்
3. ஆவணங்கள் உணர்த்தும் அரிய பழக்க வழக்கங்கள்
4. கொங்கு வேளாளக் கவுண்டர்களின் பழக்க வழக்கங்கள்
5. இற்றைநாள் மாற்றங்கள்
6. தனித்தன்மைகள்
7. இருவகைத் தாக்கங்கள்

முடிவுரை

## இயல் விளக்கங்கள்

முன்னுரையில் ஆய்வுத்தலைப்பு, ஆய்வு நோக்கம், முன் ஆய்வு, ஆய்வு எல்லை, ஆய்வு மூலங்கள், ஆய்வு அணுகுமுறை, ஆய்வுப் பகுப்பு போன்ற செய்திகள் விளக்கப்பட்டுள்ளன.

முதல் இயல், "கொங்கு நாடு". சங்க இலக்கியங்களில் கொங்குநாடு பற்றியும், கொங்கு – கொங்கர் – கொங்குநாடு பற்றிய விளக்கங்களும், கொங்கு நாட்டு எல்லைகள், உட்பிரிவுகள், சங்ககாலம் முதல் ஆங்கிலேயர் வரை ஆண்ட அரசுகள், இன்றைய கொங்கு நாட்டின் நிலை, கொங்கு நாட்டில் வாழும் மக்கள் இனத்தினர் என்னும் செய்திகளும் ஆராயப்பெற்றுள்ளன.

இரண்டாம் இயல், "பழக்க வழக்கங்கள்—விளக்கம்". பழக்கம், வழக்கம், பழக்கவழக்கம், மரபு, பழக்க வழக்கங்களும் சடங்குகளும், நம்பிக்கைகள் பற்றிய விளக்கங்கள் ஆராயப் பெற்றுள்ளன.

மூன்றாம் இயல், "ஆவணங்கள் உணர்த்தும் அரிய பழக்க வழக்கங்கள்" என்பது. உடன்கட்டை ஏறல், உயிர்ப்பலியிடுதல், கொங்கு வேளாளர் குலகுரு – புலவர் – மாணிக்கி ஆகியோரை நியமிக்கும் வழக்கம், பெண்ணுக்கு நில உரிமை, களரிப்பணம், ஆநிரை கவர்தல் – மீட்டல், கோவில்களில் மரியாதை செய்யும் வழக்கம், புலவர் பட்டயம், பட்டயங்களில் முடிப்பு, ஆவணங்களை எழுதியோர், தமிழ்ப் பட்டயங்களிலும் செப்பேடுகளிலும் தெலுங்கில் கையொப்பமிடுதல் முதலான செய்திகள் விவரிக்கப்பெற்றுள்ளன.

நான்காம் இயல், "கொங்கு வேளாளக் கவுண்டர்களின் பழக்க வழக்கங்கள்". பிறப்புத் தொடர்பினவாக உள்ள பல்வேறு செய்திகளும் இடம் பெற்றுள்ளன. திருமணத்தொடர்பினவாக உள்ள பல செய்திகளும் இடம் பெற்றுள்ளன. முதுமையில் ஏற்படும் இறப்புத் தொடர்பான செய்திகள் முழுதும் ஆராயப்பெற்று உள்ளன.

ஐந்தாம் இயல், "இற்றைநாள் மாற்றங்கள்". இவ்வியலில் முந்தைய பழக்க வழக்கங்கள் நாளடைவில் எவ்வாறு தேய்ந்துள்ளன, இன்றைக்கு எந்தளவு பின்பற்றப்படுகின்றன, நிகழ்ந்துள்ள மாற்றங்கள் என்பவை பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளன.

ஆறாம் இயல், "தனித்தன்மைகள்". பிற சமுதாயத்தாரிடை காணப்பெறாத கொங்கு வேளாளச் சமுதாயத்தாரிடை மட்டும் காணப்பெறும் தனித்தன்மைகள் இங்கு ஆராயப்பெற்றுள்ளன.

அருமைக்காரர், அருமைக்காரி – அவர்க்கான தகுதிப்பாடு, மங்கல வாழ்த்துப் பாடல், பாடலின் அமைப்பு, பாடுவோன், வாழ்த்தும் முறை போன்ற ஒரு சில தனித்தன்மைகள் விவரிக்கப்பட்டுள்ளன. கூட்டம் [குலம்] பற்றியும், கூட்டப் பெயர்கள் பற்றியும் குறிப்பிடப்பட்டுள்ளன. காணியாட்சி, காணித்தெய்வங்களில் பெண்தெய்வ வழிபாடு பற்றியும், நாட்டுக்கல் வழிபாடு பற்றியும், கொங்கு வேளாளரின் ஒரு பிரிவினரான மொடவாண்டிக் கவுண்டர்கள் பற்றியும், கொங்குக்குடிமக்கள் பற்றியும் ஆராயப் பெற்றுள்ளன.

ஏழாம் இயல், "இருவகைத் தாக்கங்கள்". இதில் கொங்கு வேளாளரிடத்துக் காணப்பெறும் பிற இனத்தாரின் பண்பாட்டுத் தாக்கங்களும், பிற இனத்தாரிடத்துக் காணப்பெறும் கொங்கு வேளாளர்களின் பண்பாட்டுத் தாக்கங்களும் குறித்து விளக்கப் பட்டுள்ளன.

முடிவுரையில் முன் இயல்களில் கண்ட ஆய்வு முடிவுகள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. அத்துடன் தகவலாளிகள் அளித்த தரவுகளில், சிலர் தங்கள் கருத்துக்களை விதந்து தெரிவித்துள்ளனர். முற்போக்கு நோக்குடைய அத்தகைய குறிப்புகள் இவ்வியலில் இடம்பெற்றுள்ளன.

பின்னிணைப்பில் திண்டுக்கல் மாவட்ட வரைபடம், கொங்கு வேளாளரின் திருமண அழைப்பிதழ் நகல்கள், மங்கல வாழ்த்துப் பாடல்கள், ஆரத்தி, தாலாட்டு, ஒப்பாரி போன்ற நாட்டுப்புறப் பாடல்கள், வினாநிரல், தகவலாளர் பட்டியல், நிழற்படங்கள் ஆகியன இடம்பெறுகின்றன.

சங்க இலக்கியங்களில் கொங்கு நாடு

கொங்கு – கொங்கர் – கொங்கு நாடு

கொங்கு நாட்டு எல்லைகள்

கொங்கு உட்பிரிவுகள்

கொங்கு நாட்டை ஆண்ட மன்னர்கள்

அ. சங்க காலம்

ஆ. சங்கம் தழுவிய காலம்

இ. இடைக் காலம்

ஈ. விசயநகரப் பேரரசுக் காலம்

உ. ஆங்கிலேயர் ஆட்சிக் காலம்

# கொங்கு நாடு

'வடவேங்கடம் தென்குமரி இடைப்பட்ட நாட்டைத் தமிழ்கூறு நல்லுலகம்' என்றார் தொல்காப்பியச் சிறப்புப் பாயிரம் பாடிய பனம்பாரனார். கிழக்கும் மேற்கும் கடலே எல்லையாதலின் சுட்டிச் சொல்லவில்லை. தொல்காப்பியம் இலக்கண நூலாதலால் தமிழ்நாட்டை ஆண்ட வேந்தர்களைப் பற்றிக் குறிப்பிட வேண்டிய தேவை ஏற்படவில்லை. எனினும் தமிழ்நாட்டை ஆண்ட மன்னர்களைத் தொல்காப்பியர் குறிப்பாகச் சுட்டியுள்ளார். புறத்திணையியலுள் வெட்சியில் கரந்தையின் துறைகளைச் சுட்டும்போது,

> "............. உறுபகை
> வேந்திடை தெரிதல் வேண்டி ஏந்துபுகழ்ப்
> போந்தை வேம்பே ஆரென வரூஉம்
> மாபெருந் தானையர் மலைந்த பூவும்"[1]

என்று குறிப்பிடுகின்றார். போந்தை, வேம்பு, ஆத்தி மாலைகள் முறையே சேர, பாண்டிய, சோழ மன்னர்களின் அடையாள மாலைகள் என்பதைச் சங்கப் புறப்பாடல்களால் அறியமுடிகின்றது. தொல்காப்பியர் காலத்தே தமிழகத்தை மூவேந்தர்கள் ஆண்டமை பெறப்படுகின்றது.

கொங்கு, கொங்கர் என்ற சொல்லாட்சிகள் தொல்காப்பியத்தில் இடம்பெறவில்லை. கங்கர் என்ற சொல்லும் இடம்பெறவில்லை. தொல்காப்பியர் காலத்தே கொங்குநாடு உருவாகவில்லை என்பது தெளிவாகின்றது.

## சங்க இலக்கியங்களில் கொங்கு நாடு

கொங்கு என்ற சொல் சங்க இலக்கியங்களில் இடம் பெற்றுள்ளது.[2] கொங்கர் என்ற சொல்லும் சங்க இலக்கியங்களில் இடம் பெற்றுள்ளது.[3] சங்க காலத்தே கொங்கு நாடு உருவாகி இருத்தல் கூடும். மலைகள் சூழ்ந்த பகுதி கொங்கு நாடாகக் கருதப் பெறுகின்றது. பழனிமலை, கொல்லிமலை, பச்சைமலை, சேர்வராயன்மலை, தலைமலை, ஆனைமலை, நீலமலை ஆகிய மலைகள் சூழ்ந்த கோவை, ஈரோடு மாவட்டங்களும், சேலம், நாமக்கல், தருமபுரி, திருச்சி, கரூர், மதுரை, திண்டுக்கல் மாவட்டங்களின் சில வட்டங்களும் சேர்ந்த நிலப்பரப்பு கொங்கு நாடாகத் திகழ்கின்றது.

"ஆகெழு கொங்கர் நாடகப் படுத்த
வேல்கெழு தானை வெருவரு தோன்றல்"[4]

பல்யானைச் செல்கெழு குட்டுவன் என்னும் சேரமன்னன், கொங்கர் நாட்டை வென்று, பசுக்களைக் கைப்பற்றியதைப் பாலைக் கௌதமனார் பாடியுள்ளார்.

சோழன் குராப்பள்ளித்துஞ்சிய கிள்ளிவளவன் கருவூர் எறிந்தானைக் கோவூர்கிழார்,

"மைந்த ராடிய மயங்குபெருந் தானைக்
கொங்குபுறம் பெற்ற கொற்ற வேந்தே"[5]

என்று பாராட்டியுள்ளார்.

கொங்கர்கள் – கொங்கு நாட்டு மக்கள், சங்க காலந்தொட்டு இருந்ததைச் சங்கப் பாடல்கள் பலவும் சுட்டிச் சென்றுள்ளன என்பர் வி. இராமமூர்த்தி.[6] கொங்குநாடு இன்றும், ஆநிரைகள் மிகுதியும் பெற்றுத் திகழ்கின்றது. 'ஆகெழு கொங்கர் நாடு' என்ற பதிற்றுப்பத்தின் கூற்று, இதற்குச் சாலப் பொருந்துவதாகும்.

## கொங்கு-கொங்கர்-கொங்குநாடு

கொங்கு, கொங்கர் என்ற சொற்களின் பொருளை ஆராய்ந்தால் கொங்குநாடு பற்றி அறியக்கூடும்.

கொங்கு என்ற சொல்லுக்குத் தேன், இன்பம், மணம், மகிழ்ச்சி, பூந்தாது எனப் பல பொருள் உண்டு.

"கொங்கு தேர்வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி"– தேன்

(குறுந் 2:1)

"கோவத் தன்ன கொங்குசேர் புறைத்தலின்" – பூந்தாது

(சிறுபாண் 71)

"கொங்குகவர் நீலச் செங்கட் சேவன்"– தேன்

(சிறுபாண் 184)

"கொங்குமுதிர் நறுவழை"– தாது

(குறிஞ்சி 73)

"கொங்குமுதிர் முண்டகத்து"– தேன்

(குறுந் 49–1)

"கொங்குநாடு என்னும் பெயர் கங்க நாடு என்னும் பெயர் வழியாகவும், கொங்கர் என்னும் பெயர் கங்கர் என்னும் சொல்வழியாகவும் தோன்றின எனக் கூறலாம்"[7] என்பர். இக்கருத்து

ஏற்புடையதாயில்லை. கங்கநாடு, கங்கர் என்ற சொல்லாட்சிகள் சங்க இலக்கியங்களில் காணப்படவில்லை. கொங்கு, கொங்கர் நாடு என்ற சொற்களே இடம் பெற்றுள்ளன.

"இப்பகுதிகளில் கோங்க மரங்கள் கோங்கிலவம் – வெள்ளைக் கோங்கு – மிகுதியாக உள்ளன. மக்கள் கொங்கு மலர்களை மாலையாகக் கட்டி அணிந்து மகிழ்ந்திருப்பர். கொங்கு மலர்கள் அணிந்தமையின் கொங்கு–கொங்குநாடு உருவாகி இருக்கலாம்"[8] என்று கருதுவர் வி.இராமமூர்த்தி.

"காடுகள் நிறைந்த பகுதியாகையால் தேன் அதிகம் இருந்திருக்கும். எனவே, தேன் நிறைந்த நாட்டைக் கொங்கு நாடு என வழங்கினர் என்பதும் ஏற்புடையதே"[9] என்பர் சி.சுப்பிரமணியன்.

பூநாடு – மணநாடு – தேன்நாடு என்று உள்ளடக்கிக் 'கொங்குநாடு' என்று பெயர் பெற்றது எனப் புலவர் குழந்தை கூறுவர்.[10]

தேன்மிகுந்த காடுகள் நிறைந்த பகுதியாதலின் கொங்குநாடு என்ற பெயர்க் காரணத்தை வி.இராமமூர்த்தி பொருத்தமன்று என்று கருதுவர். கொங்கு நாட்டின் எல்லை காவிரியாறு (மைசூர் மாநிலத்தில்) வரை பரவி இருந்தது, அதனால் பொருந்துவதன்று என்பர்.[11]

கொங்கு நாடு உருவான காலத்தே இன்றுள்ள நிலப்பரப்பு இருந்திருக்கமுடியாது. ஒரு நாட்டின் பெயர்க்காரணத்தைத் தொடக்க நிலையில் வைத்து எண்ணிப் பார்க்க வேண்டும். இடைக்காலத்து ஏற்பட்ட வளர்ச்சியை வைத்து எண்ணிப்பார்க்கக் கூடாது. ஆதலின்

சங்க இலக்கியங்களில் பயின்றுள்ள ஆதாரங்களை அடிப்படையாகக் கொண்டு எண்ணிப் பார்க்குங்கால் சி.சுப்பிரமணியன் அவர்கள் கூறும் கருத்து ஏற்புடையதே. சங்க காலத்தே கங்கர் தமிழகத்தில் ஆண்டமைக்குச் சான்றுகள் இல்லை. சொல்லாட்சியும் இன்று.

## கொங்கு நாட்டு எல்லைகள்

கொங்கு நாட்டின் எல்லைகளைச் சுட்டும் சில தனிப் பாடல்களைப் பலர் தத்தம் நூல்களில் முன்னரே சுட்டியுள்ளனர்.

"வடக்குத் தலைமலையாம் வைகாவூர் தெற்கு"[12]

எனத் தனிப்பாடலிலும்,

"வடக்குப் பெரும்பாலை வைகாவூர் தெற்கு"[13]

எனக் கொங்கு மண்டலச் சதகத்திலும்,

"வடக்குப் பெரும்பாலை வைகாவூர் தெற்கு"

எனச் செந்தமிழ் இதழிலும் குறிக்கப்பட்டுள்ளன.

கொங்கு நாட்டின் வடக்கு எல்லையானது தலைமலை என்றும், பெரும்பாலை என்றும் இரண்டு விதமாகக் கூறப்பெற்றுள. மேற்கெல்லை வெள்ளிமலை என்று எல்லாவற்றிலும் ஒப்புக்கொள்ளப் பட்டிருக்கின்றன. அவ்வாறே கிழக்கெல்லையாகக் குளித்தலையும், தெற்கெல்லையாக வைகாவூர் என்ற பழநியும் ஒப்புக்கொள்ளப் பட்டிருக்கின்றன.[14]

"மதிற்கரை கீட்டிசை தெற்குப் பழநி மதிகுடக்குக்
கதிந்துள வெள்ளி மலைபெரும் பாலை கவின்வடக்கு
விதித்துள நான்கெல்லை சூழ வளமுற்று மேவிவிண்ணோர்
மதித்திட வாழ்வு தழைத்திடு நீள்கொங்கு மண்டலமே"[15]

எனக் கொங்கு மண்டல சதகம், கொங்கு நாட்டின் எல்லைகளை வரையறுக்கும். இதன்படி, கிழக்கெல்லை சிறிது மாறியிருக்கின்றது. குளித்தலைக்குப் பதிலாக மதிற்கரை சுட்டப்பெறுகின்றது. குளித்தலைக்கு மேற்கே உள்ள ஊர் மதிற்கரை. இப்பொழுது மதுக்கரை என்று வழங்கப்படுகின்றது.

"கொங்கு நாட்டின் எல்லைகளாகக் கிழக்கே மதுக்கரை, மேற்கே வெள்ளிமலை, தெற்கே வராகமலை, வடக்கே பாலைமலை"[16] என மக்கள் கையேட்டுப் பிரதிகள் சுட்டும்.

இக்காலத்தே கொங்கு நாட்டின் பரப்பானது, கோயம்புத்தூர், ஈரோடு, சேலம், நாமக்கல், கரூர் மாவட்டங்களும், திண்டுக்கல் மாவட்டத்தில் பழனி, திண்டுக்கல், ஒட்டன்சத்திரம், வேடசந்தூர் வட்டங்களும் சேர்ந்த பகுதியே கொங்கு நாடாகும்.

## கொங்கு உட்பிரிவுகள்

"கொங்கு நாடு குறிஞ்சியும் முல்லையும் கொண்ட நிலப்பகுதியாகும். கொங்கு நாடு தென்கொங்கு, வடகொங்கு, மீ கொங்கு, கீழ்க் கொங்கு அல்லது மழ கொங்கு என்று நான்கு பெரும் பிரிவுகளைக் கொண்டிருந்தது"[17] என்பர் கோ.ம. இராமச்சந்திரஞ் செட்டியார்.

கொங்கு நாடு மேற்கண்ட நான்கு பிரிவுகளின்றி 24 சிறு நாடுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது.[18] அவையாவன,

1. ஆறை நாடு
2. ஒடுவங்க நாடு
3. வாரக்க நாடு

4. பொங்கலூர் நாடு

5. காங்கய நாடு

6. குறும்பு நாடு

7. காஞ்சிக் கோயில் நாடு

8. வடகரை நாடு

9. பூந்துறை நாடு

10. அரய நாடு

11. தென்கரை நாடு

12. மணநாடு

13. வெங்காலநாடு

14. தட்ட நாடு

15. கிழங்கு நாடு

16. தலைய நாடு

17. அண்டை நாடு

18. வையாபுரி நாடு

19. நல்லுருக்கா நாடு

20. காவடிக்கா நாடு

21. ஆனைமலை நாடு

22. பூவாணிய நாடு

23. வாழவந்தி நாடு

24. இராசிபுர நாடு

கொங்குநாடு இருபத்திநான்கு உட்பிரிவுகளைக் கொண்டிருந்ததாக, கொங்கு மண்டல சதகமும் சுட்டும். பிற்காலத்து இலக்கியங்களும் பட்டயங்களும் இப்பிரிவுகளைச் சுட்டுகின்றன. ஆனால் சி.சுப்பிரமணியன்

அவர்கள், "கி.பி.18ஆம் நூற்றாண்டுக்கு முன் கொங்கு 24 நாடுகள் என்ற வழக்கு ஏற்படவில்லை"[19] என்பர்.

## கொங்கு நாட்டை ஆண்ட மன்னர்கள்

பண்டைய காலந்தொட்டு இன்றைய காலம் வரை பல்வேறு அரசுகள் கொங்கு நாட்டை ஆட்சி புரிந்துள்ளன.

### அ. சங்ககாலம்

சங்ககாலத்தில் வேளிர்களின் ஆட்சி நடைபெற்றது. கால்நடை வளர்ப்பு, ஆநிரைப்போர், கனிமவள ஆதிக்கம், பெருவள ஆதிக்கம் ஆகிய காரணங்களால் வேளிர் ஆட்சி நிலைபெற்றது. கொங்கு நாட்டு மன்னர்களுள் வல்வில் ஓரி, பேகன், பாரி, நன்னன், குமணன், காரூர் கழுவுள் போன்றோர் குறிப்பிடத்தக்கவர் ஆவர்.

#### வல்வில் ஓரி

வல்வில் ஓரி கடையெழு வள்ளல்களில் ஒருவன். கொல்லி மலைக்கும் அதைச் சார்ந்த நாட்டிற்கும் தலைவன். "காரிக்குதிரை காரியொடு மலைந்த ஓரிக் குதிரை யோரியும்" எனச் சிறுபாணாற்றுப் படையில் இவனைப் புகழ்ந்து பாடியுள்ளனர். இவனுடைய பெயர் ஆதனோரி என்றும் கூறப்படுகின்றது.

#### பேகன்

இவனை வையாவிக் கோப்பெரும் பேகன் என்றும் சொல்லுவர். மலை நாட்டை உடையவன், மயிலுக்குப் போர்வை கொடுத்தவன், ஆவியர் குடியில் பிறந்தவன், இவனுடைய ஊர் நல்லூர்.

## பாரி

வேள்பாரி என்று சொல்லப்படுபவன், முந்நூறு ஊர்களை உடைய பறம்பு நாட்டிற்கும், பறம்பு மலைக்கும் தலைவன். முல்லைக் கொடிக்குத் தேர் கொடுத்தவன். தன்னுடைய முந்நூறு ஊர்களையும் மற்றைய பொருள்கள் எல்லாவற்றையும் பரிசிலர்க்குக் கொடுத்தவன்.

## நன்னன்

விச்சிக்கோ பரம்பரையின் முன்னோன். பல் குன்றக் கோட்டமுடையவன்.

## குமணன்

கொடைவள்ளல். முதிரமென்னும் மலைக்குத் தலைவன். தன் தம்பியால் நாடு கொள்ளப்பட்டுக் காடு பற்றியிருந்தபொழுது, பெருந்தலைச் சாத்தனார் பரிசு வேண்டிச் சென்ற பொழுது தனது தலை கொடுத்தற்கு வாளைக் கொடுத்தோன்.

## ஆ. சங்கம் தழுவிய காலம்

சிலம்பு, உரைபெறு கட்டுரையில் 'கொங்கிளங் கோசர்'[20] எனச் சுட்டப்படுவதினால், கொங்கு நாட்டைக் கோசர் என்ற இனத்தார் ஆண்டனர் என்று தெரிகிறது. கோவை கிழார், கோசர் இனத்தாரின் ஒரு பிரிவினர் கொங்கு நாட்டில் இருந்திருக்கலாம் என்று கூறுவர்.[21]

சிலம்பில், வேட்டுவ வரியில், சாலினி தெய்வம் உற்று கண்ணகியைப் பாராட்டும்பொழுது,

'இவளோ கொங்கச் செல்வி குடமலை யாட்டி'

என்கிறாள். இதனால் இளங்கோவடிகள் கண்ணகியைக் கொங்கு

நாட்டின் செல்வியாகவும், குடநாட்டினை ஆளும் செல்வியாகவும் கூறுவதைக் காணமுடிகிறது.

கொங்கு நாட்டை நாகர், கோசர், இரட்டர்கள், கங்கர், பல்லவர், இராட்டிரகூடர், சேரர், சோழர், பாண்டியர், ஒய்சளர், முகமதியர் முதலிய பலர் அவ்வப்போது ஆண்டு வந்துள்ளனர்.[22]

## இ. இடைக்காலம்

இடைக்காலத்தில் கொங்கு நாட்டைக் கங்கர்கள், கொங்குச் சோழர்கள், விசய நகர மன்னர்கள், நாயக்கர்கள் எனப் பலரும் ஆண்டுள்ளனர்.

### கங்கர்கள்

கொங்கணி வர்மனே கங்கவமிசத்து முதல் அரசன். கொங்கு நாட்டை ஆண்டவன். 'கொங்கணி வர்மன் கங்கை குலத்தில் பிறந்தானாகவும் கொங்கு வேளாளர்கள் தங்களைக் கங்கை குலத்தவர் எனச் சொல்லிக் கொள்வார்கள் என்றும், எனவே இவன் கொங்கு வேளாளரின் பூர்வீக சந்ததியில் பிறந்தவனாக இருக்கலாம்'[23] என்பர்.

கி.பி. 10ம் நூற்றாண்டின் பிற்பகுதியில் சோழர்களின் பிரதிநிதிகளான கொங்குச் சோழர்கள் ஆட்சி சிறப்புற்றது. இவர்கள் கொங்கு நாட்டை நானூறு ஆண்டுகள் ஆண்டனர்.

## ஈ. விசயநகரப்பேரரசுக் காலம்

விசயநகரப் பேரரசுக் காலத்தில் நாயக்கராட்சியில் திருமலை நாயக்கரின் ஆட்சி மிகுந்த செல்வாக்குப் பெற்றிருந்தது. திருமலை நாயக்கர் ஆட்சியில் கொங்கு நாடு பெரும் சிறப்புற்றிருந்தது.

இச்சமயத்தில் எழுதப்பட்ட பட்டயங்கள், செப்பேடுகள் [ஆவணங்கள்] போன்றவை தமிழில் எழுதப்பட்டிருந்தாலும் சாட்சிக் கையொப்பத்தைத் தெலுங்கிலேயே நாயக்கர்கள் போட்டிருக்கிறார்கள். இது நாயக்கரின் ஆளுகையை எடுத்துக்காட்டும் சான்றாகும். நாளடைவில் நாயக்கரின் தாக்கங்களில் ஒருசில கொங்கு மக்களிடத்து ஏற்பட வாய்ப்பேற்பட்டது.

### உ. ஆங்கிலேயர் ஆட்சிக்காலம்

நாயக்கராட்சிக்குப் பிறகு ஆங்கிலேயர் ஆட்சி ஏற்பட்டது. இச்சமயத்தில் முகமதியர் ஆட்சியும் நடைபெற்றது. குறிப்பாகத் திண்டுக்கல் மாவட்டம், முகமதிய அரசன் திப்புவின் ஆளுகைக்கு உட்பட்டிருந்தது. திண்டுக்கல் மலைமீது அமைந்திருந்த கோட்டையில் திப்பு தங்கியிருந்தான். அதனால் முகமதியர்கள் பெரும்பாலான அளவில் திண்டுக்கல்லில் குடியேற வாய்ப்பாக அமைந்தது. அதனால் திண்டுக்கல் நகரத்தில் முகமதியர்கள் இன்றைக்கும் மிகுதியாக உள்ளனர்.

சங்ககாலந் தொடங்கி ஆங்கிலேயர்கள் ஆட்சிவரை பல்வேறு இனமக்கள் கொங்குநாட்டை ஆண்டமையை அறிய முடிகின்றது. இந்துக்களும், தெலுங்கர்களும், ஆங்கிலேயர்களும், முகமதியர்களும் கொங்கு நாட்டை அரசாண்ட காரணத்தினால் பல்வேறு இனப் பழக்க வழக்கங்கள் கொங்கு வேளாள மக்களிடையே கலப்பதற்கு வாய்ப்பு ஏற்பட்டது. ஆளுகின்ற ஆட்சிக்குத்தக மக்களின் பழக்கவழக்கங்களில் ஒரு சில நிலைகளில் மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன. இத்தகைய மாற்றங்கள் ஏற்றுக் கொள்ளத்தக்கனவே ஆகும்.

# அடிக்குறிப்புகள்

1. தொல்காப்பியம், நூற்பா, 1006

2. சிறுபாண் : 71,184; குறுந் : 2-1, 49-1, 300-3, ஐங் : 226-3, கலி : 29-8, அகநா : 142-24, புறநா : 373-8

3. நற் : 10-6; குறுந் : 393-6; பதிற்று : 22-15; 77-10; 88-19; 90-25; அகநா : 79-5; 253-4; 368-16; புறநா : 130-5

4. பதிற்றுப்பத்து, 22 : 15,16

5. புறநானூறு, 373 : 7,8

6. V. Ramamoorthy, History of Kongu, P.14

7. சி. சுப்பிரமணியன், கொங்கு நாட்டு மங்கல வாழ்த்துப்பாடல், ப.1

8. V. Ramamoorthy, Op. cit, P.21

9. சி. சுப்பிரமணியன், மு.கூ.நூ, ப.3

10. புலவர் குழந்தை, கொங்கு நாடு, ப.46

11. V. Ramamoorthy, Op. cit, P.P.19,20

12. கோ.ம.இராமச்சந்திரன் செட்டியார், கொங்கு நாட்டு வரலாறு, ப.1

13. கொங்கு மண்டல சதகம், ப.4

14. கோ.ம.இராமச்சந்திரன் செட்டியார், மு.கூ.நூ, ப.2

15. கொங்கு மண்டல சதகம், ப.4

16. Mackenzie Manuscripts, Vol. I, P.26

17. கோ.ம.இராமச்சந்திரன் செட்டியார், மு.கூ.நூ, ப.26,30

18. எசு.ஏ.ஆர். சின்னசாமிக் கவுண்டர்,

கொங்கு வேளாளர் புராண வரலாறு, ப.132

19. சி. சுப்பிரமணியன், மு.கூ.நூ, ப.5

20. சிலப்பதிகாரம், உரைபெறு கட்டுரை, ப.18

21. கோ.ம.இராமச்சந்திரன் செட்டியார், மு.கூ.நூ, ப.81

22. கலைக்களஞ்சியம், IV, ப.299

23. கோ.ம.இராமச்சந்திரன் செட்டியார், மு.கூ.நூ, பக்.100,101

பழக்கம்

வழக்கம்

பழக்க வழக்கம்

மரபு

பழக்க வழக்கங்களும் சடங்குகளும்

நம்பிக்கைகள்

# பழக்க வழக்கங்கள் - விளக்கம்

பழக்கம் என்ற சொல் பழகுதல் அல்லது பயிற்சியாதல் என்ற பொருளில் தமிழில் பண்டு தொட்டுப் பயின்று வந்துள்ளது. பழகு–பழகிய–பழகுதல்–பழக்கம் என்ற சொல்லாட்சிகள் இன்றும் உள்ளன. பழகிப்போன செயல், பழக்கம் ஆகின்றது. பழக்கம் தனி மனிதச் செயற்பாடு. இதனைப் பிறரும் பின்பற்ற வாய்ப்புண்டு.

## பழக்கம்

பழக்கம், வழக்கம், பழக்கவழக்கம் என்ற சொல்லாட்சிகள் தமிழரிடையே மிகுதியும் காணப்படுகின்றன. தொல்காப்பியத்தில் பழக்கம் என்ற சொல்லாட்சி இல்லையாயினும், அப்பொருள் தரக்கூடிய பல சொற்கள் காணப்பெறுகின்றன. 'பழகிய' [தொல்.நூ.682] என்ற சொல்லாட்சி உண்டு.

"பழக்கம் என்பது ஒரு கற்கும் செயலாகும். இது தனிமனிதனிடம் இயல்பாக வந்தமைந்த நடத்தையைக் குறிப்பதாகும். பழக்கம் வளர்ச்சிக்கு இன்றியமையாத கூறாகக் கருதப்படுகிறது."[1] என்று விளக்குகிறார் க.காந்தி.

"நனவுடன் தொடங்கிய செயல் நாளடைவில் நனவன்றியே அதாவது மூளையின் பிரதானப் பகுதிகளின் சம்பந்தமின்றியே நிகழ்வதாக ஆகிவிடுகின்றது. அப்படி நிகழும் செயலே பழக்கம் எனப்படும்"[2] என்று கலைக்களஞ்சியம் கூறும்.

எந்த ஒரு பழக்கமும் முதலில் தனிமனிதனிடம்தான் தோன்றுகிறது. அது இயல்பாகவோ, தூண்டுதலினாலோ

நிகழக்கூடும். பழக்கம் என்பது நல்லதாகவும் இருக்கும், தீயதாகவும் இருக்கும். அதனால்தான் நற்பழக்கம், தீப்பழக்கம் என்ற சொல்லாட்சிகள் ஏற்பட்டன. சமுதாயத்தின் உருவாக்கத்தில் இப்பழக்கம்தான் அடிப்படையாக அமைகின்றது. ஒத்த பழக்கமுடையவர்கள் ஒன்று சேர்ந்து வாழ்தலே சமுதாயத்தின் தோற்றம் ஆகும். சமுதாயங்கள் பலவாகப் பெருகியமைக்கு அடிப்படைக்காரணம் பழக்கமே.

இத்தகைய பழக்கங்கள் இளமை முதலே தொடங்கி வருவன. நல்ல பழக்கங்களை இளமையில் குழந்தைகளுக்குக் கற்றுக் கொடுக்க வேண்டும் என்ற நோக்கமே பெற்றோர் ஆசிரியரின் கடமை என்று கல்வி ஆராய்ச்சியாளர்களால் வலியுறுத்தப் பெறுகின்றது. மேலும் நல்ல பழக்கங்களை அமைத்துக் கொள்ள குழந்தைப்பருவமே ஏற்றது என்பது உளவியலாரின் கருத்து.[3]

## வழக்கம்

வழக்கு → வழக்கம் என்றாகி இருத்தல் வேண்டும். பழக்கத்தின் தொடந்த நிலையே வழக்கம் ஆகும். 'சமூகத்தில் அதிகமாகப் பின்பற்றப்படும் பழக்கமான நடவடிக்கையே வழக்கம் ஆகும்..... வழக்கங்கள் ஒரு குழுவினுடைய விருப்பங்கள், இலட்சியங்கள், வாழ்க்கைக் கண்ணோட்டங்களால் பிரதிபலிப்பதாகவும் அமைகின்றன'[4] என்று குறிப்பிட்டுள்ளார் க. காந்தி.

இதனையடுத்து, "ஒரு இனக்குழுவிலுள்ள பலருடைய மனவெழுச்சி, உணர்ச்சி, விருப்பு, வெறுப்பு ஆகியவற்றுடன் இணைந்து நிற்பது வழக்கம் என்று கருதப்படுகிறது" என்றும் குறிப்பிடுவார்.

வழக்கம் என்ற சொல்லாட்சி தொல்காப்பியத்தில் இடம் பெற்றுள்ளமை அதன் பழமையைச் சுட்டுவதாகும்.

"தகுதியும் வழக்கும் தழீஇயின ஒழுகும்
பகுதிக் கிளவி வரைநிலை இலவே." (தொல்.நூ.500)

"முந்நீர் வழக்கம் மகடூஉவோடு இல்லை" (தொல்.நூ.980)

"வல்லெழுத்து மிகினும் மானமில்லை
ஒல்வழி யறிதல் வழக்கத்தான" (தொல்.நூ.246)

"அக்கென் சாரியை பெறுதலும் உரித்தே
தக்கவழி அறிதல் வழக்கத்தான" (தொல்.நூ.270)

"சொல்வழி அறிதல் வழக்கத்தான" (தொல்.நூ.312)

"சேய்மையின் இசைக்கும் வழக்கத்தான" (தொல்.நூ.637)

"நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்"(தொல்.நூ.999)

தொல்காப்பியர் வழக்காறு என்ற சொல்லையும் கையாண்டுள்ளார்.

"வழக்காறல்ல செய்யு ளாறே" (தொல்.நூ.501)

மக்களிடையே தொன்று தொட்டு வழங்கி வருவது வழக்கம் ஆகும்.

வழக்கு என்பது அக்காலத்தில் நன்னெறி என்ற பொருளில் வழங்கியது. இதனையே வள்ளுவரும்,

"அன்போ டியைந்த வழக்கென்ப ஆருயிர்க்
கென்போ டியைந்த தொடர்பு"[5]

என்று கூறியுள்ளார்.

"எண்பதத்தா லெய்த லெளிதென்ப யார்மாட்டும்
பண்புடைமை என்னும் வழக்கு"[6]

பரிமேலழகரும் வழக்கு என்பதை நன்னெறி என்றே கூறியுள்ளார்.

## பழக்க வழக்கம்

பழக்க வழக்கம் – இருசொற் கலப்பாகும். பழக்க வழக்கங்களைத் தனிமனிதனும், சமுதாயம் என்ற அமைப்பும் இணைந்து உருவாக்குகின்றன. சமுதாயம் என்ற அமைப்பு, ஒன்றைக் குறிப்பதன்று. ஒத்த கருத்துடைய பழக்கங்களை மேற்கொள்வாரின் கூட்டமைப்பே சமுதாயமாகும். மக்களின் தேவைகளை அடிப்படையாகக் கொண்டே பழக்கம் உருவாகின்றது. சமுதாயத்தில் அவை ஏற்றுக் கொள்ளப்படுகின்ற நிலையில் வழக்கங்களாக உருவாகின்றன.

“தனிமனிதனிடம் இயல்பாக வந்தமைந்த நடத்தையைப் பழக்கம் எனவும் இனக் குழுவிலுள்ள பலருடைய மனவெழுச்சி உணர்ச்சி ஆகியவற்றுடன் இயைந்து நிற்பது வழக்கம் எனவும் சமூகவியலார் கூறுவர்”[7]. இக்கூற்று ஏற்புடையதாகும்.

‘தனிமனிதன் பழகிப்போன முறையில் திரும்பத் திரும்பச் செய்துவரும் ஒரு குறிப்பிட்ட செயலைப் பல மனிதர் ஒன்றாகச் சேர்ந்து செய்கின்ற பொழுது அது வழக்கம் எனப் போற்றப்படுகின்றது’[8] என்பர் க.த.திருநாவுக்கரசு.

‘பழக்கம் என்பது தனிமனிதனைச் சார்ந்த தொடக்கநிலை எனவும் வழக்கம் என்பது சமுதாயம் சார்ந்த தொடர்நிலை எனவும் கூறலாம்’[9] என்பர் க.காந்தி.

பழக்க வழக்கம் ஒவ்வொரு இனக்குழுவிற்கும் சமுதாயத்திற்கும் தனிப்பட்ட முறையில் அமைவதைக் காணமுடிகிறது. ஒரே ஊரில் வாழ்கின்ற வேளாளக் கவுண்டர்களின் பழக்க வழக்கங்களும்

அகமுடையார் பழக்க வழக்கங்களும் ஒன்றாக அமையாமல், வெவ்வேறாக அமைந்துள்ளன.

பழக்க வழக்கம் என்ற சொல் இன்று சமுதாயச் செயற்பாட்டு நிலைகளை விளக்க வல்லதாகவே பயன்பட்டு வருகின்றது.

மரபு

மரபு என்பது பழக்க வழக்கத்தோடு தொடர்புடையது; அதனின்றும் உருவானது என்று கூறப்பெறும். பழக்க வழக்கங்களைப் பற்றி அறியுங்காலை, மரபைப் பற்றிய விளக்கத்தை அறிவதும் இன்றியமையாதது ஆகும்.

தொல்காப்பியர் நூன்மரபு, தொகைமரபு, விளிமரபு என்று சில இயல்களை அமைத்ததோடன்றி, மரபியல் என்றே ஓரியல் வகுத்துள்ளார் எனின் மரபின் சிறப்பும் இன்றியமையாமையும் புலனாகும். மரபு என்பதற்குத் தெளிவான விளக்கத்தைத் தொல்காப்பியர் அளிக்கவில்லை. ஆனால், மரபு என்பதற்குப் பல இடங்களிலும் விளக்கம் தந்துள்ளார். உரையாசிரியர்களும், திறனாய்வாளர்களும் மரபு என்பதற்குப் பல்வேறு விளக்கங்கள் தந்துள்ளனர்.

அரசஞ்சண்முகனார்,

"மரபு என்பது தொன்று தொட்டுவந்த வழக்கு"[10]

என்பர்.

"மரபு என்பது ஒவ்வொரு பொருளுக்கும் ஆன்றோர் வழங்கிய சொற்களை அவர்கள் வழங்கிய முறைப்படியே கூறுதல் ஆகும்"[11] என்று தொல்காப்பியச் செல்வம் சுட்டும்.

ச. வையாபுரிப்பிள்ளை, "ஓர் இனத்தார் ஒரு பொருள்பற்றி வழக்கமாய் அனுசரித்து வரும் நியதியே மரபு என்பது ஆகும்"[12] என்பர்.

பழக்கத்தின் காரணமாக வழக்கம் ஏற்பட்டு அதிலிருந்து மரபாக நிலைபெறுகின்றது என்று ச.வே.சுப்பிரமணியம் மொழிவர்.[13]

நன்னூலார்,

"எப்பொருள் எச்சொலின் எவ்வாறு உயர்ந்தோர்
செப்பினர் அப்படிச் செப்புதல் மரபு"[14]

என்று விளக்கம் தந்துள்ளார்.

மரபு மாறக் கூடியதன்று, தொன்று தொட்டு வழக்கத்தின் காரணமாக வருவது.

"மரபு நிலை திரியின் பிறிது பிறிதாகும்"[15]

என்று கூறுவர் தொல்காப்பியர்.

பழக்க வழக்கங்கள் ஒரு குழுவினரிடையே பலவாறாக அமைதல் போலவே ஒரு குழுவினரிடையே பல்வேறு மரபுகளும் காணப்பெறும்.

"பழக்கம், வழக்கம், மரபு என்ற சொற்கள் ஒன்றோடொன்று உறவுடையன. ஒன்றின் வளர்ச்சி நிலையே மற்றொன்றின் தொடர்ச்சியாக அமைகின்றது. பழக்க, வழக்க, மரபுகள் எளிதில் மாற்றமுடியாதவை. அவைகால, இட, சூழ்நிலை அமைவுகளுக்குத் தக உருப்பெறுவன. அவ்வாறு உருப்பெறும் மரபுகளே சமுதாய நியதிகளாகக் கருதப்படுகின்றன. எனவே, பழக்கம் என்பது தனிமனிதனைச் சார்ந்தது என்றும், வழக்கம் சமுதாயத்தைச் சார்ந்ததென்றும், மரபு சமுதாயம் விதிக்கும் கட்டுப்பாடு எனவும்

கூறலாம். மேலும் பழக்கம் என்பது தொடக்க நிலையாகவும், வழக்கம் தொடர்நிலையாகவும், மரபு பண்பாட்டின் முதிர்நிலை எனவும் வகைப்படுத்தலாம். தனிமனிதப் பழக்கங்களே காலப்போக்கில் சமுதாய வழக்கங்களாக உருப்பெற்றுத் தலைமுறை தலைமுறையாக இடையறாது நிலைத்து வாழ்வுபெறும் நிலையில் மரபுகளாக வாழ்வு பெறுகின்றன"[16] என்று க.காந்தி அளித்துள்ள விளக்கம் சிறப்பாகவும் ஏற்புடையதாகவும் அமைகின்றது.

தொல்காப்பியர், தலைவன் பொருள் தேடக் கடல் கடந்து செல்லுங்கால் தலைவியை உடன் அழைத்துச் செல்லும் வழக்கம் இல்லை என்று கூறியுள்ளார்.

"முந்நீர் வழக்கம் மகடூஉ வோடில்லை" [தொல்.நூ.980]

தொல்காப்பியர் – வழக்கம் என்றே சுட்டுகின்றார். பின்னாளில் அதுவே சமுதாய நியதியாக, மரபாக மாறிவிட்டது. வழக்கம் மரபாகின்றது என்பதற்கு இது ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகும்.

## பழக்க வழக்கங்களும் சடங்குகளும்

பழக்க வழக்கங்கள் போலவே சடங்குகளும் சமுதாயத்தோடு தொடர்புடையன.

சடங்கு என்ற சொல்லாட்சி, தொல்காப்பியத்திலோ, சங்க இலக்கியங்களிலோ இடம் பெறவில்லை. தொல்காப்பியர், 'கரணம்' என்ற சொல்லாட்சியைப் பயன்படுத்தியுள்ளார். சடங்கின் முன்னோடிச் சொல்லே கரணம் என்பது. தொல்காப்பியர்,

"பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்
ஐயர் யாத்தனர் கரணம் என்ப"[17]

"கற்பெனப் படுவது கரணமொடு புணரக்
கொளற்குரி மரபின் கிழவன் கிழத்தியைக்
கொடைக்குரி மரபினோர் கொடுப்பக் கொள்வதுவே"[18]

என்று சுட்டியுள்ளார்.

இந்நூற்பாக்கள் கற்பியலில் வருவதால் திருமணச் சடங்குகள் சுட்டப்பெற்றன எனக்கொள்வர். முதல் நூற்பாவினைப் பொதுவாகக் கொள்வதில் தவறில்லை. நாட்டில் பொய்யும் வழுவும் தோன்றியதால், சமுதாய வாழ்வு சீர்குலையக் கண்ட சான்றோர்கள் நேர்மையும் கட்டுப்பாடும் கொண்ட சமுதாயத்தை உருவாக்க வேண்டி சடங்குகளைத் தோற்றுவித்தனர் எனக் கொள்வதே பொருந்தும்.

திருமணத்தில் சடங்குகள் முறைப்படி, கிழவன் கிழத்தியைத் திருமணம் செய்து கொண்டது அடுத்த நூற்பாவால் புலனாகின்றது. திருமணத்தில் கிழத்தியை அவர்தம் பெற்றோர் கொடுப்பது மரபு. இதனைக் கொடைக்குரி மரபினோர் என்ற சொல்லாட்சி உணர்த்தும்.

"பழக்கம் என்பது பயிற்சியின் முதிர்ச்சி... உயர்ந்தோர் பழக்கங்கள் காலப்போக்கில் வழக்கங்கள் என்று பெயர் பெறுகின்றன"[19]

"ஒரு செயல் நன்மை விளைவிக்கின்றது என்று மக்கள் உணரும் நிலையில் அது பழக்கமாக மாறுகிறது. காலப்போக்கில் அறிவியல், கல்வி ஆகியவை காரணமாகச் சமுதாயத்தில் முன்னேற்றம் ஏற்படும்போது அது சடங்காக மட்டும் நிற்கிறது"[20]

“செயல், பழக்கம், சடங்கு மூன்றும் வெவ்வேறு வளர்ச்சிப் படியிலுள்ள ஒரே செய்தியாகும்”[21] என்று வி. சரசுவதி அவர்கள் கூறும் கருத்து முற்றிலும் பொருத்தமானதே ஆகும்.

பழக்க வழக்கங்கள் தொடக்கத்தில் வரன்முறையின்றி அமைய வாய்ப்புண்டு. பின்னர்த் தேவை ஏற்படும் பொழுது சட்டதிட்டத்துடன் வரன்முறைப்படுத்துங்கால் அது சடங்காக மாறுகின்றது.

திருமணத்தில் பெண் பார்த்தல் என்பது ஒரு மரபு. பெண் பார்க்கச் செல்லும்போது இத்தனைபேர் செல்ல வேண்டும், இன்ன இன்ன பொருட்களை எடுத்துச் செல்ல வேண்டும் என்று நெறிப்படுத்தும்போது அதுவே சடங்காக ஆகின்றது. இதைப்போன்றே ஒவ்வொரு நிகழ்விலும் தொடர்புடைய சடங்குகள் தோற்றம் பெற்றன.

“இயற்கையின் சீற்றங்களிலிருந்து தன்னைப் பாதுகாத்துக் கொள்ள நினைத்த அவன் (மனிதன்) இப்படிச் செய்தால் இவ்வாறு நடக்கும் என்று எண்ணிக் கற்பித்துக் கொண்ட செயல்முறைகள் சடங்குகளாகத் தோற்றம் கொண்டன”[22] என்று சடங்குகளின் தோற்றத்திற்குக் கூறும் காரணம் பொருந்துவதாக இல்லை. ஏனெனில் இன்று இயற்கையின் சீற்றம் இன்றியே இயல்பான வாழ்க்கையிலேயே சடங்குகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

“மனித இனத்தை ஒன்றுபடுத்தி மகிழ்ச்சியில் திளைக்க வைப்பதே விழாக்களின் செயற்பாடாகும். அவை சடங்குகளின் அடிப்படையில் தோன்றிச் சமுதாய நம்பிக்கையின் காரணமாகச் செல்வாக்குப் பெற்று வளர்ந்தும் வாழ்ந்தும் மறுமலர்ச்சியடைந்தும் மக்களினங்களிடையே தொன்று தொட்டு நிலவி வருகின்றன.

விழாக்கள் என்பன மக்கள் ஒன்று சேர்ந்து நடத்தும் கூட்டுச் சடங்குகளிலிருந்து தோன்றியனவாகவே காட்சி தருகின்றன. சடங்குகளே விழாக்களுக்கு அடிப்படை. சடங்குகளின் ஒன்றிணைக்கப்பட்ட கூட்டுத் தொகுதியினை விழா எனக் கூறலாம்"[23] என்று கருத்துக் கூறுகிறார் க.காந்தி. இவரின் கூற்று முற்றிலும் ஏற்றுக்கொள்ளக் கூடியதன்று.

இறைவன் தொடர்பான விழாக்கள் மாதந்தோறும், ஆண்டுதோறும் நடைபெற்று வருகின்றன. ஒவ்வொரு விழாவிற்கும் வரையறுக்கப்பட்ட விதிமுறைகள் பின்பற்றப்படுகின்றன. இவற்றை வழிபாட்டுமுறைகள் என்று கூறுவார்களே தவிர, சடங்குகள் என்று கூறமாட்டார்கள். இல்லங்களில் நடைபெறும் விழாக்களில் பின்பற்றப்படும் நடைமுறைக்குச் சடங்கு என்று பெயர்.

"சடங்குகள் என்பதற்கு நற்செயல்கள் என்று பொருள் சொல்லலாம். இச்சடங்கு முறையானது, சங்க காலத்திலேயே இருந்தது. அந்தக் காலத்தில் இச்சடங்குகளைக் கருத்துணர்வோடு, பொருட்செறிவோடு நற்பயன் கருதித்தான் அமைத்தனர். நம்முன்னோர்கள் அறிவுபூர்வமாகத்தான் எதையும் மேற்கொண்டு இருந்தனர். இதன் உண்மை நிலையை அறியாமல் தான் நம்மில் சிலர் மூடப்பழக்கம் எனக் கைவிட்டனர்"[24] என்று கருத்துரைப்பர் தே.ப. சின்னச்சாமி.

சடங்குகள் சமுதாயத்திற்குச் சமுதாயம் வேறுபட்டுக் காணப்பெறும். சடங்கு ஒன்றாக இருக்கலாம். செய்யும் முறை வேறாக இருத்தல் கூடும். பழக்க வழக்கங்களைப் போலவே சடங்குகளும்

பலவகையானவை; இனத்திற்கு இனம் மாறுபட்டு இருப்பவையும் கூட.

## நம்பிக்கைகள்

ஒரு சமுதாயத்தில் மக்களிடையே காணப்பெறும் நம்பிக்கைகள் கருதத்தக்கன. "சமூகத்தின் பண்பாட்டு மரபினை அறிவிக்க வல்லன அச்சமுதாயத்தின் நம்பிக்கைகள். நம்பிக்கைகள் மக்களால் உருவாக்கப்பட்டுச் சமுதாயத்தால் புரக்கப்படுவன. அவை சமூகத் தேவைகள் மற்றும் குறிக்கோள்களின் அடிப்படையில் தோன்றியன. மனிதனின் தன்னல உணர்வும் சமுதாய உணர்வுமே நம்பிக்கைகளை வளர்த்து வருகின்றன"[25] என்பர் க.காந்தி.

ஒரு சில பழக்க வழக்கங்களை அடிப்படையாகக் கொண்டு ஒரு சில நம்பிக்கைகள் தோற்றம்பெற்றன. திருமணம் பேசச் செல்லும் முன்னர், கோவிலில் பூப்போட்டுப்பார்த்தல் இன்றும் மக்களிடையே ஒரு வழக்கமாக இருந்து வருகின்றது. இன்ன பூ விழுந்தால் காரியம் கை கூடும்; இன்ன பூ விழுந்தால் காரியம் கைகூடாது என்று மக்கள் நம்புகின்றனர். நிமித்தம் பார்த்தலும் நம்பிக்கைகள் தோன்றுவதற்குக் காரணமாகின்றன.

பூப்போட்டுப் பார்த்தல் என்பது நாமாகவே கோயிலுக்குச் சென்று இறைவனிடம் வேண்டிக் கேட்பதாகும். மற்றும் பல்லிகள், பறவைகள், விலங்குகள் இவற்றின் ஒலிகளும் நிமித்தங்களாகக் கருதப்படுகின்றன.

"கள்ளி முள்ளரைப் பொருந்திச் செல்லுநர்க்கு
உறுவது கூறுஞ் சிறுசெந் நாவின்

மணியோர்த் தன்ன தெண்குரற்

கணிவாய்ப் பல்லிய காடிறந் தோரே".[26]

பல்லியின் ஒலிப்பு இங்கு நன்னிமித்தமாகக் கருதப்பெற்றது. நல்லது நிகழும் என்ற நம்பிக்கை கொண்டிருந்தனர்.

பழக்க வழக்கங்கள், மரபுகள், சடங்குகள், நிமித்தங்கள், நம்பிக்கைகள் முதலியன சமுதாயத்தின் பண்பாட்டை வெளிப்படுத்தும் வாயில்களாக அமைந்தன. ஒவ்வொரு சமுதாயத்திற்கும் இவை தனித்தன்மை உடையனவாக விளங்குகின்றன.

# அடிக்குறிப்புகள்

1. க. காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.12
2. கலைக்களஞ்சியம், தொகுதி - 7, ப.30
3. எஸ்.பி. ஆதிநாராயண், மனித உள்ளம், ப.171
4. க. காந்தி, மு.கூ.நூ, பக்.13,14
5. திருக்குறள், 73
6. மேலது, 991
7. பாஸ்கல் கில்பர்ட், சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள், ப.234
8. வள்ளுவர் கண்ட மனிதன், Journal of Tamil Studies ப.60
9. க. காந்தி, மு.கூ.நூ, ப.15
10. அரசஞ்சண்முகனார், தொல்காப்பியப் பாயிரவிருத்தி, ப.184
11. லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார், தொல்காப்பியச் செல்வம், ப.97
12. ச. வையாபுரிப்பிள்ளை, தமிழர் பண்பாடு, ப.76
13. ச.வே. சுப்பிரமணியம், இலக்கணத்தொகை யாப்புப் பாட்டியல், ப.61
14. நன்னூல், நூற்பா, 388
15. தொல்காப்பியம், நூற்பா, 1591
16. க. காந்தி, மு.கூ.நூ, பக்.15,16
17. தொல்காப்பியம், நூற்பா, 1091

18. மேலது, 1088

19. மா. இராசமாணிக்கனார், தமிழர் நாகரிகமும் பண்பாடும், பக்.109,110

20. வி. சரசுவதி, சாதி அடிப்படைத் தாலாட்டு ஒப்பாரிப் பாடல்களில்

ஒற்றுமை வேற்றுமைகள், ப.242

21. மேலது, ப.243

22. வெ.அ. நாகரத்தினம், கோவை மாவட்ட அகமுடையார்

குலமரபும் பண்பாடும், ப.129

23. க.காந்தி, மு. கூ. நூ, ப.51

24. தே.ப. சின்னச்சாமி, கொங்கு வேளாளர் சடங்குகளில் பண்பாடு, ப. 51

25. மேலது, ப.103

26. அகநானூறு, 151 : 12 - 15

உடன்கட்டை ஏறுதல்

உயிர்ப்பலியிடுதல் – நரபலியிடுதல்

கொங்கு வேளாளர் குலகுரு – புலவர் – மாணிக்கி ஆகியோரை நியமிக்கும் வழக்கம்

பெண்ணைத் திருமணம் செய்து கொடுக்கும் பொழுது நிலம் வழங்குதல்

களரிப்பணம் வழங்குதல்

ஆநிரை கவர்தல் – மீட்டல்

கோவில்களில் மரியாதை செய்யும் வழக்கம்

புலவர் பட்டயம்

பட்டயங்களின் முடிப்பு

ஆவணங்களை எழுதியோர்

தமிழ்ப்பட்டயங்கள் – செப்பேடுகளில் தெலுங்கில் கையொப்பம் இடுதல்

# ஆவணங்கள் உணர்த்தும் அரிய பழக்கவழக்கங்கள்

மக்கள் பலர் கூடி வாழ்வது சமுதாயம் என்று அழைக்கப்படும். எல்லா இனத்தாரிடமும் பண்டு தொட்டே பழக்கவழக்கங்கள் இருந்து வருகின்றன.

"சமுதாயம் என்பது கால ஓட்டத்தின் ஒரு கட்டத்தையும் மானிட வாழ்க்கையின் ஒரு படிம நிலையையும் உள்ளடக்கிய ஒரு வரலாற்றுக்கூறு"[1] என்பர் அ.அ.மணவாளன்.

ஒரு சமுதாயத்தின் கடந்த காலப்பண்பாடு, பழக்கவழக்கங்கள் முதலியவற்றை அறிய, பல்வேறு வாயில்கள் உள்ளன. இலக்கியங்கள், கல்வெட்டுகள், செப்பேடுகள், பட்டயங்கள், நடுகற்கள் போன்றவை இவற்றுள் அடங்கும்.

ஒரு சமுதாயத்தின் பழக்கவழக்கங்களை நிகழ்காலச் சூழ்நிலையில் அறிதற்குக் கள ஆய்வுகள் உதவுகின்றன.

பழக்க வழக்கங்கள், சடங்குகள் முதலியன மாறாத் தன்மையுடையன என்று கூற இயலாது. அரசியல் சூழ்நிலை, பிற சமுதாயத்தாரின் தொடர்பு போன்றவற்றால் மாற்றம் நிகழ வாய்ப்புண்டு.

சங்க காலத்தில் தீ வலம் செய்து திருமணம் நடைபெற்றதாகச் சான்றுகள் கிடைத்தில. ஆரியக் கலப்பின் மிகுதியால், மாற்றம் நிகழ்ந்துள்ளது. சிலப்பதிகாரத்தில் கோவலன் – கண்ணகி திருமணம் எவ்வாறு நிகழ்ந்தது? "மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிட, தீ வலம் செய்து திருமணம் முடித்தனர்". இந்த மாற்றம் இன்று வரை

பல சமுதாயத்தினரிடையே நடைமுறையில் இருந்து வருகின்றது. ஆனால், ஒரு சில சமுதாயத்தில் தீ வலம் வராமல் சமுதாயப் பெரியவரே திருமணத்தை நடத்தி வைக்கின்றார். குறிப்பாகக் கொங்கு வேளாளர் திருமணங்களை அருமைக்காரரே நடத்தி வருகின்றார். மாறி வந்த பழக்கவழுங்கங்களும் உள்ளன.

"கொங்கு வேளாளர்கள் பிறப்பு முதல் இறப்பு வரை தமக்கெனத் தனிப்பட்ட பண்பாடு, நாகரிகம், பழக்க வழக்கம், சடங்கு – சீர் முதலியனவற்றைக் கொண்டுள்ளதால் அவர்கள் இம்மண்ணின் மைந்தர்கள் என்று கூறுவதே பெரிதும் பொருந்தும் என்பதை நாம் உணரலாம்"[2] என்பர் கா. அரங்கசாமி.

கொங்கு வேளாளக் கவுண்டர்களின் பழக்கங்களைக் கள ஆய்வின் மூலம் அறிய முடிந்தது. ஆவணங்கள் காட்டுகின்ற ஒரு சில அரிய பழக்கவழக்கங்கள் எந்த அளவுக்கு நிலைபேறு அடைந்துள்ளன – மாற்றம் பெற்றுள்ளன என அறிதல் ஆய்விற்குப் பெரும் பயன் நல்கும்.

## உடன்கட்டை ஏறுதல்

தொல்காப்பியர், கணவன் இறந்துபட்ட நிலையில் மனைவி தீப்பாய்ந்த செய்தியைச் சுட்டியுள்ளார்.

"நல்லோள் கணவனொடு நனியழல் புகீஇச்
சொல்லிடை யிட்ட பாலை நிலையும்" [தொல்.நூ.1025]

சங்க காலத்தே இப்பழக்கம் இருந்ததைப் புறநானூற்றால் அறிய முடிகின்றது. பூதப்பாண்டியன் இறந்தவுடன் பெருங்கோப்பெண்டு தீப்பாயுங்கால்,

"பெருந்தோட் கணவன் மாய்ந்தென வரும்பற
வள்ளித ழவிழ்ந்த தாமரை
நள்ளிரும் பொய்கையுந் தீயும்ஓ ரற்றே"[3]

என்று கூறினாள். சங்கம் தழுவிய காலத்திலும் இந்நிலை இருந்தமையை மணிமேகலை காட்டுகின்றது.

"காதல ரிறப்பிற் கனையெரி பொத்தி
ஊதுலைக் குருகின் உயிர்த்தகத் தடங்கா[து]
இன்னுயி ரீவர் ஈயா ராயின்
நன்னீர்ப் பொய்கையின் நளியெரி புகுவர்
நளியெரி புகாஅ ராயின் அன்பரோ[டு]
உடனுறை வாழ்க்கைக்கு நோற்றுஉடம் படுவர்".[4]

இடைக்காலத்திலும் இப்பழக்கம் இருந்துள்ளது.

முதல் இராசராச சோழனின் தாயார் வானவன் மாதேவியார், சுந்தரசோழர் இறந்த பொழுது உடன்கட்டை ஏறிய செய்தியைத் திருக்கோவலூர்க் கல்வெட்டால் அறிய முடிகின்றது.[5]

மூன்றாம் குலோத்துங்கன் கல்வெட்டு ஒன்றில் உடன்கட்டை ஏறிய செய்தி பேசப்படுகின்றது.[6]

கொங்கு வேளாளக் கவுண்டர் சமுதாயத்திலும் இப்பழக்கம் இருந்ததை, கண்ணகுலப் பட்டயத்தால் அறியமுடிகின்றது.

"கன்னிவாடி கண்ணகுலத் தலைவர் முத்துச்சாமிக் கவுண்டர் மரணமடைந்தார். இவருடைய மரணத்தை அறிந்த மனைவியர் காளியம்மாள், வேலம்மாள், சந்திராயி மூவரும் உடன்கட்டையேறி, தீப்பாய்ந்து உயிர்விட்டனர். தீப்பாய்ந்து உயிர்விட்டவர்கள் இவர்கள்

மட்டுமல்லர், பெண் கொடுத்த செல்லப்பக்கவுண்டர், பறைக்காளி, வஞ்சாள் மாறாள், தேவிடியாள் அங்கமுத்து, நல்லராண்டி மனைவியர் [சின்னம்மாள், உருமாயி], நாச்சாயம்மாள், நல்லா நாவிதன், வள்ளிப்பிள்ளை ஆகியோரும் தீப்பாய்ந்து உயிர்விட்டனர்”[7] முத்துசாமிக்கவுண்டர் மீது ஈடுபாடு கொண்டிருந்த தொழிலாளர்களும் உயிர்விடுத்த செய்தியை அறிகின்றோம்.

“கணவனுடன் மனைவி உடன்கட்டையேறும் வழக்கம் அரச மரபினரிடமும், மற்றவரிடமும் இருந்தமை பற்றிப் பண்டை இலக்கியங்களும், கல்வெட்டுகளும், செப்பேடுகளும் கூறியுள்ளன. வணிக மரபில் உடன்கட்டையேறும் வழக்கம் இருந்தமைக்கு ஆதிரை வரலாறே சான்று. ஆனால் வேளாளரிடம் [தீக்குளிக்கும்] உடன் கட்டையேறும் வழக்கம் இருந்தமை பற்றிய செய்திகள் இல்லை என்றுதான் கூறவேண்டும். ஆனால் கொங்கு நாட்டு ஆவணங்களில் வேளாளர், வேட்டுவர், நாவிதர், தேவரடியார், பறையர், பண்டாரத்தார் முதலிய சாதியினரிடையில் உடன்கட்டையேறும் வழக்கம் இருந்துள்ளது என்பது வியப்புக்குரிய செய்தி ஆகும். ஆளும் நிலைக்கு உயர்ந்தபின் அரச மரபினை, கொங்குக் குடிகள் மேற்கொண்டிருக்க வேண்டும்”[8] என்று மோகன்குமார் கருத்துரைப்பர். ஆனால் இற்றை நாளில் உடன்கட்டை ஏறித் தீப்பாயும் நிலை வேளாளரிடையே இல்லை. ஏனெனில் இது இந்திய அரசாலேயே தடை செய்யப்பட்டுள்ளது.

## உயிர்ப்பலியிடுதல் - நரபலியிடுதல்

தொல்காப்பியர் வாகைத்திணையுள் ‘அவிப்பலி’ என்ற ஒரு துறையைச் சுட்டுவர். போரில் வெற்றி பெறுவதற்காக, வீரன்

போர்த்தீயுள் தன்னையே அவியுணவாக வழங்குவான்,

"தொல்லுயிர் வழங்கிய அவிப்பலி யானும்"[9]

பலி கொடுக்கும் பழக்கம் தொன்று தொட்டு இருந்து வருகின்றமை இதனாற் புலனாகும்.

"உயர்பலி பெறூஉம் உருகெழு தெய்வம்"[10]

"கணங்கெழு கடவுட்கு உயர்பலி தூஉய்ப்
பரவினம் வருகஞ் சென்மோ"[11]

என்ற அடிகளால் சங்ககாலத்தே தெய்வங்களுக்கு உயிர்ப்பலி கொடுத்தமை பெறப்படும்.

முருகனுக்கு மறியறுத்து உயிர்ப்பலி கொடுத்ததைத் திருமுருகாற்றுப்படை சுட்டும்.

"சிறுதினை மலரொடு விரைஇ மறியறுத்து
வாரணக் கொடியொடு வயிற்பட நிறீஇ
யூரூர் கொண்ட சீர்கெழு விழவினும்"[12]

உயிர்ப்பலி, நரபலி கொடுக்கும் வழக்கம் கொங்கு வேளாளரிடமும் இருந்தமை பற்றி அறியமுடிகின்றது.

"கவைய நாட்டுப் பகுதியில் காணியாளர்களாக இருந்த புல்வேட்டுவர் ஒரு நாள் இரவு கவைய காளியம்மனுக்குக் காளியண்ணக் கவுண்டனின் தலையை வெட்டி நரபலி கொடுத்தனர். இச்செய்தி அறிந்த நயினா மன்றாடியார் புல்வேட்டுவரின் கூட்டத்தையே அழித்துவிட்டார்."[13]

குலதெய்வக் கோயில்களிலும் சிறு தெய்வக் கோயில்களிலும் உயிர்ப்பலி கொடுக்கும் வழக்கம் கொங்கு நாட்டில் இருந்து வருகின்றது. நரபலி கொடுக்கும் வழக்கம் நின்று விட்டது.

## கொங்குவேளாளர் குலகுரு - புலவர் - மாணிக்கி ஆகியோரை நியமிக்கும் வழக்கம்

கொங்குவேளாளர் இனத்தில் குலகுரு–புலவர்–மாணிக்கி மூவரையும் நியமித்து, அவர்களுக்கு அதிகாரபூர்வமான ஆவணம் எழுதியளித்துள்ளனர். குறிப்பிட்ட ஊர்களில் காணியாளராக உள்ள வேளாளர் குலகுருவை நியமித்து ஆவணங்கள் வடித்தளித்துள்ளனர். கொங்கில் குறிப்பிட்ட நில எல்லையிலுள்ள வேளாளர் தங்கள் திருமணத்தில் பால், பழம் சாப்பிட, புலவர்களை நியமித்ததற்கு ஆவணம் எழுதி வழங்கியுள்ளனர். கொங்கு 24 நாடுகளில் வசிக்கும் குறிப்பிட்ட குலத்தினர் ஓர் இடத்தில் ஒன்று கூடி, கொங்குப் புலவர் இனத்தில் ஒரு பெண்ணைத் தங்கள் குல மாணிக்கியாக நியமித்து ஆவணம் எழுதிக் கொடுத்துள்ளனர். புலவர்கள், மாணிக்கி, குலகுரு நியமனங்களைக் கொங்கு வேளாளர் 13 ஆவணங்கள் எழுதிக் கௌரவித்து உள்ளனர்.[14]

## பெண்ணைத் திருமணம் செய்து கொடுக்கும் பொழுது நிலம் வழங்குதல்

பூந்துறை நாட்டில் பிடாரியூரில் பொருள் தந்த குலத்தினர் சிலர் வாழ்ந்தனர். அவர்களில் செங்கோடக்கவுண்டர் என்பவர் தன் பெண் வேலம்மாளை வள்ளியறைச்சல் ஆந்தை குலம் குமார வேலப்ப கவுண்டருக்குத் திருமணம் செய்வித்துப் பிடாரியூரில் கால்காணி கொடுத்தனர்.[15]

ஈச்சங்கூட்டம் கூத்தக்கவுண்டர் மகள் வெள்ளைப் பழநியம்மாளைக் கருமாபுரம் வேலப்பக்கவுண்டருக்கு மணமுடித்துப் பிடாரியூரைக் காணியாகக் கொடுத்தனர்.[16]

"கொங்கு நாட்டில் ஆங்காங்கு ஆண்களுக்கும், பெண்களுக்கும் 'ஆல்பினோ' நோய் அக்காலத்தில் இருந்திருக்கிறது. இந்நோயுற்ற ஆண் மகனை 'வெள்ளைச்சாமி' என்றும் பெண்ணை 'வெள்ளையம்மாள்' என்றும் அழைப்பது வழக்கம். இந்நோய் கண்ட பெண்களுக்குத் திருமணம் தடைப்படும். இதனால் வெள்ளைப் பெண்ணைத் திருமணம் செய்து கொள்ளும் மணமகனுக்குச் சலுகையாக வெள்ளைப்பெண் பிறந்த குலத்தின் காணி உரிமையில் பங்கு கொடுக்கப்பட்டது."[17] என்று குறிப்பிடுவர்.

## களரிப்பணம் வழங்குதல்

"கொங்கு வேளாளர் திருமண வீடுகளில் திருமணம் முடிந்த பின்னர், தம்மைச் சார்ந்து வாழும், பணிசெய் குடிகளுக்கு அன்பளிப்புக் கொடுக்கும் வழக்கம் உள்ளது. அது 'களரிப்பணம் வழங்குதல்' என்று கூறப்படுகின்றது. சக்கரைக்கத்தி, மங்கலன் [நாவிதர்], ஏகாலி [வண்ணார்], பூசாரி, மாலைகட்டி, புலவர் ஆகிய பலருடன் 'மாணிக்கி' மகளிரையும் அழைத்து அன்பளிப்பு வழங்குவர். இன்று மாணிக்கிப் பெண்கள் எவரும் இல்லை. அப்பெண்ணுக்குரிய பணத்தைத் தனியாக வெற்றிலை பாக்கில் எடுத்து வைப்பர் அல்லது பிற குடிபடைக் குடும்பத்துப் பெண்கள், தம் முந்தானையை ஏந்தி வாங்கிக் கொள்வர்."[18]

## ஆநிரை கவர்தல் - மீட்டல்

தொல்காப்பியர் ஆநிரை கவர்தல் – மீட்டல் குறித்து, வெட்சித் திணையுள் பேசுவர். சங்க காலத்தும் இது தொடர்ந்து இருந்தது. நிரை கவர்தல், நிரை மீட்டல் மன்னர்களுக்கு இடையே நடந்தது. கொங்கு நாட்டில் இவ்வழக்கம் இருந்ததை அறிய முடிகின்றது. திருமலை நாயக்கர் ஆட்சியில் பூந்துறை நாட்டை நிருவாகம் செய்து வந்தனர் வெள்ளை வேட்டுவனும், பெரிச்சி மூப்பனும். வல்லிபுரத்தில் வெள்ளாளரில் சாத்தந்தை குலத்தைச் சார்ந்த பெரிய கவுண்டனைக் கொலை செய்து அவனது ஆநிரைகளை வெள்ளை வேட்டுவனும், பெரிச்சி மூப்பனும் கவர்ந்து சென்றனர். பெரியண்ணக் கவுண்டனின் மகன் முத்துக்கவுண்டன் ஆநிரையைக் கவர்ந்து சென்ற இருவரையும் பற்றி மன்னரிடம் முறையிட்டார். மன்னரிடம் படைபெற்ற முத்துக்கவுண்டன், இருவரையும் பற்றி, வெட்ட முற்பட்டான். இருவரும் தாம் நிருவாகம் செய்த கிராமங்களை முத்துக் கவுண்டனுக்குக் கொடுத்தனர்.[19] மன்னர்களாக இல்லாவிட்டாலும் நிருவாகம் செய்தவர்களிடையே கருத்து வேறுபாடு காரணமாக நிரை கவர்தல் நிகழ்ந்துள்ளது. உரியவர் அவரவர் நிரைகளை மீட்டுள்ளனர். இன்று இவ்வழக்கம் நிகழுமாறில்லை.

## கோவில்களில் மரியாதை செய்யும் வழக்கம்

கோவில்களில் திருவிழாக் காலங்களிலும் மற்ற சிறப்பு நாட்களிலும் இறைவழிபாடு முடிந்த பிறகு, கோவில் அருச்சகர் உரிமைதாரர்களுக்குப் பரிவட்டம் கட்டி, காளாஞ்சி கொடுத்து மரியாதை செய்வர். இதற்கென்று தனிவரிசை முறைப்படி உள்ளது.

இந்த மரபை மாற்றிச் செய்யக்கூடாது. இது தொன்று தொட்டு இருந்து வரும் வழக்கம். இன்றும் நடைமுறையில் இருந்து வருகின்றது.

கொங்கு நாட்டு வேளாளக் கவுண்டர்களிடமும் இம்மரபு நிகழ்ந்து வந்துள்ளது. குறுப்புநாட்டுப்பட்டயம் இது தொடர்பான செய்தியைச் சுட்டுகின்றது. "குறுப்பு நாட்டுக்குரிய கொங்கு வேளாளக்கவுண்டரில் முதல் காணியாளர்கள் எழுமாத்தூர்ப் பனங்காடை குலத்தினர். இரண்டாவது காணியாளர்கள் பொருளந்தை, பெரியன், வெண்டுவன், கண்ணந்தை, செல்லன், சாத்தந்தை, ஓதாளன் குலத்தினர். மூன்றாவது காணியாளர்கள் படைத்தலைக் கவுண்டர்கள். விசயமங்கலம் விசயபுரி அம்மன் கோயிலிலும் ஊத்துக்குளி கதித்தாசலர் கோயிலிலும் இதே வரிசையில் உரிமைகள் அளிக்கப்படும். இது குறுப்பு நாட்டவர் 32 ஊரவரும் கூடிச் செய்த முடிவாகும்."[20]

நஞ்சத் தலையூர் அருகில் இருக்கும் பெரிய திருமங்கலம் என்ற ஊரில் அருங்கரை அம்மன் திருக்கோவில் உள்ளது. இத்தெய்வம் வெண்டுவன், பண்ணை, பனையன் கூட்டத்தாருக்குரிய குல தெய்வமாகும். இங்கு முதலில் பூசை செய்யப்படுவது வெண்டுவன் கூட்டத்தாருக்கே. பின்னரே பண்ணை, பனையன் கூட்டத்தாருக்குப் பூசை செய்யப்படும். காரணம், வெண்டுவன் கூட்டத்தினர் இக்கோவிலின் முதல் காணியாளர்கள், பண்ணை கூட்டத்தினர் இரண்டாவது காணியாளர்கள், பனையன் கூட்டத்தினர் மூன்றாவது காணியாளர்கள். இது போன்றே ஒவ்வொரு கூட்டத்தாருக்கும் ஒவ்வொரு கோயிலில் மரியாதை செய்யப்படுகிறது. வெண்டுவன்

குலத்தினர் தங்கள் பெண்களை, பண்ணை, பனையன் கூட்டத்தினருக்குத் திருமணம் செய்வித்துக் காணி உரிமை அளித்தனர். அதனால் அவர்களுக்கு இக்கோவில் உரிமை வழங்கப்பட்டது.[21]

## புலவர் பட்டயம்

பிற சமுதாயத்தாரிடம் காணப்பெறாத அரிய வழக்கம் கொங்கு வேளாளக் கவுண்டர்களிடம் நீண்ட நாட்களாக இருந்து வந்துள்ளது. கொங்கு 24 நாட்டுக்கும் வேறு வேறு புலவர்கள் நியமிக்கப்பெற்றனர். திருமண வீடுகளில் இப்புலவர்கள் திருமண வாழி பாடி மணமக்களை வாழ்த்துவர். இது புலவர் வாழ்த்து எனப்படும்.

தென்கரை நாடு, அண்ட நாடு, தென் பொங்கலூர் நாடு ஆகிய இந்த மூன்று நாடுகளுக்கும் திருவேல் புலவன், திருவாவினங்கொடிப் புலவன், செல்லக்குமாரப் புலவன், மங்கல நாதப்பட்டன் ஆகிய நால்வரும் புலவர்களாக நியமிக்கப்பெற்றனர். பொங்கலூர் நாடு, வாரக்கனாடு, ஆனைமலை நாடு ஆகிய மூன்று நாடுகளுக்கும் பசுபதி கூட்டத்தில் அனந்தபட்டன், அகத்தி கூட்டத்தில் சந்திரப்பட்டன், செங்குந்த குலத்தில் பிரமபட்டன், பூங்கோதிப்பட்டன் ஆகிய நால்வரும் புலவர்களாக நியமிக்கப்பெற்றனர்.

இது போன்று பிறநாட்டுக்கும் புலவர்கள் நியமிக்கப்பெற்ற செய்தி புலவர் பட்டயத்தில் விரிவாக எடுத்துரைக்கப்பெறுகின்றது.[22] ஆனால் புலவர் வாழ்த்து இன்று மறைந்து வருகின்றது. புலவர்பாடும் வாழ்த்தினை, கொங்கு நாவிதனே பாடி வருகின்றான்.

'கொங்குப் புலவர்கள் திருமணங்களில் பெற்ற வெகுமதிகளும் மேற்படி பட்டயத்தில் விரிவாக இடம் பெற்றுள்ளன. இறுதியில் கொங்கு நாட்டுக் கவுண்டர்களும் சாட்சிக் கையொப்பமிட்டுள்ளனர்.'[23]

இப்புலவர் வாழ்த்து ஈரோடு, கரூர் மாவட்டங்களில் உள்ள கிராமங்களில் இன்றும் நடைமுறையில் உள்ளது. ஆனால், தற்போது இவ்வழக்கம் திண்டுக்கல் மாவட்டத்தில் நடைமுறையில் இல்லை.

## பட்டயங்களின் முடிப்பு

கொங்குநாட்டுப் பட்டயங்களை ஆராயுங்காலத்து, அவர்களிடையே நிலவிய பழக்கம் புலனாகின்றது. பட்டயத்தை எழுதிச் சாட்சிக்கையொப்பம் இட்டபிறகு பட்டயத்தை முறையாக நிறைவேற்ற வேண்டும் என்பதற்காக எழுதப்பெற்ற முடிப்புரைகள் கவனிக்கத்தக்கன.

"யிதுக்கு விகாதம் பண்ணாமல் நடப்பிவயித்த பேர்கள் புத்திர பவுத்திரராய் பாரம்பரமாய்ச் சந்திராதித்தருள்ள வரைக்கும் சாலோக சாமீப சாறுபச் சாயுச்சியம் பதம் உண்டாய் காஞ்சிபுரத்தில் காமாட்சியம்மனும் யேகாம்புரநாதருடைய கடாட்சத்து நாலேயும் நச்சேந்திரக்கிளை போலவும் விளங்கி வாள்வார். யிதுக்கு விகாதம் பண்ணின பேர்கள் கெங்கைக் கரையிலே காறாம் பசுவைக்கொன்ற தோஷத்திலே போகவும், மாதா பிதாவைக் கொன்ற தோஷத்திலே போகவும், குருவைக் கொன்ற தோஷத்திலே போகவும் இந்தத் தருமத்தைப் பரிபாலினம் பண்ணி நடப்பிவித்த பேர்கள் புத்திர பவுத்திரர் அசுவமேதியாகம் பெறுவாள்"[24] பட்டயங்களில் மட்டுமின்றிச் செப்பேடுகளிலும் இம்முறை காணப்பெறுகின்றது.

"இதுக்கு யாதாமொருவர் யிடம்கேடு நினைத்தால் வம்மிசம் கறையத்து போவார்கள். தந்தாயைக் கொன்ற பாவத்தை யடைவாற்கள். குருவைக் கொன்ற பாவத்திலே போவாற்கள். காசி, கெங்கைக் கரையில் காறாம் பசுவைக் கொன்ற பாவத்தில் போவார்கள்"[25]

## ஆவணங்களை எழுதியோர்

கொங்கு நாட்டு ஆவணங்களை, பட்டயமாக இருந்தாலும், செப்பேடாக இருந்தாலும் எழுதியவர் இன்னார் என்ற விளக்கம் ஒவ்வொன்றின் அடியிலும் தெளிவாக இடம்பெற்றுள்ளது.

"யிது எழுதினவன் காரையூர் தலத்துக்கு கணக்கு நல்லயபிள்ளை மகன் சடையன் பிள்ளை கையெழுத்துஉ"[26]

"இந்த சிலா சாசனம் எழுதினது காசித் தட்டான். உ. சிவமயம். மண்மங்கலம் கிராமத்தில் காளியம்மன் கோவிலுக்கு வெள்ளாச்சாரி குலத்துக்கு ராச முப்பாடு, கோயில் முப்பாடு குடுத்ததுக்குச் சாட்சி சல்லி காளத்திக் கவுண்டர், வராக வேட்டுவன் கண்டிக் கவுண்டன் இத்தாதி பேர் சாட்சி. இந்தப் பட்டயம் உப்பிலிய நாயக்கன் வசம் மூனுபட்டயம் நாட்டார் ஒப்பி வச்சிருக்கிறோம்."[27]

## தமிழ்ப்பட்டயங்கள் - செப்பேடுகளில் தெலுங்கில் கையொப்பம் இடுதல்

கொங்குநாடு நாயக்கமன்னர்களின் ஆளுகைக்கு உட்பட்டிருந்தது. நாயக்க மன்னர்கள் காலத்தில் எழுதப்பெற்ற பட்டயங்களும் செப்பேடுகளும் பலப்பல. செய்திகள் தமிழில்

எழுதப்பட்டிருந்தாலும், இறுதியில் தெலுங்கு மொழியில் கையொப்பம் இடும் வழக்கம் நிலவி வந்துள்ளது. இது ஆட்சியாளர் தாக்கத்தால் ஏற்பட்ட பழக்கமாகும்.

கொங்கு நாட்டு ஆவணங்களால் அறியலாகும், பல பழக்க வழக்கங்கள் இன்று நடைமுறையில் இல்லை.

உடன்கட்டை ஏறுதல், தீப்பாய்தல், நரபலி கொடுத்தல், ஆநிரை கவர்தல் இத்தகைய பழக்க வழக்கங்களை ஆவணத்தால் மட்டுமே அறியமுடியுமே தவிர கள ஆய்வினால் அறியற்பாலன அல்ல.



# அடிக்குறிப்புகள்

1. அ.அ.மணவாளன், தமிழாய்வு II, கட்டுரை,
2. க. அரங்கசாமி, பூந்துறை நாட்டுக் காடகூட்ட
   கொங்கு வேளாளர் வரலாறு, ப.54
3. புறநானூறு, 246 : 13 - 15
4. மணிமேகலை, ஊரலருரைத்த காதை, 44 - 49
5. S.I.I. VII, No. 863
6. Madras Epigraphical Report, 1560 & 1906
7. புலவர் செ. இராசு, மு.கூ.நூ, கண்ணகுலப்பட்டயம், ப.83
8. பெ.கு.சாந்தகுமார், கொங்கு வரலாற்று ஆவணங்களில்
   சமுதாய வாழ்க்கை, ப.88
9. தொல்காப்பியம், நூற்பா, 1022
10. அகநானூறு, 166 : 7
11. நற்றிணை, 358 : 6,7
12. திருமுருகாற்றுப்படை, 218-220
13. பிற்சேர்க்கை ஆவணம் 10, மசக்காளிப் பட்டக்காரர் பட்டயம், ப.33
14. புலவர் செ. இராசு, மு.கூ.நூ, ஆ. எண், 12,13,14,15,16,17,18,20,23,25
    மேலது, பி.சே. ஆ. எண், 3,4,5
15. மேலது, பிடாரியூர்ப்பட்டயம், ப.22
16. மேலது, ப.22
17. பெ.கு.சாந்தகுமார், மு.கூ.நூ, ப.81
18. புலவர் செ. இராசு, மு.கூ.நூ, பதிப்பாசிரியர் உரை, ப.XI

19. மேலது, பூந்துறை நாட்டுப்பட்டயம், பக்.30-32

20. மேலது, குறுப்பு நாட்டுப்பட்டயம், ப.40

21. ப.ச.பழனிச்சாமி அவர்கள் அளித்த பேட்டி, நாள் : 13.6.2000

22. மேலது, கொங்குப் புலவர் பட்டயம், பக்.33-37

23. மேலது, பக்.38,39

24. மேலது, ப.39

25. மேலது, வரகுண்ணாப் பெருங்குடிச் செப்பேடு, ப.115

26. மேலது, காஞ்சிபுரம் மடத்துப் பட்டயம், ப.109

27. மேலது, தென்னிலைச் செப்பேடு I, ப.142

# கொங்குவேளாளக் கவுண்டர்களின் பழக்கவழக்கங்கள்

கொங்கு வேளாளக் கவுண்டர்களுடைய பழக்க வழக்கங்கள் எல்லா மாவட்டங்களிலும் ஒத்துக் காணப்படுகின்றன. கொங்கு வேளாளக் கவுண்டர்களுடைய பழக்க வழக்கங்கள் குறித்து ஆய்வாளர்களும், நூலாசிரியர்களும் தம் படைப்புகளில் ஆங்காங்கே சுட்டிச் சென்றாலும், அவற்றின் முழுமை கருதி இவ்வியலில் முழுமையாகவும், விரிவாகவும் சுட்டப் பெறுகின்றன. இவ்வியலில் சுட்டப்பெறும் பழக்க வழக்கங்கள், பல மாவட்டங்களிலும் வாழும் வேளாளக் கவுண்டர்களுடைய பழக்க வழக்கங்களோடு ஒத்துக் காணப்பெறுதல் இயல்பே. சில மாவட்டங்களில், அடுத்துள்ள மாவட்டத்தாரின் தாக்குதலினால், பிற இனத்தாரின் செல்வாக்கினால் ஒரு சில பழக்கவழக்கங்கள் மாறுபட்டுக் காணப்பெறுதல் இயல்பினும் இயல்பே. கொங்கு வேளாளக் கவுண்டர்களுடைய பழக்கவழக்கங்கள், ஆவணங்களாலும், பிற வரலாற்றுச் சான்றுகளாலும் அறியப்படுவன இன்று நடைமுறையில் இல்லை. இவை 'ஆவணங்கள் உணர்த்தும் அரிய பழக்க வழக்கங்கள்' என்ற தனித்தலைப்பில் சுட்டப் பெற்றுள்ளன.

திண்டுக்கல் மாவட்டத்தின் அமைப்பு குறிப்பிடத்தக்கது. இம்மாவட்டம் வடபகுதியில் ஈரோடு மாவட்டமும், வடகிழக்கில் கரூர் மாவட்டமும், கிழக்கில் சிவகங்கை மாவட்டமும், தென்கிழக்கில் மதுரை மாவட்டமும், தெற்கில் தேனி மாவட்டமும், மேற்கில் கோவை மாவட்டமும் சூழப்பெற்ற மாவட்டமாகும். பல மாவட்டங்களின்

பண்பாட்டுத் தாக்கத்தால் திண்டுக்கல் மாவட்டம் தனித்தன்மை பெறுகின்றது. இதனால் திண்டுக்கல் மாவட்டத்தில் வேளாளக் கவுண்டர்களின் பழக்கவழக்கங்களில் ஏற்பட்ட மாற்றங்கள் 'இற்றைநாள் மாற்றங்கள்' என்ற தனி இயலில் ஆராயப்பெற்றுள்ளன. பொதுவான பழக்கவழக்கங்கள் இவ்வியலில் இடம்பெற்றுள்ளன.

# கருவுற்றது தொடங்கி குழந்தை பிறக்கும்வரை உள்ள நிகழ்வுகள்

திண்டுக்கல் மாவட்டக் கொங்கு வேளாளக் கவுண்டர்களின் பழக்கவழக்கங்கள் – சடங்குகள் பற்றி இவ்வியலில் கூறப்படுகின்றன.

மற்றைப் பகுதிகளில் வாழும் கொங்கு வேளாளக் கவுண்டர்களின் சடங்குகள், திண்டுக்கல் மாவட்டக் கொங்கு வேளாளக் கவுண்டர்களின் சடங்குகளோடு மிகுதியும் ஒற்றுமை உடையனவாகக் காணப்படுகின்றன.

பாண்டியன் அறிவுடை நம்பி, மக்கள் பெறும் பேறுகளிலேயே மிகச்சிறந்தது 'மக்கட்பேறு' என்கிறார். அதனை,

"படைப்புப்பல படைத்துப் பலரோ டுண்ணும்
உடைபெருஞ் செல்வ ராயினு மிடைப்படக்
....... ....... .......
....... ....... .......
....... ....... .......
மயக்குறு மக்களை யில்லோர்க்குப்
பயக்குறை யில்லைத் தாம்வாழு நாளே"[1]

என்று குறிப்பிடுகின்றார்.

ஒரு பெண்ணுக்குக் கருத்தரித்தல் தொடங்கி, குழந்தை பிறக்கும்வரை, கொங்கு வேளாளக் கவுண்டர்களின் சமூகத்தில் மூன்று சடங்குகள் முன்னர் வழக்கத்தில் இருந்தனவாக அறிய முடிகின்றது. இவை முறையே ஐந்து, ஏழு, ஒன்பதாம் திங்கள்களில் நடத்தப்பட்டு வந்துள்ளன.

ஐந்தாம் திங்களில் நடைபெறும் சடங்கிற்கு 'ஐந்திற்கு இடுதல்' என்று பெயர். ஒரு பெண் கருவுற்ற மூன்று மாதம் வரை, அக்கரு இயற்கையாகவோ, செயற்கையாகவோ அழிந்துபட வாய்ப்பு உண்டு. ஆனால் ஐந்துமாதம் நிறைவுறும் நிலையில் அக்கருவினை எதுவும் செய்ய முடியாது. கருவானது ஓரளவிற்கு வளர்ச்சி பெற்ற நிலையில் இருக்கும். ஆகவேதான் இதற்கென்று ஒரு சடங்கினை வைத்து உறுதிப்பாடு செய்கின்றனர். இதை மகிழ்வாகக் கொண்டாடக்கூடிய நிலையில் 'ஐந்திற்கு இடுதல்' என்ற இந்நிகழ்ச்சி தோன்றியிருக்கக் கூடும் என எண்ணத் தோன்றுகிறது.

ஏழாம் திங்களில் நடத்தப்பெறும் மங்கல நிகழ்ச்சி சூல், சூல்பண்டம், சீமந்தம், பூ முடித்தல் என்று பல பெயர்களால் அழைக்கப்படுகிறது. 'வளைகாப்பு' என்றும் சொல்லப்படுகிறது. வேப்ப ஈர்க்குகளை வளைத்துப் பின்னி அதனைக் காப்பாகக் கைகளில் அணிவிப்பர். வேம்பு ஒரு கிருமி நாசினி. இதனால் காத்து, கறுப்பு போன்ற தீயசக்திகள் அணுகாது என்று மக்கள் நம்புகின்றனர். வளை அணிந்து காத்தலின் வளைகாப்பு என்ற சொல் வந்திருக்கக் கூடும் என எண்ணத் தோன்றுகிறது.

ஒன்பதாம் திங்களில் நடத்தப்பெறும் நிகழ்ச்சிக்குக் 'கட்டுச் சோற்று விருந்து' என்று பெயர். அன்றைய நாளில் ஊர்விட்டு ஊர் செல்ல மாட்டு வண்டியைத் தவிர, மற்ற எந்தப் போக்குவரத்து வசதியும் கிடையாது. அப்போது மாப்பிள்ளை ஊரிலிருந்து பெண்ணின் ஊருக்குச் செல்ல ஓரிரு நாட்கள் ஆகும். ஆதலால் புளிச்சோற்றை வாழை இலையில் வைத்து, ஒரு துணியில் கட்டி எடுத்துச்

செல்வார்கள். இரண்டு நாட்கள் ஆனாலும் புளிச்சோறு கெடாமல் இருக்கும். ஊர் சேர்வதற்குள் மரத்தடியில் இச்சோற்றினை உண்டு இளைப்பாறி விட்டுச் செல்வர். அதிலிருந்துதான் கட்டுச்சோறு என்பது வந்திருப்பதாக எண்ணப்படுகிறது.

இவ்விருந்திற்குப் பெண்வீட்டார் உறவினர்களையும், விருந்தினர்களையும் அழைக்க வேண்டும். மஞ்சள் அல்லது பசுஞ்சாணத்தில் பிள்ளையார் பிடித்து வைத்து, அதன்முன் மூன்று அல்லது ஐந்து விதமான சோற்று வகைகள் – புளிச்சோறு, எலுமிச்சைச்சோறு, தக்காளிச்சோறு, மாங்காய்ச்சோறு, தேங்காய்ச்சோறு என ஒவ்வொன்றாகத் தனித்தனி மட்டைகளில் கட்டி வைப்பர். அருகில் பூ, வளையல், தேங்காய், பழம், வெற்றிலைப்பாக்கு, மஞ்சள், வெல்லம், பழங்கள், இனிப்புகள் போன்றவைகளும் வைக்கப் பட்டிருக்கும். பிள்ளையாருக்கு நீர் விளாவி, சாம்பிராணிப் புகை காட்டி, சூடம் ஏற்றி வழிபடுவர். கருவுற்ற பெண் அவ்விடத்தில் அமர்ந்திருப்பாள். அவளுக்குத் திருநீறு, பொட்டு இடுவர். சாமி கும்பிட்டபின், முதலில் வளையலை அத்தை, மாமியார் முறை உள்ளவர்கள் ஐந்து பேரோ, ஏழுபேரோ அப்பெண்ணுக்கு அணிவிப்பார்கள். அதன்பின் அங்கு இருக்கக்கூடிய அனைத்துப் பெண்களுக்கும் வளையல் கொடுப்பார்கள். இச்சடங்கிற்குச் சுமங்கலிப் பெண்களை மட்டுமே அழைப்பார்கள். வளையல் அணிந்த பின் மட்டைகளில் உள்ள சோற்றை அப்பெண் உண்ண வேண்டும். அவளோடு, கூட அமர்ந்து அவளது கணவனுக்கும் விருந்தளிப்பர். பின்பே மற்றவர்களுக்கு விருந்திடுவர். இச்சடங்கிற்கு வரும் உறவினர்கள் விருந்து கொண்டு

வருவர். [அரிசி, பருப்பு, சர்க்கரை, பழம், வெற்றிலை, பாக்கு] விருந்து முடிந்தபின் அப்பெண் அனைத்துப் பெரியவர்களின் பாதங்களையும் தொட்டு வணங்கி வாழ்த்துப் பெறுவாள். நல்ல நேரம் பார்த்து, பெண்ணை, அவளது தாய் வீட்டிற்கு அழைத்துச் செல்வர். அப்போது அவ்வூரிலுள்ள பிள்ளையாரை வழிபடுவர்.[2]

பெருங்கதைக் காப்பியத்தில் வாசவதத்தை கருவுற்றது தொடர்பான செய்தி இடம்பெற்றுள்ளது. சாதாரண நாளில் வாசவதத்தைக்கு அவர் பெற்றோர் சீர் கொண்டு வரும்போது ஏற்றுக்கொள்ள வேண்டாம் என்று சொல்லும் உதயணன், வாசவதத்தை கருவுற்றிருக்கும் சமயத்தில் அவள் பெற்றோர் கொண்டு வரும் சீரை ஏற்றுக்கொள்கிறான். இதுமட்டுமல்லாமல் வாசவதத்தைக்கு எல்லா இடங்களையும் சுற்றிக் காண்பிக்கிறான். கருவுற்றிருக்கும் நேரத்தில் மனைவி மகிழ்வாக இருக்க வேண்டும் என்பதற்காகவே இவ்வாறு செய்கிறான்.

இச்சடங்கு பிள்ளைப்பேற்றினை வரவேற்கக் கூடிய மனப்போக்கினையே காட்டுகிறது. பெண்ணின் ஓய்விற்காகவும், மகிழ்ச்சிக்காகவும் ஏற்படுத்தப்பட்டது. உடற்கூறுபடியும், மனக்கூறுபடியும் ஓய்வு தேவை. அதற்காகவே ஏற்படுத்தப்பட்ட ஒன்று. ஒரு பெண்ணுக்குப் புகுந்த வீட்டில் எவ்வளவுதான் வசதிகளும், மகிழ்ச்சியும் இருந்தாலும், தாய்வீட்டில் வசதி குறைவாகவே இருந்தாலும், பெண்ணுக்குத் தாய்வீடே இன்ப உலகம் ஆகும். தனக்கிருக்கும் மனக்குறை, மற்ற செய்திகள் எல்லாவற்றையும் தன்

தாயிடத்தில்தான் மனந்திறந்து பேசுவாள். தாயும் அவளைப் பரிவோடும், அன்போடும் மகிழ்வாக வைத்துக் கொள்வாள். ஆகவேதான் பெண் கருவுற்றாள் எனில், அவளைத் தாய் வீட்டிற்கு அனுப்பும் வழக்கம் வந்தது. அப்பெண் மன நிறைவாகவும், மகிழ்ச்சியாகவும் இருந்தால்தான் குழந்தை குறையில்லாமல் பிறக்கும், வளரும்.

## அ. பிறப்புத் தொடர்பின (இளமை)

பிறப்பு

பெயர் வைத்தல்

குளியூட்டுச்சீர்

முடி இறக்குதல்

காது குத்துதல்

கல்வித் தொடக்கம்

பச்சை குத்துதல்

பூப்புனித நன்னீராட்டல்

# பிறப்புச் சடங்குகள் (இளமை)

## பிறப்பு

கருவுற்ற பெண்ணின் உடல் நலத்தை, குழந்தைப் பிறப்பிற்கு முன்னும் பின்னும் கொங்கு நாவிதனின் மனைவியே மிகக் கவனமாகப் பார்த்துக் கொள்கின்றாள். குழந்தை பிறந்து, அப்பெண் தனது கணவன்வீடு செல்லும்வரை தாயையும், சேயையும் செவிலியாக இருந்து கவனித்துக் கொள்கிறாள். கணவன் வீட்டிற்குச் செல்லும்முன் முந்தின நாள், நாவிதனின் மனைவி (மருத்துவச்சி)க்கு உரிய பரிசுகளைப் பெண்ணின் பெற்றோர் கொடுத்து அனுப்பி வைப்பர்.

குழந்தை பிறந்தவுடன், அந்த அறை தீட்டுள்ளதாக (மாசுற்றதாக)க் கருதப்பட்டு, தாய், சேய், மருத்துவச்சி மூவரையும் தவிர வேறு எவரையும் அறையினுள் அனுமதிப்பதில்லை. குழந்தை பிறந்தவுடன் இந்தச் செய்தி வண்ணான் மூலமாகக் கணவன் வீட்டிற்குத் தெரியப்படுத்தப்படுகிறது. குழந்தை பிறந்த ஏழாவது அல்லது ஒன்பதாவது நாள் குழந்தை பிறந்த அறையைத் தூய்மைப்படுத்திய பின்னரே உறவினர்கள் அந்த அறையினுள் செல்வர். இதுபோன்ற நிகழ்ச்சி சிலப்பதிகாரத்தில் இடம் பெற்றுள்ளது. இளங்கோவடிகள்,

"மாந்தளிர் மேனி மாதவி மடந்தை
பால்வாய்க் குழவி பயந்தன ளெடுத்து
வாலா மைந்நாள் நீங்கிய பின்னர்"[3]

என இத்தீட்டு நாட்களை வாலாமை நாள் எனக் குறிப்பிடுகிறார்.

ஒன்பதாவது நாள் பெண்ணின் மாமியார் அரிசி, பருப்பு, கருப்பட்டி, சுக்கு, மிளகு, நெய் போன்ற சீரைக் கொண்டு வருவார். குழந்தை பிறந்ததிலிருந்து மூன்று மாதம் வரைக்கும், சுக்கு, மிளகு, பனங்கருப்பட்டி போன்றவைகளைப் பொடி செய்து நெய்யுடன் கலந்து வைத்திருப்பர். இதனை அவளுக்குச் சாதத்துடன் உண்ணக்கொடுப்பர். இதனைச் சுக்குக் கருப்பட்டி அல்லது காயங்கருப்பட்டி என்று சொல்லுவர். பனங்கருப்பட்டி உடலுக்குக் குளிர்ச்சி தருவதோடு நோய் தீர்க்கும் தன்மையும் கொண்டது. எனவே இது தாயின் உடல்நலத்திற்குச் சிறந்த உணவு.

தாயின் உடல்நலத்திற்காக உறவினரும், சுற்றத்தாரும் குழந்தை பிறந்து மூன்று, ஐந்து, ஏழு, ஒன்பதாம் நாட்களில் வெந்நீர் கொண்டு வருவர். அந்நீரைத் தாயின் வயிற்றில் அடித்து ஊற்றுவர். இது கருப்பை சுருங்குவதற்காகவும், வயிற்றிலுள்ள கசடுகள் வெளியேறுவதற்காகவும் செய்யப்படுவது. அன்றைய நாளில் விறகடுப்பு வைத்து அனைத்தும் செய்ததினால் நிறைய வெந்நீரைக் காய்ச்சி, ஒருவரே ஊற்றவும் முடியாது என்பதற்காகவே இதனைச் செய்து வந்துள்ளனர்[4]. இப்போது, வேண்டிய வசதிகளும், மருத்துவ மனைகளும் வந்துவிட்டதால் இவ்வழக்கம் மறைந்துவிட்டது.

குழந்தை பிறந்து முப்பது நாட்கள் கழிந்தவுடன் தாயையும், குழந்தையையும் வீட்டினுள் அழைப்பர். இதற்கு 'ஊடு பூதரது' [வீடு புகுதல்] என்று சொல்லுவர். வீடு புகுதல் என்பது இலக்கிய வழக்காகும். ஆனால் இதுவே பேச்சு வழக்கில் 'ஊடு பூதரது' என்றாகி விட்டது.

## பெயர்வைத்தல்

முப்பதாம் நாள் நிகழ்ச்சியன்று வயதான ஒரு பெரியவள் குழந்தைக்குக் குலதெய்வத்தின் பெயரையோ, முன்னோர்களின் பெயரையோ, குழந்தையைக் கையில் எடுத்து வைத்து மூன்று தடவை சொல்லுவாள். இதனையே கந்தபுராணமும்,

"மூத்து நரைமுதிர்ந்த மூதாளர் வந்தீண்டிப்

..................................................

வாய்த்த இவள்நாமம் வள்ளியெனக் கூறினரே"[5]

எனக் குறிப்பிடுகிறது.

விநாயகர் கோவிலுக்கு எடுத்துச்சென்றும் பெயர் வைப்பர். இந்நிகழ்ச்சியன்று உற்றார், உறவினர்களை அழைத்து விருந்து இடுவர். இந்நிகழ்ச்சி பற்றிச் சிலப்பதிகாரத்திலும்,

"எங்குல தெய்வப் பெயரீங் கிடுகென
அணிமே கலையார் ஆயிரங் கணிகையர்
மணிமே கலையென வாழ்த்திய ஞான்று"[6]

என்று கூறப்படுகின்றது.

## குளிப்பூட்டுச்சீர்

முதல் குழந்தைக்கு மட்டுமே இச்சீர் உரியது. குழந்தை பெற்ற பெண்ணின் தாய்வீட்டில் இச்சீரைச் செய்கின்றனர். இச்சீர் முடிந்த பின்னரே அப்பெண், கணவன் வீட்டிற்கு அழைக்கப்பெறுவாள். இச்சீருக்கு முன்வரை தாயும் சேயும் ஒரு தனி இடத்தில் [தனி அறை] தங்க வைக்கப்படுவர்.

குழந்தை பிறந்தவுடன் குழந்தையின் தந்தைவழி உறவினரே முதன்முதலில் குழந்தையின் வாயில் தேனைத் தொட்டு வைப்பார். அக்குழந்தைக்கு, சீருக்கு முன்வரை, தாங்கள் உடுத்திய சேலைகளையே தொட்டிலாகக் கட்டுவர். தொட்டில் சங்கிலி போடப்படமாட்டாது.

குழந்தை பிறந்து மூன்றாம் மாதத்தில் மூன்றாம் பிறையில் இச்சீரைச் செய்வார்கள். பெண்கள் மட்டுமே மாலை ஆறு மணிக்குமேல் இச்சீரைச் செய்வர்.

மணலைக் கொட்டி, அதன்மீது கன்னிமார்சாமி [ஏழு வெங்கச்சாங்கற்கள்] வைப்பர். அவைகளுக்கு மஞ்சள் தடவி நீரூற்றுவர். திருநீறு, சந்தனம், பொட்டு இடுவர். அருகில் மண் விளக்கில் திரிபோட்டு எண்ணெய் ஊற்றி ஏற்றுவர். கருப்பு வளையல், பொட்டு, ஆவாரம்பூ, திருகு கள்ளி, தாழை மடல் போன்றவற்றையும் வைத்து, இலையில் படையல் போட்டிருப்பர். இவ்விடத்தில் தாய்க்கும், சேய்க்கும் தலைக்கு எண்ணெய் தேய்த்து, பின் பச்சைப் பயிற்றுப் பொடியைத் தேய்த்துக் குளிப்பாட்டுவர். குழந்தைக்கு மட்டும் உடம்பிற்கு 'துவலை'[7] தேய்த்துக் குளித்து விடுவர்.

பின் சாம்பிராணிப்புகை காட்டி, இருவருக்கும் கம்புமாவைச் சுற்றிப் போடுவர். இதன் பின்னர், சாமியை வழிபடுவர். குழந்தைக்குக் கருப்புப் பொட்டு வைத்து, கருப்புக்கயிற்றைக் கழுத்திலும், இடுப்பிலும் கட்டுவர். கருப்பு ஆகாதென்று சொல்லுபவர்கள் சிவப்புக்கயிற்றைப் பயன்படுத்துவர். கருப்பு வளையலைக் குழந்தைக்கு அணிவித்து மறுநாளில் இருந்து இவ்வளையலைத் தலைக்குக் குளிப்பாட்டும்

போதெல்லாம், ஒவ்வொன்றாக உடைத்து விடுவர். கன்னிமார் சாமிமுன் வைத்த படையலைக் கூடை வைத்து மூடிவிட்டு, மறுநாள் காலையில் பசுவிற்குக் கொடுத்து விடுவார்கள். சீர் முடிந்து இருவரையும் வீட்டிற்குள் அழைத்து, கிழக்கு முகமாக உட்கார வைத்துத் தேங்காய் உடைத்து, பழம் வைத்து, கற்பூரம் ஏற்றி, சாமியை வழிபடுவர்.

## தொட்டில் சீர்

மான்கொம்பைக் கட்டி அதில் தொட்டில் சங்கிலி மாட்டி, புதுத் தொட்டிவேட்டியைக் கட்டுவர். தொட்டிலில் முதலில் குழவிக்கல்லைப் போட்டு மூன்று தடவை ஆட்டிவிட்டுப் பின்னரே குழந்தையைப் போட்டு ஆட்டுவர்.[8] குழவிக்கல்லைத் தொட்டிலில் போடுவது, தொட்டில் அவிழ்ந்து விடுகிறதா, வலிமையாக உள்ளதா என்பதைச் சோதித்துப் பார்க்கவே அவ்வாறு செய்திருப்பார்கள் என எண்ண முடிகிறது.

இதன் பின்னரே தாய், படைப்பு உணவை உண்ணுவாள். பின்னர் அனைவருக்கும் விருந்திடப்படும். விருந்தில் ஆண், பெண் இருபாலாரும் கலந்து கொள்வர். இப்பெண் தாய்வீட்டில் இருந்தாலும், இச்சீரைக் கணவன் வீட்டாரே செய்ய வேண்டும். கணவன் வீட்டிலிருந்து அரிசி, பருப்பு, கருப்பட்டி, சுக்கு, மிளகு, நெய் தேங்காய், பழம், வெற்றிலை, பாக்கு, ஊதுபத்தி, சூடம் கொண்டு வருவர். இச்சீர் முடிந்தபின் கணவன் வீட்டார் இப்பெண்ணையும், குழந்தையையும் தங்கள் வீட்டிற்கு அழைத்துச் செல்வார்கள். இக்குளியூட்டுச் சீர் கொங்கு வேளாளர்க்கு உரியதாயினும், தற்போது

வழக்கொழிந்து விட்டது. மாறாக, பால வேளாளரிடத்தில் இன்றும் இச்சடங்கினைக் காணமுடிகிறது.

## ஆச்சி கொடுத்தல்

குளியூட்டுச்சீர் முடிந்தபின் பெண்ணின் பெற்றோர் ஆச்சி [பசுமாடு] மற்றும் தொட்டில் சங்கிலி, மான்கொம்பு முதலியவைகளையும் கொடுத்தனுப்புவர். தொட்டில் சங்கிலி முக்கியத்துவம் வாய்ந்தது. குழந்தையைப் படுக்க வைத்தால் தொட்டில் எப்படிச்சுற்றினாலும் ஒன்றும் ஆகாது. மான்கொம்பு, நோய் எதிர்ப்புச் சக்தியைக் கொடுக்கும். குழந்தைக்கும், தாய்க்கும் பால் வேண்டும் என்பதற்காகவே ஆச்சி கொடுக்கும் வழக்கம் வந்தது என அறியமுடிகிறது.

குழந்தைக்கு முடி இறக்குதல், காதுகுத்துதல், கல்வித் தொடக்கம் ஆகிய சடங்குகளைக் கொங்கு வேளாளர்கள் செய்து வருகின்றனர்.

## முடிஇறக்குதல்

முடி இறக்குதல் அல்லது மொட்டை போடுதல் சடங்கு, சமுதாயத்தில் எல்லா இனத்தாரிடத்தும் நிகழும் பொதுவான நிகழ்ச்சியே. இது கொங்கு வேளாளக் கவுண்டர்களிடத்தும் நடைபெறுகின்றது.

புறநானூற்றுப் பாடல்களும், 'புன்றலைப் புதல்வர்', 'புன்றலைச்சிறார்'[9] எனக்குறிப்பிடுகின்றன.

திருநாவுக்கரசர் புராணமும்,

"மருணீக்கி யார்சென்னி மயிர்நீக்கு மணவினையுந்
தெருணீர்ப்பன் மாந்தரெலா மகிழ்சிறப்பச் செய்ததற்பின்"[10]

என மொட்டையடித்தல் பற்றிக் கூறுகின்றது. முடி இறக்குதலின் காரணம் தலைமுடி நன்கு வளர வேண்டும் என்பதற்காகவே ஆகும்.

குறிப்பிட்ட ஒரு கோயிலுக்கோ அல்லது குல தெய்வத்துக்கோ நேர்த்திக் கடனாக மொட்டை அடிக்கிறோம் என்று வேண்டியிருப்பர். அதன்படி குழந்தை பிறந்த ஒன்பதாவது மாதத்திலோ அல்லது மூன்றாம் அகவையிலோ செய்யப்படும். முதல் மொட்டை போடுதல் குல தெய்வத்துக்குத்தான் நடக்கும். தாயின் பெற்றோருக்கும், தாய்மாமனுக்கும் முதலில் அழைப்பு விடுப்பர். தாயின் பெற்றோர், பொங்கல் வைப்பதற்கான புதுப்பாத்திரங்களையும், அதற்குண்டான மளிகைப் பொருட்களையும் வாங்கி வருவர். குழந்தைக்கும், குழந்தையின் தாய் தந்தைக்கும் புத்தாடைகள் எடுத்து வருவர். தாய்மாமன் அல்லது தாயின் தந்தை [அப்பிச்சி] [தாய்வழித்தாத்தா] மடியில் குழந்தையை உட்கார வைத்து நாவிதன் முடி இறக்குவான். பின் சாமிக்குப் பொங்கலிட்டு, குழந்தையும் பெற்றோரும் புது ஆடைகள் அணிந்து சாமியை வழிபடுவர். அப்போது தாய்மாமன் அல்லது அப்பிச்சி, குழந்தைக்கு நகையோ அல்லது பணமோ கொடுப்பார்.

### காது குத்துதல்

முதல் முடியிறக்குதலுக்கு அடுத்து மூன்று வயதிற்குள் அல்லது ஐந்து வயதிற்குள் இதனைச் செய்வர். முடியிறக்கித்தான் காது குத்துவர். இதற்கு முதன் முதலில் குழந்தையின் தாய்வழியினருக்குத்தான் அழைப்பு விடுப்பர். பின்னரே மற்ற உறவினர்களை அழைப்பர். குழந்தையின் அப்பிச்சி, அம்மச்சி [தாய் வழித்தாத்தா, பாட்டி] அல்லது

தாய்மாமன் புது ஆடைகளும், சீருக்கு வேண்டிய தட்டச் சாமான்கள் அனைத்தும் கொண்டு வருவர். ஏழு, ஒன்பது அல்லது பதினொரு தட்டங்களில் வாழைப் பழம், தேங்காய், இனிப்பு போன்றவைகளையும், ஒரு தட்டில் பச்சமாவையும் [பச்சரிசி மாவு + சர்க்கரை] வைத்திருப்பர். முடியிறக்கியவுடன் அக்குழந்தையின் தலையில் இந்தப் பச்சமாவுத் தட்டை வைத்துக் கோயிலைச் சுற்றி வந்து பின் அத்தட்டங்களோடு இதனையும் வைத்துவிடுவர். தாய்மாமன் மடியில் குழந்தையை உட்கார வைத்துக் காது குத்துவர். கோயிலுக்கு வேண்டிய அபிடேகச் சாமான்களும் தாய்வழிப் பெற்றோரே கொண்டு வருவர். காது குத்துக்கு உண்டான செலவுகள் அனைத்தும் தாய்வழிப் பெற்றோரையே சார்ந்தது. குழந்தையின் தாய்வழிப் பெற்றோர் அல்லது தாய்மாமன் தங்கள் வசதிக்கேற்ப நகையோ, பணமோ கொடுப்பர். பின் அனைவருக்கும் விருந்து பரிமாறப்படும். இது ஒரு தனிச்சடங்காகவே நிகழ்கின்றது.

### கல்வித்தொடக்கம்

நவராத்திரி வரக்கூடிய புரட்டாசி மாதத்தில்தான் குழந்தைக்குக் கல்வியைத் தொடங்குவர். முதல் நிகழ்ச்சியாக எழுத்தாணிப்பால் வைக்கப்படும். முன்னாளில் குழந்தைக்கு ஐந்து வயதில் செய்யப்பட்டது. புலவர் இனத்தார், குழந்தையின் நாக்கில் பாலைத்தொட்டு 'ஓம் ஹரி ஓம்' என்று எழுதுவார். இச்சடங்கு முடிந்தவுடன் குழந்தையின் பெற்றோர் அப்புலவருக்குப் பட்டுவேட்டி, பட்டுச்சட்டை, பணம், பழம் போன்றவைகளைத் தட்டில் வைத்துக் கொடுப்பார்கள்.

## பச்சை குத்துதல்

'பச்சை குத்தாத கையில் பிச்சையிடலாகாது' என்பது கொங்குப் பழமொழி. ஆண் பெண் இருபாலர்க்கும் பச்சை குத்தப்பட்டது. ஆண்களை விடப்பெண்களே அதிகம் பச்சை குத்திக்கொண்டனர். நெற்றி, நெற்றிப்பொட்டு, புருவத்தின் இடைப்பகுதி, கன்னம், தாவாக்கொட்டை, கைகள் மேலிருந்து கீழே மணிக்கட்டு வரை, கட்டைவிரலின் மேல் பாகம், முழங்காலிலிருந்து பாதம் வரை முதலிய இடங்களில் பச்சை குத்தப்பட்டது. களிப்பூட்டுத் தழை, சோற்றுக்கற்றாழை, பச்சிலை போன்ற மூலிகைகளினால் செய்யப்பட்ட மை (சாறு) கொண்டு இரும்பு ஊசியால் குத்துவர். இதனால் புண் உண்டாகும். பின் புண் ஆறுவதற்கு மருந்திடுவர். இது நோய் எதிர்ப்புத் தன்மைக்காகச் செய்யப்பட்டது. பெண் பருவமடைவதற்கு ஓரிரு ஆண்டுகளுக்கு முன்னரே எதிர்ப்புச் சக்திக்காகப் பச்சை குத்துவர். அன்றைக்கு இருந்த பச்சை குத்தும் முறை இன்றைக்குள்ள அக்குபஞ்சர் மருத்துவத்திற்கு இணையானது.

## பூப்புனித நன்னீராட்டல்

பெண்களுக்குப் பருவம் எய்துதல் சிறப்பானதொன்று. பெண் பூப்படைதலைப் பூத்தல், சமைதல், திரளுதல், ஆளாதல், மஞ்சள் சடங்காதல் என்றெல்லாம் குறிப்பிடுகின்றனர்.[11] பெண்கள் உரியபருவத்தில் பூப்படைந்தால் அவர்களின் உடல் நலம் நன்றாக இருக்குமென்றும், மணம் செய்வதற்குரிய பருவத்தை எய்தி விட்டார்களெனவும் கருதப்படுகின்றது.

ஒரு பெண் குடும்பவாழ்க்கை தொடங்குவதற்கான பருவத்தை எய்திவிட்டாள் என்பதை உலகோர்க்குத் தெரிவித்தலே பூப்புச் சடங்கின் நோக்கமாகும்.

கொங்கு வேளாளர் சமுதாயத்தில் பூப்புச்சடங்கு மூன்று நிலைகளைக் கொண்டதாக உள்ளது. மூன்றையும் சேர்த்துத் 'திரட்டிச்சீர்' என்ற பெயர் வழங்கப்படுகிறது. ஒரு பெண் வயதிற்கு வந்தவுடன், கொங்கு வண்ணான் மூலமாக முதலில் தாய்மாமன் வீட்டிற்கும், அப்பெண்ணின் தாய்வழிப்பெற்றோர்க்கும் செய்தி தெரிவிக்கப்படுகிறது.

## தள்ளி வைத்தல்

மாமன் மனைவி அத்தை வீட்டைச் சார்ந்த பெண்கள் வந்து பூப்படைந்த பெண்ணுக்கு மைகோதியும், [முடி சிக்கெடுத்தல், இரும்பாலானது] வேப்பிலைக் கொத்தையும் [கிருமிநாசினி] கொடுத்து, வீட்டின் பின்புறம் [கொல்லைப்புறம்] தள்ளி வைக்கின்றனர். பின்னர் அப்பெண்ணுக்கு அத்தை, பால் பழம் தருவாள். அதைத்தான் அப்பெண் முதலில் உண்ணவேண்டும். இது 'தள்ளி வைத்தல்' என்ற பெயரால் அழைக்கப்படுகிறது.

தாய்மாமனுக்கு வண்ணான் மூலமாகச் சொல்லப்படும் செய்தி மாராயம் எனப்படும். மரபு + ஆயம் = மாராயம். 'ஆயம்' என்றால் உரிமை. மரபுமரபாக வரக்கூடிய உரிமையே மாராயம் எனப்படுகிறது. தாய்மாமன் செய்தி தெரிவித்த வண்ணானுக்குப் பணமோ, பசுவோ அல்லது ஆடோ பரிசாக அளிப்பான்.

## குடிசை கட்டுதல்

ஏழாம் நாள் அல்லது ஒன்பதாம் நாள் உறவினர்களுக்கு வண்ணான் மூலமாக மாராயம் சொல்லப்படும். இந்த இரு நாட்களில் ஏதாவதொரு நல்ல நாளில் தாய்மாமன் மனைவி, பூப்படைந்த பெண்ணுக்கு மூன்று நிறத்திலான மஞ்சள், சிவப்பு, கருப்புச் சோறுகளைச் சுற்றிப் போடுவாள். நிறை செம்புத் தண்ணீரைச் சுற்றுவாள். நிறைநாழியும் சுற்றப்படும். இதன்பின்னர் அப்பெண்ணின் தலைக்கு நெய், அரப்பு வைத்து நீராட்டுவர். இதனையடுத்து மாமன் வீட்டார் கொண்டு வந்த புதுச்சேலையை உடுத்திவிடுவர். பின் நெரு தூபம் [தணலில் நெய்விடுதல்] காட்டுவர். பெண்ணின் மடியில் தேங்காய், பழம், பூ, வெற்றிலை, பாக்கு வைத்துக் கட்டி, குடிசையினுள் விடுவர். [நிழற்படம். 1] இக்குடிசையைத் தாய்மாமனே கட்டுவார். இதனைக் குச்சுக் கட்டுதல் அல்லது குடிசை கட்டுதல் என்று சொல்லுவர். மூன்று மாதத்திற்குள் ஏதாவதொரு நாளில் குடிசையைப் பிரித்துவிடுவர். பெண்ணுக்குத் தண்ணீர் ஊற்றும்பொழுது கம்புமாவைச் சுற்றிப்போடுவர். இப்படிச் செய்வதால் தீட்டுக்கழிந்து விட்டது என நம்புகின்றனர்.

## மணைச்சீர்

பெண்ணுக்கு மாமன்முறை உள்ளவர்கள், தாய்வழி உறவினர்கள் புதுத்துணிகள், இனிப்புகள் போன்றவற்றை அளிக்கின்றனர். இவை தவிர தட்டச்சீருக்குண்டான சாமான்கள் அனைத்தும் தேங்காய், வாழைப்பழம், வெற்றிலை, பாக்கு, வெல்லம், பேரீச்சம்பழம், கற்கண்டு, பூ இன்னும் பலவற்றை ஒற்றைப்படைவருமாறு தட்டில் வைக்க வேண்டும். [நிழற்படம்.2]

இவையனைத்தும் வாத்தியத்துடன் விநாயகர் கோவிலுக்குச் சென்று வழிபட்டு, வீட்டுக்குக் கொண்டு வரப்படும். அப்போது பெண்ணுக்குப் புத்தாடை அணிவித்து, கிழக்கு முகமாக ஒரு மணையில் அமரச் செய்வர். பெண்ணின் முன்பாகப் புது அண்டாவில் நெல் நிரப்பி வைக்கப்பட்டு இருக்கும். அதில் தேங்காய், அச்சுக் கருப்பட்டி, நெய், வெற்றிலை, பாக்கு, மஞ்சக்கொம்பு முதலானவை வைக்கப்பெற்றிருக்கும். அதனுள் நிறைநாழியும் வைக்கப்பட்டிருக்கும். இதுதான் மணைக்குரிய முக்கியமான ஒன்றாகக் கருதப்படுகிறது. 5 அல்லது 7 பெண்கள் அப்பெண்ணுக்குப் பொட்டிட்டுப் பூ வைத்துச் செல்வர். பிறகு நெரு தூபம் காட்டப்படும். தாய்மாமன், தாய்வழிப் பெற்றோர், நகையும் பணமும் கொடுப்பர். தள்ளிவைத்தல் என்பதிலிருந்து திரட்டிச்சீர் வரையுள்ள அனைத்துச் செலவுகளும் தாய்மாமனையோ அல்லது தாய்வழிப் பெற்றோரையோ சார்ந்தது.

மணையில் பெண்ணை அமர்த்தி இச்சீர் செய்யப்படுவதனால் இதற்கு 'மணைச்சீர்' என்று பெயர். சீர் முடிந்தவுடன் அனைவருக்கும் விருந்து அளிக்கப்படுகிறது.

சீரின் போது தாய்மணை என்ற ஒன்று வைக்கப்படும். இதனை அப்பெண்ணின் தாய் வைப்பாள். இதனுடன் தாய் மாமன் மணையும் வைக்கப்படும். தாய்மாமன் உள்ளவர்கள், இல்லாதவர்கள் என்ற வேறுபாடு இருக்கக்கூடாது என்பதற்காகத்தான் தாய்மணை என்ற ஒன்றை வைக்கின்றனர்.

தாய்மாமன் இல்லாதவர்கள் தாய்வழிப் பெற்றோரையும், உறவினர்களையும் அழைத்து தாய்மணை என்பதை மட்டும் வைத்து, திரட்டிச்சீர் செய்வர்.

பிறப்புச் சடங்குகள் அனைத்தும் குழந்தை கருவாதல் தொடங்கி, பிறந்து, வளரும் நிலைவரை குறைவற்று இருத்தல் வேண்டும் என்ற நோக்கில் அமைந்துள்ளன என்பது புலனாகின்றது.

## ஆ. திருமணத்தொடர்பின (வளமை)

பல்வேறு திருமண முறைகள்

மணப்பொருத்தம்

பெண்பார்த்தல்

சகுனம் பார்த்தலும், சாதகம் பார்த்தலும்

நிச்சய தாம்பூலம்

வெற்றிலை பாக்கின் சிறப்பு

தாலிக்குப் பொன் தருதல்

விறகு வெட்டுதல்

நெல் போட்டு வைத்தல்

உப்பு மாற்றுதல்

திருமண அழைப்பு

பட்டினிச் சோறு

மடைக்கலம் வைத்தல்

முகூர்த்தக்கால் நடுதல்

பிறைமண் போடுதல்

தண்ணீருக்குப் போதல் அல்லது சீர்த்தண்ணீர்

மங்கல நீராட்டு

உருமால் கட்டுதல்

கோயில் மாலை

கங்கணம் மற்றும் மாங்கல்யக்கயிறு

நாழிஅரிசிச்சாடு

இணைச்சீர்

குப்பாரி கொட்டுதல்

நாட்டுக்கல் வழிபாடு

கங்கணம் கட்டுதல்

தாயோடுண்ணல்

விநாயகர் வழிபாடு

கட்டிலேற்றி வருதல்

விடுதி வீடு

பொன் பூட்டல்

புதுக்கலச்சோறு

மாமன் பெண்ணெடுத்தல்

மணவறை

துணை மாப்பிள்ளை, துணைப்பெண்

மணமகன் வருகை

பாத பூசை

தாரை வார்த்தல்

திருப்பூட்டல்

மங்கல அரிசி

மாலை மாற்றுதல்

கைகோர்வையும் மங்கல வாழ்த்தும்

கரம்பற்றுதல்

குலம்கோதல்

குலதெய்வ வழிபாடு

அம்மி மிதித்து அருந்ததி பார்த்தல்

அருகுமணம் எடுத்தல்

சூரிய வழிபாடு

பால்பழம் சாப்பிடுதல்

கரகமிறக்குதல்

நீராட்டுதல்

சட்டுவச்சோறு

மொய்க்களரி

பரியம் செலுத்துதல்

புலவர் வாழ்த்து

பாதஅணி அணிதல்

மணமக்கள் மணமகன் வீடு வருதல்

மணமக்கள் மணமகன் வீட்டில் நுழைதல்

சம்பந்தம் கலத்தல்

மறுசரடு

கங்கணம் அவிழ்த்தல்

பெண்ணெடுத்த சோறு

எழுதிங்கள் சீர்

முழுக்காதுச்சீர்

# திருமணச் சடங்குகள் (வளமை)

இல்லறம் என்பது பண்டு தொட்டு இருந்து வருவதாகும். தலைவனும், தலைவியும் ஒன்று சேர்ந்து நடத்துகிற அறம் இல்லறம் இல் + அறம் = இல்லறம். இல் என்றால் குடும்பம். குடும்ப வாழ்க்கை மேற்கொள்கிற அறமே இல்லறமாகும். இதனையே பாரதிதாசனும்,

"கூடும்மண மக்கள்
கொளத்தக்க – நீடுநலம்
என்னவெனில், இல்லறத்தைச்
செய்தின்பம் எய்துவதாம்!"[1]

என்று பாடியுள்ளார்.

வான்புகழ் வள்ளுவரும்,

"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்"[2]

என இல்லறத்தின் சிறப்பைப் போற்றுகிறார்.

தொல்காப்பியர் இல்வாழ்க்கை பற்றிக் கூறியுள்ளார். இவர் தலைவன், தலைவி என்ற அமைப்பையும், வாழ்க்கைமுறை பற்றிக் கூறும் பொழுது அகவாழ்க்கை, புறவாழ்க்கை என்று பிரிக்கப் பட்டிருந்ததையும் கூறுகிறார். இவர் கூறிய தலைவன் தலைவியே மணமகன், மணமகள் என்று அழைக்கப் பெறுகின்றனர்.

## பல்வேறு திருமண முறைகள்

தொல்காப்பியர் கற்பியலில், தலைவன், தலைவி ஒருவரை ஒருவர் காதலித்துத் திருமணம் செய்து கொள்வர் என்றும், பெண்ணின்

பெற்றோர் கொடுப்ப, ஆணின் பெற்றோர் கொள்வர் என்றும், இருவரின் பெற்றோரும் இல்லாமல் உடன்போக்குச் சென்று திருமணம் செய்து கொள்வர் என்றும் இத்தகு திருமணமுறைகள் இருந்ததாகச் சுட்டுகிறார்.[3] திருமணம் நிகழ்வதற்கான பல்வேறு களங்களைப் பற்றி சி.சுப்பிரமணியமும் தமது நூலில் சுட்டியுள்ளார்.[4] ஆனால் கொங்கு வேளாளர்கள் பெரும்பாலும் ஏற்பாட்டு மணங்களையே மேற்கொண்டு வருகின்றனர்.

## மணப்பொருத்தம்

மணப்பொருத்தம் பற்றி அன்றைக்கே தொல்காப்பியர், மணமக்களின் பிறப்பு, குடிமை, ஆண்மை, ஆண்டு போன்ற நிலைகளையும், தலைமகனுக்கும் தலைமகளுக்கும் ஒப்புமை கருதக்கூடிய பண்புகளின் வகைகள் பற்றியும் குறிப்பிட்டுள்ளார்.[5] இக்காலத்தில், தொல்காப்பியர் சுட்டிய பொருத்தங்கள் தவிர, மேலும் பத்துப்பொருத்தங்கள் பார்க்கப்படுகின்றன. தற்காலத்தில் சாதகப் பொருத்தம் பார்த்து அனைத்தும் பொருந்தி வராத நிலையில் இன்றியமையாத சில பொருத்தங்கள் இருந்தாலே திருமணங்களுக்கு உடன்படுகின்றனர்.[6] கொங்கு வேளாளரிடத்தில் இம்முறையே நடைமுறையில் இருக்கின்றது. இருவரின் கூட்டங்களும் வேறானதாக இருந்தால்தான் திருமணம் பற்றியே பேசுவார்கள். ஏனெனில் இன்றைய அறிவியல் முறைப்படி குருதிக்குழுவைப் (Blood Group) பாகுபாடு செய்வது போல அன்று கூட்டத்தைப் பாகுபாடு செய்தனர்.

வைகாசி, ஆவணி, ஐப்பசி, கார்த்திகை, தை, மாசி, பங்குனி முதலிய மாதங்களில் திருமணத்தை நடத்துகின்றனர். கார்த்திகை மாதத்தில் கார்த்திகை தீபத்துக்கு முன்வரை திருமணம் நடைபெறும். ஆணோ, பெண்ணோ தலைப்பிள்ளையாய் இருந்தால் தைமாதத்தில் திருமணம் செய்யமாட்டார்கள். இருவரின் குடும்பங்களிலும் மூத்தவர்களாக இருக்கும் ஆண், பெண்ணுக்குத் திருமணம் செய்யமாட்டார்கள்.

இலக்கியங்கள், சந்திரனும் ரோகிணியும் கூடிய நன்னாளில் திருமணம் நடைபெற்றதாகக் குறிப்பிடுகின்றன.

"கோள்கால் நீங்கிய கொடுவெண் டிங்கள்
கேடில் விழுப்புகழ் நாடலை வந்தென"[7]

என்று அகநானூறு குறிப்பிடுகின்றது.

சிலம்பும்,

"வான்ஊர் மதியம் சகடணைய வானத்துச்
சாலி யொருமீன் தகையாளைக் கோவலன்"[8]

என்று குறிப்பிடுகின்றது.

கொங்கு வேளாளர் மங்கலவாழ்த்துப் பாடல், 'குரு நல்லேழில் கூடிய நாளில்' திருமணம் நடைபெற்றதாகக் கூறுகிறது.

## பெண்பார்த்தல்




பெண் பார்க்கும் நிகழ்ச்சி என்பது பெண்ணுக்கு முதன்மை தருவதாயும், தாய்மைக்கு மரியாதை தருமாறும் நடத்தப்பெறுகின்றது. அன்றைய நாளில் இச்சடங்கு இல்லை. அன்று ஒரு பெண்

இருக்கிறாளெனில் உறவினர் மூலமாக அப்பெண்ணின் குணம், பெயர், வயது, குடும்பநிலை, காணி, குலம் இவைகளை மாப்பிள்ளை வீட்டார் தெரிந்து கொள்வர். பெண்ணுக்குத் தெரியாமல் மணமகன் திருவிழா, பண்டிகை, ஏறுதழுவல் போன்ற விழாக்களின் போதோ அல்லது கோவில், குளம், கிணறு போன்றவற்றிற்கு அப்பெண் வரும்பொழுதோ, பெண்ணைப் பார்த்து விடுவான்.

அப்போதே பெரியவர்களிடமும் [மணமகன் வீட்டார்] சொல்லி, பையனுக்கு ஏற்ற பெண்ணா என்பதை முடிவு செய்து விட்டு, அதன்பின் வயதில் பெரியவரிடத்தோ, வண்ணானிடத்தோ, நாவிதனிடத்தோ, உறவினர் மூலமாகவோ பெண் வீட்டாரின் கருத்தைத் தெரிந்து கொண்டு பெண் கேட்கத் தயாராகிவிடுவர். ஆனால் இன்றைய நிலையில், பெண், பெண் வீட்டாரைப் பற்றிய அனைத்தையும் கேட்டறிந்தபின் மாப்பிள்ளை வீட்டார் பெண் வீட்டுக்குப் பெண் பார்க்கச் செல்கின்றனர். பெண் பிடித்திருந்தால் கை நனைப்பர். பெண் வீட்டாரும் ஒரு நாள் மாப்பிள்ளை வீடு சென்று பார்ப்பர். மணமகனின் உறவினர்கள், மணமகளின் வீட்டிற்குச் செல்வது பற்றி நற்றிணைப்பாடல் மூலம் அறிய முடிகிறது.[9]

## சகுனம் பார்த்தலும், சாதகம் பார்த்தலும்

மாப்பிள்ளை வீட்டார், பெண் வீட்டிற்குச் செல்லும் போதே நல்ல சகுனமாக இருந்தால்தான் பெண்ணையே பார்க்கப்போவர். மாப்பிள்ளை வீடு சென்று பெண் வீட்டார் பார்க்கும் முன்னரே, முதலில் திருமணத்திற்குக் குருபலன் உள்ளதா என்று பார்த்துத் தனித்தனியாக இருவீட்டாரும் சாதகம் பார்க்கச் செல்வர். பின்

இருவரின் சாதகத்தையும் பொருத்திப்பார்ப்பர். சாதகங்கள் பொருந்தவில்லை எனில், கோயிலில் பூக்கட்டிப் போட்டுக் கேட்பர். தாலிப் பொருத்தம் மட்டும் பார்ப்பர். சாதகம் ஒருவருக்கு இல்லையெனினும் பெயர்ப்பொருத்தம் மட்டும் பார்ப்பார்கள்.

சாதகம் பார்க்கப் போகும் போதும் சகுனம் பார்ப்பார்கள். புறப்பட்டுச் செல்கையில் பூனை குறுக்கே போகக்கூடாது. விறகுச் சுமை, அமங்கல மகளிர் வந்தால் அவை கெட்ட சகுனமாகக் கருதப்படும். தண்ணீர்க்குடத்துடன் ஒரு பெண் வந்தாலோ, வண்ணான் அழுக்கு மூட்டையோடு வந்தாலோ, நல்ல சகுனமாக எடுத்துக் கொள்வர். இப்படி எல்லாமே நல்லதாக இருந்தால்தான் திருமணத்திற்கு இசைவர்.

தற்காலத்தில் சகுனம் பார்ப்பது மூடநம்பிக்கை எனக் கருதப்படுகின்றது. பறவைகள், விலங்குகள் நடைபெறவிருக்கும் நிகழ்வுகளை அறிந்துகொள்ளும் தன்மை உடையன என்பதை அறிவியல் பூர்வமாக அறிய முடிகிறது. எடுத்துக்காட்டாக, குஜராத்தில் ஏற்பட்ட பூகம்பத்திற்கு முன்பு பறவைகள் அவ்விடத்தை விட்டுத் தாமே பறந்துவிட்டன, நாய்கள் ஊளையிட்டன எனப் பத்திரிக்கைச் செய்திகள் குறிப்பிட்டுள்ளன.

சீனர்கள் இன்று விலங்குகளின் உதவியோடு பூகம்பத்தைக் கணிக்க முற்படுகின்றனர்.

இவைகளைக் காணும்போது கொங்கு வேளாளர்கள் அன்றைக்கே பறவைகளை வைத்துச் சகுனம் பார்த்ததின் முக்கியத்துவத்தை அறியமுடிகிறது.

## நிச்சய தாம்பூலம்

முன்னாளில் மாப்பிள்ளை வீட்டார் சுற்றத்துடன் பெண் வீட்டிற்குச் சென்றபின், அங்கு தேங்காய், பழம், வெற்றிலை, பாக்கு, பூ, சூடம், பத்தி போன்றவைகளை ஒரு தட்டில் வைப்பார்கள். அங்கு பெண்ணின் சுற்றத்தாரும் அழைக்கப்பட்டு அமர்ந்திருப்பர். இரு வீட்டாரும் இருபக்கங்களில் அமர்ந்திருப்பர். இவர்களின் மத்தியில் வெற்றிலை பாக்குத் தட்டு வைத்து, தீபம் ஏற்றியிருப்பர். இந்நிகழ்ச்சிக்கு மாப்பிள்ளை வரமாட்டார். இரு வீட்டுப் பெரியவர்களும் திருமணத்திற்கு நாள் குறித்து இன்னமாதம், இன்னநாளில் திருமணம் என்று கொங்கு நாவிதனிடம் சொல்லுவர். அவன் இச்செய்தியை அனைவர்க்கும் தெரிவிக்கும் பொருட்டு உரத்த குரலில் மூன்று முறை சொல்லுவான். அதற்குப் பிறகு பெண் வீட்டார் அனைவருக்கும் விருந்திடுவர்.

ஆனால், இன்றைய நாளில் இதனை வெகு விமரிசையாகக் கொண்டாடுகின்றனர். ஒருமாதம், 15 நாட்களுக்கு முன்னரோ அல்லது திருமணத்தின் முதல் நாள் இரவன்றோ 'நிச்சயம்' நடைபெறுகிறது. மாப்பிள்ளையும் இருப்பார். மணமகளை அனைவரின் முன்பாக ஒரு நாற்காலியில் அலங்கரித்து அமர்த்தியிருப்பர். அவள் முன்பாக இரண்டு குத்துவிளக்குகள் ஏற்றப்பட்டிருக்கும். மாப்பிள்ளை வீட்டார் தேங்காய், பழவகைகள், இனிப்புகள், பூ, கண்ணாடி, சீப்பு, குங்குமம் பெண்ணிற்குச் சேலை, இரவிக்கை, அணிகலன் என, தட்டுகளில் வைத்திருப்பார்கள். அப்போது இரு வீட்டுப்பெரியவர்களும் திருமணத்திற்கு நாள் குறித்து நாவிதனிடம் சொல்லச் சொல்லுவர். பின் அருமைக்காரி மாப்பிள்ளை வீட்டார் வாங்கி வந்த புடவைகளைக்

கட்டச் சொல்லிக் கொடுப்பாள். மணப்பெண் இவர்களின் சேலையையும், இரவிக்கையையும் அணிந்து வந்து உட்காருவாள். அப்போது மணமகன் வீட்டுப் பங்காளிப் பெண் அப்பெண்ணிற்குப் பொன் ஆபரணத்தை அணிவிப்பாள். மணமகன் வீட்டுப் பெண்கள் ஐந்து பேரோ, ஏழுபேரோ பொட்டு இட்டு பூ வைப்பார்கள். இதன் பிறகு அனைவருக்கும் விருந்திடப்படும். அனைவரும் தாம்பூலம் பெறுவர். மணமகன் வீட்டார் கொண்டு சென்ற தாம்பூலம் முதலான பொருட்களைப் பெண் வீட்டிலேயே வைத்துவிட்டு, பெண் வீட்டார் கொடுக்கும் தாம்பூலத்தைப் பெற்றுச்செல்வர்.

## வெற்றிலை பாக்கின் சிறப்பு

வெற்றிலை பாக்கில் செல்வத்தின் தெய்வமான திருமகள் உறைவதாகவும், இவற்றை அதிகமாகப் பயன்படுத்துவதால் திருமகளுக்கு மகிழ்வூட்டி, அவளுடைய அருளைப் பெற முடியும் என்ற நம்பிக்கையாலுமே எல்லா மங்கல நிகழ்வுகளிலும் இவை இடம் பெறுகின்றன.[10]

விழாக்காலங்களில் அதிகப்படியான உணவு உண்பதாலும், எண்ணெய், கொழுப்புப் பதார்த்தங்களை உண்ணுவதனாலும் செரிமானத்தன்மை கெட்டுவிடுகிறது. ஆனால், அதன் பிறகு தாம்பூலம் உட்கொள்ளும்போது பசியையும், செரிமானத்தையும் ஏற்படுத்தும் ஒரு நுண்மக்கொல்லியாகச் செயல்படுகிறது. அதோடு மட்டுமல்லாமல் சுண்ணாம்புச்சத்து உடம்புக்கு மிகவும் நல்லது. ஆகவேதான், விருந்துகளில் தாம்பூலம் கொடுக்கும் பழக்கம்

ஏற்பட்டது. இப்பழக்கம் பாமரர் முதல் செல்வந்தர் வரை அனைவரிடமும் காணப்படுகிறது.

வெற்றிலை, பாக்கு, சுண்ணாம்பு மூன்றும் தன் நிறம் இழந்து ஒரு புதிய நிறத்தை உண்டாக்குவது, திருமணத்தில் இருவேறுபட்ட உறவுகள் இணைந்து ஒரு புதிய உறவை உண்டாக்குவதைக் குறிப்பால் உணர்த்துகிறது.

வெற்றிலை, பாக்கு, சுண்ணாம்பு என்பது நலம், செல்வம் முன்னேற்றம் ஆகியவற்றின் சின்னமாகக் கருதப்படும். ஆகவே தாம்பூலம் இன்றி எந்த மங்கல விழாவும் நடைபெறுவதில்லை.[11]

சங்க இலக்கியங்களில் வெற்றிலை, பாக்கு பற்றிய குறிப்புகள் உள்ளன.

"தகைசெய் தீஞ்சேற் றின்னீர்ப் பசுங்காய்
நீடுகொடி யிலையினர் கோடுசுடு நூற்றினர்"

(மதுரை–400,401)

"களிக்காய்ப் பறியும் துவர்க்காய் உம்பலும்
தளிரிலை வட்டியொடு"

(பெருங்கதை–2:71–73)

மதுரைக் காஞ்சியும், பெருங்கதையும் வெற்றிலை பாக்குப் பற்றிக் கூறுகின்றன. சிலப்பதிகாரத்திலும் இதனைப் பற்றிய செய்தி குறிக்கப்பட்டுள்ளது.[12] நாலாயிரத்திவ்யப் பிரபந்தத்திலும்,

"உண்ணுஞ் சோறுப ருகுநீர் தின்னும்வெற் றிலையும்"[13]

என்று நம்மாழ்வாரும் வெற்றிலை பற்றிக் கூறியுள்ளதைக் காணமுடிகிறது.

வெற்றிலையும், கமுகும் கொங்கு நாட்டில் மிகுதியும் விளைகின்றன. வெற்றிலை விண்ணின் கூறாகவும், பாக்கு மண்ணின் கூறாகவும், சுண்ணாம்பு தீயின் கூறாகவும் கொண்டனர். விண்ணும் மண்ணும் இல்லாமல் சிவனும் சக்தியும் இல்லாமல் உலகில் எதுவும் இல்லை என்ற அடிப்படையில் விண்ணாகிய வெற்றிலையும், மண்ணாகிய பாக்கும் சடங்குகளில் இடம் பெற்றன. வெற்றிலை பாக்கு, உணவுக்குப் பின் போடுவது உடலுக்கு உறுதியையும், அழகையும் கொடுக்கிறது.[14]

இதனையெல்லாம் அடிப்படையாக வைத்தே கொங்கு வேளாளர்கள், சடங்குகளில் வெற்றிலை பாக்குக்கே முதலிடம் கொடுத்துள்ளனர் என்பதை அறிய முடிகிறது.

### தாலிக்குப் பொன் தருதல்

இந்நிகழ்ச்சியை 'மாங்கல்யத்துக்குக் கொடுத்தல்' என்றும் கூறுவர். இரு வீட்டாரும் திருமண நாளை உறுதி செய்த பின் திருமணத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்வர். நல்ல நாள் பார்த்து மாப்பிள்ளை வீட்டார், ஒரு தட்டில் தேங்காய், பழம், வெற்றிலை, பாக்கு, கரும்புச் சர்க்கரை முதலியவற்றின் மீது தாலிக்குரிய பொன்னை வைத்து, பெண் வீட்டுக்குக் கொண்டு வருவர். உடன் உறவினர்களும் வருவர். பெண் வீட்டில் இதனை வழிபட்டு இரு வீட்டாரும் எடுத்து பொன்வேலை செய்யும் தட்டானிடம் கொடுப்பார்கள். அவன், அவர்களை வணங்கி, அத்தட்டை ஏற்றுக் கொள்வான். 'பூட்டு தாலிக்குப் பொன்னது கொடுத்து' எனக் கொங்கு வேளாளர் மங்கல வாழ்த்துப்பாடலில்

இந்நிகழ்ச்சி பற்றிக் குறிக்கப்பட்டுள்ளது. பொன்னைப் பெற்றுக் கொண்ட பொன் தட்டான் மாங்கல்யம் செய்வதன் தொடக்கமாக அப்போதே அனைவரின் முன்பும் பொன்னிற்குச் சூடம் காட்டி, சாங்கிதத்திற்கு மூன்று தட்டுத்தட்டி எடுத்து வைப்பான்.

'முகமும் முப்பிரிவும் உடையதாய் முதுகு உயர்ந்து தனித்தன்மை வாய்ந்ததாய் இத்தாலி இருக்கும். இம்முப்பிரிவுத் தாலி பாரிலும் உயர்ந்த மூலத்து ஒருவராம் ஏகமூர்த்தியே அரி, அரன், அயனாகத் திகழ்கிறது என்ற தத்துவத்தின் விளக்கம் போலும்'[15] என்று கூறுவர்.

சங்க காலத்திலேயே தங்கத்தால் அணிகலன்கள் செய்யும் பழக்கம் இருந்துள்ளது. புறநானூறு, பதிற்றுப்பத்து நூல்களில் இது பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது.

> "பொன்னுந் துகிரு முத்து மன்னிய
> ........................................
> ........................................
> அருவிலை நன்கல மமைக்குங் காலை"[16]

என்ற பாடலில் பொன்னோடு பவளம், முத்து, மணிகளும் கலந்து அணிகலன்கள் செய்யப்பெற்றன என்று அறிய முடிகிறது.

## விறகு வெட்டுதல்

முகூர்த்தநாள் குறித்த பின்னர் விறகு வெட்டுதல் நடைபெறும். அருமைக்காரர் ஒரு தட்டில் தேங்காய், பழம், வெற்றிலை, பாக்கு, நவதானியத்தை ஒரு மஞ்சள் துணியில் முடிந்து அனைத்தையும் வைத்து மணமக்களின் உறவினர்களோடு ஊருக்கு அருகில் உள்ள

பால்வரும் மரத்துக்குக் கீழே இதனை வைத்து, தேங்காய் உடைத்து, சூடம், பத்தி, சாம்பிராணி ஏற்றி அம்மரத்தை வழிபடுவர். பிறகு மஞ்சள் துணி முடிப்பை அம்மரத்தில் கட்டுவர். முதலில் அருமைக்காரர் ஒரு கிளையை வெட்டி மூன்று கட்டாகக் கட்டுவார். அதனையடுத்தே மணவீட்டிற்குத் தேவையான விறகுகளை வெட்டுவர். சீர் செய்து வெட்டி வந்த பால்மர விறகுகளை யாரும் தொடாத வண்ணம் (தீட்டுப்படாமல்) வீட்டின் மீது வைத்து விடுவார்கள். உறவினர்களுக்கும், விறகு வெட்டியவர்களுக்கும் விருந்திடுவார்கள்.

## நெல்போட்டு வைத்தல்

விறகு வெட்டிய சடங்கு முடிந்ததும், திருமண வீட்டில் அருமைக்காரப் பெண், மிடாவில் ஐந்து வள்ளம் நெல் அளந்து போட்டு வைப்பாள். தெய்வத்தை வழிபட்ட பின்னர், நெல்லை, மணப் பெண்ணின் தந்தைவழிப்பெண்கள் வேக வைத்து, மறுநாள் உலர்த்தி எடுத்து வைப்பார்கள். இதற்கு 'நெல் போட்டு வைத்தல்' என்று பெயர். நெல்லைக் குற்றி அரிசியாக்கி வைப்பார்கள். இருக்கும் தானியங்களிலேயே நீண்ட நாள் கெடாமல் இருக்கக்கூடிய தானியம் நெல் ஆகும். அதனால், இதனை நீண்ட நாள் போட்டு வைப்பர்.

## உப்பு மாற்றுதல்

சத்தியம் செய்வதற்கு நிகராகச் செய்யப்பட்டது. இரு வீட்டாரும் உப்பு வாங்குவர். இச்சீர் மணமகள் வீட்டில்தான் நடைபெறும். இரு வீட்டாரும் உப்பை மாற்றிக் கொள்வர். மணமகன் வீட்டார் கொடுத்த உப்பைப் பங்காளிப் பெண், மணமகள் வீட்டினுள் வைத்து விடுவாள். அதே போன்று மணமகன் வீட்டுப் பங்காளிப் பெண் மணமகள் வீட்டார்

கொடுத்த உப்புக்கூடையை மணமகன் வீட்டிற்கு எடுத்துச் சென்று விடுவாள். இதன் பின்னரே மளிகைப் பொருட்கள், ஆடைகள் முதலானவற்றை வாங்குவர். உப்பு மாற்றிய பின் திருமணம் முடியும் வரை எந்தவொரு அமங்கல நிகழ்ச்சிக்கும் செல்ல மாட்டார்கள். ஆதலால், இன்றைய நாளில் பெரும்பாலும் திருமணத்திற்கு முந்திய இரவே, இச்சீரை வைத்துக்கொள்கின்றனர்.

'உப்பிட்டவரை உள்ளளவும் நினை'

'உப்பில்லாப் பண்டம் குப்பையிலே'

என்ற பழமொழிகள் உப்பின் பெருமையைக் காட்டுகின்றன. உப்பு வாங்கும் சீர் முடிந்தபின் மணமகன் வீட்டாரோ, மணமகள் வீட்டாரோ எக்காரணம் கொண்டும் மணமக்களை மாற்றிக் கொள்ளமாட்டார்கள். இச்சீர் உறுதிமொழிக்கும், சத்தியத்திற்கும் எடுத்துக்காட்டாக கொங்கு வேளாளர்களிடத்தில் நடைபெறுகின்றது. எப்போதும் உறவில் ஒருவருக்கொருவர் நெருங்கியிருக்கும் நிலையையே இது காட்டுகிறது.

## திருமண அழைப்பு

பங்காளிகளையும், மாமன் மைத்துனர்களையும் நேரில் சென்று அழைப்பர். மற்ற உறவினர்களுக்கு நாவிதன் மூலம் அழைப்புச் சொல்லப்படும். திருமணத்தை ஒரு புனிதச்சடங்காகவே எண்ணி நடத்துகின்றனர். 'நாடறி நன்மணம்'[17] என்பது வழிவழியாய் வந்த வழக்கமாகும். இவ்வாறு கொங்கு வேளாளர் திருமணங்களைச் சிறப்பாக நடத்துகின்றனர்.

## பட்டினிச்சோறு

இதனை 'நாள் விருந்து' என்றும் சொல்லுவர். திருமணத்திற்கு முந்தின நாள் இவ்விருந்து நடைபெறும். இதற்குத் திருமணவீட்டார் அழைப்பு விடுக்க மாட்டார்கள். இந்நிகழ்ச்சி மணப்பெண், மணமகன் வீடுகளில் தனித்தனியே நிகழும். மணப்பெண் வீட்டில் பெண்ணின் தாய்மாமனும், மணமகன் வீட்டில் மணமகனின் தாய்மாமனும் அழைப்பு விடுப்பர். மணமக்கள் பகற்பொழுதில் உண்ணா நோன்பு [விரதம்] இருக்க வேண்டும். பின்னர் இரவு மணமக்களுக்கு நீராட்டி, புத்தாடை அணிவித்து, விருந்திடுவர். பின்னரே மற்றவர்களுக்கு விருந்திடுவர். இவ்விருந்தன்று மணமக்களுக்குத் தாய்மாமன் மனைவி புத்தாடைகளை வழங்குவாள். இதனையே மணமக்கள் நாள்விருந்தன்று அணிவர். இதனைத் திருமணத் தொடக்க நாள் விருந்து என்றும் சொல்லலாம். மணமகன் விருந்தை முடித்துக் கொண்டு பின்னரே மணமகள் வீட்டிற்கு அழைத்து வரப்படுவார். மாமன் உறவுடையோர் மணமக்களுக்கு ஆடைகள் வாங்கிக் கொடுத்தும், விருந்தாக்கிப் போடுதலையும் கொண்ட இச்சடங்கிற்கு 'சோறாக்கிப் போடுதல்' என்றும் சொல்லுவார்கள். சுற்றந் தழுவுதல், ஒப்புரவு ஒழுகுதலுமே இவ்விருந்தின் மேலான பண்பாடாக உள்ளது. இவ்விருந்தின்போது தாய்மாமன் தங்க அணிகலனையும் அணிவிப்பார். பட்டினிச் சோற்றின் முக்கியத்துவம், விஞ்ஞானபூர்வமாக, திருமணத்தன்று, மணமக்களுக்கு வயிறு சம்பந்தமான உடல் உபாதைகள் வராமல் இருக்கவே அந்நாளில் ஏற்படுத்தப்பட்டது.

## மடைக்கலம் வைத்தல்

சமையலுக்குரிய பாத்திர பண்டங்களே மடைக்கலம் எனப்படும். குயவன் திருமணத்திற்கு வேண்டிய புது மண் பாண்டங்களைத் திருமண வீட்டுக்குக் கொண்டு சென்று வாசலில் வைப்பான். திருமண வீட்டார், அவனுக்குத் தானியங்களையும், காணிக்கைகளையும் அளிப்பார்கள். ஆசாரியும் இரும்பினாலான சமையலுக்கு வேண்டிய கருவிகளைக் கொண்டு வந்து வைப்பான். அவனுக்குத் தானியங்களும், காணிக்கைகளும் அளிக்கப்படும். இதனையே 'மடைக்கலம் வைத்தல்' என்று கூறுவர்.

## முகூர்த்தக்கால் நாட்டல்

திருமணத்திற்கு முந்திய இரவு முகூர்த்தக்கால் நடுவர். ஆல், அரசு, பால்பாச்சான் இவற்றின் கிளைகளில் முக்கிளையுள்ள ஒரு குச்சியைக் கொண்டு வந்து வைத்திருப்பார்கள். அருமைக்காரர் இதற்கு மஞ்சள் தடவி, நவதானியத்தை மஞ்சள் துணியில் முடிந்து மாப்பிள்ளையின் வீடு எனில் மாப்பிள்ளை வீட்டாரும், மணப்பெண் வீடெனில் மணப்பெண் வீட்டாரும் ஆக இருவர் வீடுகளிலும் கட்டுவர். இதற்குத் தேங்காய், பழம், வெற்றிலை, பாக்கு, பூ, சூடம், பத்தி போன்றவைகளை வைத்துப் பூசை செய்வர். பூசையின்போது மங்கல வாத்தியங்கள் முழங்கும். இம்முகூர்த்தக்கால் வடகிழக்கில் நாட்டப்பெறும்.

'அரசு—பிரமன், ஆல்—விட்ணு, பால்பாச்சான் – உருத்திரன். இம்மும்மூர்த்திகளில் ஒருவர் சாட்சியாக இருந்து திருமணத்தைக் குறையின்றி நடத்தித்தர வேண்டும் என்பது இதன் கருத்தாகும்'[18] என்பர்.

## பிறைமண் போடுதல்

அருமைக்காரரும், மற்றையோரும் கொட்டு முழக்குடன் புற்றுக்கண் இருக்குமிடத்திற்குச் சென்று, பூசை செய்து மண்ணை வெட்டிக் கூடைகளில் எடுத்து வருவர். நாவிதன், இம்மண்ணை கல்நீக்கி, பிசைந்து மணமேடையில் ஒரு சாண் அளவு சதுரமாக மேடை அமைத்து அதில் பச்சைச் சல்லை [மூங்கில்] நடுவான். இதில் அரசந்தழையைக்கட்டி, பேய்க் கரும்பை [வேர்க்கரும்பு] நட்டு, அதில் மஞ்சள் துணியில் நவதானியத்தை முடிந்து, அதனையும் சேர்த்துக் கட்டிவிடுவான்.

இதில் நடப்பட்டிருக்கும் கரும்பு மன்மதனையும், சதுர்முக அமைப்பு நான்முகனையும் குறிக்கும். இக்குறியீடு இல்லறத்தில் மக்கட் பேற்றினை நினைவுபடுத்துகிறது. இன்று இச்சடங்கு கொங்கு வேளாளரிடம் மறைந்து பாலவேளாளரிடம் மட்டுமே நிலைத்து நிற்கிறது.

## தண்ணீருக்குப் போதல் அல்லது சீர்த்தண்ணீர்

சீர்க்காரச் சுமங்கலிப் பெண்கள் ஐந்து பேரோ, ஏழு பேரோ கொட்டு முழக்குடன் கிணற்றுக்குச் சென்று குடங்களில் தண்ணீர் கொண்டு வருவர். பிள்ளையார் கோவிலில் வண்ணான் மாத்து [வெள்ளைத்துணி] விரித்திருப்பான். தண்ணீர்க் குடங்களை இம்மாத்தின் மீது வைத்துவிட்டு, பிள்ளையாரை வழிபட்டபிறகு அந்நீரை எடுத்துக்கொண்டு வருவர். சீர்த்தண்ணீர் நிகழ்ச்சியை அகநானூறும்,

“உச்சிக் குடத்தர் புத்தகல் மண்டையர்
பொதுசெய் கம்பலை முதுசெம் பெண்டிர்
முன்னவும் பின்னவும் முறைமுறை தரத்தரப்
புதல்வற் பயந்த திதலையவ் வயிற்று
வாலிழை மகளிர் நால்வர் கூடிக்
கற்பினின் வழாஅ நற்பல உதவிப்
பெற்றோற் பெட்கும் பிணையை யாகென”[19]

எனக் குறிப்பிடுகிறது. பெருங்கதை இலாவண காண்டத்திலும் இது பற்றிய குறிப்புக் காணப்படுகின்றது.[20] முகூர்த்த நெல்லை அரிசியாக்கி அதனைப் பொங்கலிட வேண்டி உலையில் இந்நீரை ஊற்றிப் பொங்கலிடுவர். இப்பொங்கலை அன்றிரவு மணமக்களுக்குப் படைப்பர். பொங்கலுக்கு ஊற்றினது போக இருக்கும் மீதித் தண்ணீரைச் சால்களில் ஊற்றிவைத்துத் திருமணச் சடங்குகளுக்குப் பயன்படுத்துவர்.

## மங்கல நீராட்டு

மாப்பிள்ளையைப் பந்தலிலே அமர்த்தி நாவிதன் முகவேலை செய்வான். இதன்பிறகு மாப்பிள்ளை உப்பில் பல் துலக்குவார். அருமைக்காரர் வாய்கழுவ நீர் தருவார். பின், ஆக்கை போட்டு நீராட்டுவார். ஆக்கை என்பது புளியம்விளார். இதனை இரண்டாகப் பிளந்து இரண்டு ஆண்கள் பிடித்துக்கொள்வர். இதனை அருமைக் காரர்களே செய்ய வேண்டும். ஆக்கையின் நடுவில் மாப்பிள்ளை கிழக்கு நோக்கி நிற்பார். அருமைக்காரி நீராட்டுவாள். பிறகு இரண்டு ஆக்கைகளை மாப்பிள்ளைக்குச் சுற்றிப் போடுவாள். மூன்றாவதை

மாப்பிள்ளை, காலில் மிதித்து நிற்பார். இப்போது நிறைநாழி சுற்றுவாள். இதனை அடுத்தே 'மங்கல நீராட்டு' நடைபெறுகிறது. அருமைக்காரர் ஒரு தட்டில் அரிசியையும், நெருப்புக் கங்கையும் வைத்து அதன் மீது நெய் ஊற்றுவார். பின் இணையோங்கிக் கொடுத்து நெருப்பை அணைக்கின்றார். அரிசியை நீருடன் கலந்து மாப்பிள்ளையின் தலையை வலமாக மூன்றுமுறை சுற்றி, கீழே ஊற்றி விடுவார். மூன்றாம்முறை நீரை விடும்போது தாம்பூலத்தை அதோடு சேர்த்துக் கீழே விடுவார். நீராட்டு முடிந்த பின்பு வழிபாடு நிகழ்த்தப்பட்டு மாப்பிள்ளை மற்றவர்களுடன் சேர்ந்து உணவு உண்ணுவார்.

மணமகளுக்கு மங்கல நீராட்டு நடைபெறும். முக்காலியில் மணப்பெண்ணைக் கிழக்கு முகமாக அமர வைத்துச் செஞ்சோறு சுற்றி, வெற்றிலையை மஞ்சள் நீரில் கிள்ளிப்போட்டு அதனையும் சுற்றி, கீழே ஊற்றிவிடுவர். இது கண்ணேறு படாமல் இருக்கச் செய்வதாகும். பின்னர் அருமைக்காரி நீராட்டி விடுவாள்.

## உருமால் கட்டுதல்

மாப்பிள்ளைக்குத் தாய்மாமன் புது ஆடைகளைக் கொடுப்பார். மாப்பிள்ளை அவற்றை அணிந்து வந்து முக்காலியில் கிழக்கு நோக்கி உட்காருவார். பின் தாய்மாமன், மணமகன் தலையில் உருமாலைச் சிறிது சொங்குவிட்டுக் கட்டி விடுவார். பொன் அணிகள் அணிவிப்பார். பணம் வைத்துக் கொடுப்பார். இதனையடுத்தே மற்ற மாமன் உறவினர்கள் பணத்தையோ பொன்னாலான அணிகலன்களையோ அன்பளிப்பாக அளிப்பர்.

தாய்மாமன் உரிமையை நிலைநாட்டுவதற்கென்று உருமால்கட்டுசீர் ஏற்படுத்தப்பட்டது. தாய்மாமன் வீட்டில், பெண்ணெடுக்காமல் வேறிடத்தில் மணமகளைத் தேர்வு செய்தாலும் அதாவது வேறு உறவுக்குப் போய்விட்டாலும், மாமன் – மருமகன் உறவு என்றும் நிலையானது என்பதைக் காட்டுவதாகவே இந்நிகழ்ச்சி அமைந்துள்ளது.

### கோவில் மாலை

கோவில் பூசாரி, கோவிலில் சாமிக்கு அணிவித்த மாலைகளைக் கொண்டு வந்து மணமக்களுக்குக் கொடுப்பார்.

### கங்கணம் மற்றும் மாங்கல்யக்கயிறு

அருமைக்காரர், நாவிதன், சுமங்கலிகள் கங்கணம் மற்றும் மாங்கல்யக் கயிறுகளை மஞ்சள் நீரில் நனைத்து, அவற்றை வழிபட்டு, மாங்கல்யத்துடன் சேர்த்து, நாழிஅரிசிச்சாட்டில் வைக்கின்றனர்.

### நாழிஅரிசிச்சாடு

இது மாப்பிள்ளை வீட்டுச்சீர் ஆகும். மாப்பிள்ளை பெண் வீட்டிற்குச் செல்லும்போது திருமணத்திற்குரிய (முகூர்த்தத்திற்கு வேண்டிய) பொருள்கள் அனைத்தையும் ஒரு கூடையில் வைத்து எடுத்துச் செல்வர். இந்தக் கூடை என்பது பெரிய சாடு ஆகும். ஒரு புதிய கூடை (சாடு) வாங்கி, சாணம் போட்டு வழித்து, அதற்குச் செம்மண் கோலம் போடுவர். இச்சாட்டினுள் அரிசி, தேங்காய், பழம், கருப்பட்டி, நெய், வெற்றிலை, பாக்கு, மஞ்சள், விபூதி, சந்தனம், பொட்டு, முகூர்த்தச் சேலை, இரவிக்கை, மாங்கல்யம் மற்றும் அனைத்துப் பொருள்களும் வைக்கப்பட்டிருக்கும். இச்சாடை

மாப்பிள்ளையின் பங்காளி எடுத்துத் தலையில் வைத்துக்கொண்டு மாப்பிள்ளையை உடன் அழைத்துக் கொண்டு பெண் வீட்டிற்கு வருவார்.

## இணைச்சீர்

திருமணத்தில் நடைபெறும் முக்கியச்சீர்களுள் இணைச்சீரும் ஒன்று. இதை 'இணை உடுத்துதல்' என்றும் கூறுவர். திருமண நிகழ்ச்சிக்கு இணையான சீர் என்றும் கருதப்படுகிறது.

"தனக்கு இணையான சகோதரனை மணமகளுக்கு இணையாக – துணையாகக் கொடுக்கும் உரிமை சகோதரிக்கும் உண்டு என்பதை உணர்த்துவதே இணை உடுத்துதல் சடங்காகும்"[21] என தே.ப.சின்னச்சாமி கூறுவர்.

மணமகனின் உடன்பிறந்தவளால் இச்சீர் செய்யப்படுகிறது. இச்சீருக்கென்று தனியாக ஒரு மணவறை அமைக்கப்பட்டிருக்கும். மணவறையின் முன்பு இரு கரகப்பானைகளில், ஒன்றில் நீரும், மற்றொன்றில் நெல்லும் நிரப்பப்பட்டிருக்கும். அப்பானைகளின் மேல் மாவிலையுடன் தேங்காய் வைத்து, அதன்மேல் வெற்றிலை, பாக்கு வைக்கப்பட்டிருக்கும். ஒரு தாம்பாலத்தட்டில் நிறைய அரிசியும், அதன்மீது வெற்றிலை, பாக்கு, பனைவெல்லம் வைக்கப்படும். அதனருகில் செம்பில் பாலும் வைக்கப்பட்டிருக்கும். இத்தட்டின் முன்பு மஞ்சளில் பிள்ளையார் பிடித்து வைத்து, அதன்மேல் அருகம்புல் சொருகி இருப்பர். மணவறையில் மணமகன் வந்து அமர்வான். உடன்பிறந்தாளுக்குப் பட்டாடை உடுத்தி, மணமகள் போல் அலங்கரித்து மணமேடைக்கு அழைத்து வருவர். அப்போது திருமணப்

பேழையை அப்பெண் தலையில் சுமந்து வருவாள். பேழையில் கூறைப்புடவை, மாங்கல்யம், மஞ்சள், குங்குமம், பூ, கண்ணாடி, சீப்பு, தேங்காய், பழம், வெற்றிலை, பாக்கு முதலியன வைக்கப் பட்டிருக்கும். கூறைப்புடவையின் முந்தானையில் தன் உடன் பிறந்தானுக்கு இணைப்பவுன் என்று ஒரு பவுன் அல்லது சக்திக்குத் தக்கவாறு பணத்தை முடிந்து வைத்திருப்பாள். அப்பெண் இடக்கையால் பேழையைப் பிடித்தும், வலக்கையால் நிறை செம்புத் தண்ணீரை எடுத்தும் வருவாள். பின் மணமகனைச் சுற்றி வருவாள். மணமகனின் வலப்புறத்தில், பின்புறம் நிறுத்திப் பேழையில் உள்ளவற்றை நீக்கி, அதில் அப்பெண்ணை நிற்க வைப்பர். அருமைக்காரர், மணமகனின் உடன் பிறந்தாளுக்கு வெற்றிலை பாக்குக் கொடுத்து மடியில் கட்டிக்கொள்ளச் சொல்வார். கூறைச் சேலையைக் கொசுவ மடிப்பில் மடித்து, ஒரு முனையை மணமகனின் கக்கத்தில் பிடிக்குமாறும், மறுமுனையை உடன்பிறந்தாளின் கையிலும் கொடுப்பார். மணமகன் கை அரிசியில் அழுந்தியிருக்கும். அப்போது, அருமைக்காரர் அரிசியை எடுத்துப் பிள்ளையாருக்கு மலர் போல் தூவி வணங்கிய பின் சிறிது அரிசியையும், மலர்களையும் வெற்றிலையில் வைத்து நாவிதனிடம் கொடுப்பார். நாவிதன் பிள்ளையாரையும், அருமைக்காரரையும் வணங்கி, அரிசியை மலரோடு பிள்ளையாருக்குத் தூவி, மங்கல வாழ்த்துப் பாடி இச்சீரை நிறைவு செய்வான். அருமைக்காரர், தேங்காய் உடைத்து, ஊதுபத்தி ஏற்றி, நெருப்பு தூபம் காட்டி, சூடம் ஏற்றி வழிபட்டு, பிள்ளையாருக்கும், மணமகனுக்கும், இணை உடுத்தும் பெண்ணுக்கும் அருகு மணம் எடுப்பார்.

இந்நிகழ்ச்சி முடிந்தவுடன், அருமைக்காரர் பேழையை இணைப்பெண் தலையில் வைப்பார். அவள் கூறைப்புடவையுடன் மணமகன் வீட்டினுள் எடுத்துச் செல்வாள்.

உடன்பிறந்தாள் இல்லாவிடில் மணமகனின் பெரியப்பா, சித்தப்பா பெண் இச்சீரைச் செய்வாள்.

"பட்டுச்சேலை இணைப்பு, சகோதர பந்தம் விடுபடக்கூடாது என்பதற்கு அடையாளமாகும். கூறைப் புடவையை உடுத்தும் பெண்ணால் உடன்பிறப்புப் பிடிப்பு அறுவதில்லை என்பதையும் இச்சீர் உணர்த்துகின்றது.வீட்டில் நுழைந்த பெண் [மருமகள்], வீட்டில் பிறந்த பெண்ணின் [மணமகன் உடன்பிறந்தாள்] உரிமையை மதிக்க வேண்டும் என்ற அருங்கருத்தை உணர்த்தும் அற்புதமான சடங்காகும். இது எனது சொத்துக்கு இணையாகச் சீர் கொடுப்பேன் என்ற உறுதிமொழியை மணமகன் தன் உடன்பிறந்தாளுக்கு, இச்சீரின் மூலம் உறுதி செய்கின்றான்."[22]

"பிற பெண்ணை மணந்து கொள்ளப் போகும் மணமகன், தன் உடன் பிறந்தாளுக்கும் தனது சீர் வரிசையில் சமபங்கு உரிமை அளிக்கிறேன். அதனை மறுக்கவும், துறக்கவும் மாட்டேன் என்பதற்கான உறுதிப்பத்திரமே இச்சடங்கு என்பர்."[23]

"பெண்ணுக்கு உரிமை இல்லாத அந்தக் காலத்திலேயே, கொங்கு வேளாளர்கள் பெண்ணிற்குச் சம உரிமை கொடுத்தனர் என்றும், சொத்து, பொருள் ஆகியவற்றில் ஆணிற்கு இணையாகப் பெண்ணிற்கும் உரிமை உண்டு என்பதை உணர்த்தும் சடங்கு – சட்ட விதி இணைச்சீர்"[24] என்பர் செ. இராசு.

## குப்பாரி கொட்டுதல்

இணைச்சீர் முடிந்த பின்பு மாப்பிள்ளை நாட்டுக்கல்லுக்கு அழைத்து வரப்படுகிறார். மாப்பிள்ளை செல்லும்பொழுது பேழைமூடி, நிறைநாழி மற்றும் திட்டி கழிக்கும் மூன்று வண்ணங்களுடைய சோற்றுருண்டைகளை ஒரு தட்டில் வைத்து எடுத்துச் செல்கின்றனர். இவை சிவப்பு, மஞ்சள், கருப்பு வண்ணங்களில் இருக்கும். நாட்டுக்கல் அருகில் மாப்பிள்ளையையும், மாப்பிள்ளைத் தோழரையும் நிற்க வைத்து அருமைக்காரர், மேற்சொன்ன மூன்று வண்ணங்களில் உள்ள சோற்றுருண்டைகளையும், ஒவ்வொன்றாக இருவருக்கும் சுற்றிப்போட்டு எறிவர். இது மணமகன் மீது மற்றவர்களின் திட்டி [கண்ணேறு] படாமல் இருப்பதற்குச் செய்வதாகும். மாப்பிள்ளை மணம் முடிக்கப் போகும் செய்தியை ஊரார் அறிய, பெரிய மேளம், தம்பட்டம், கொம்பு ஆகியவற்றை முழக்கி அறிவித்தலே 'குப்பாரி கொட்டல்' எனப்படும்.

## நாட்டுக்கல் வழிபாடு

குப்பாரி கொட்டுதல் நிகழ்ச்சி முடிந்த பின்பு, மணமகன் நாட்டுக்கல்லுக்குச் சென்று வழிபடுவார். நாட்டுக்கல்லுக்கு நெய், மஞ்சள் மற்றும் நீர் விட்டுத் தூய்மைப்படுத்தி, திருநீறு, பொட்டு இடுகின்றனர். மஞ்சள் தோய்த்த நூலில் வெற்றிலையைச் சுற்றி நாட்டுக்கல்லுக்குக் கட்டுவர். நிறைநாழியால் நாட்டுக்கல்லை மூன்றுமுறை சுற்றி வழிபடுகின்றனர். மணமகளும் தாய்மாமனால் நாட்டுக்கல்லுக்குத் தூக்கி வரப்பட்டு வழிபடுவாள். மணமகளுக்கு இங்கு கண்ணேறு கழிக்கப்படும்.

### கங்கணம் கட்டுதல்

பேழை மூடியில் வைத்து எடுத்து வரப்பட்ட கங்கணக் கயிற்றைக் கை மணிக்கட்டில் கட்டுவதே 'கங்கணம் கட்டுதல்' எனப்படும்.

### தாயோடுண்ணல்

கங்கணம் கட்டிய பின்னர்த் தாயும், மணமகளும் ஒரே தட்டில் உள்ள உணவைச் சேர்ந்து உண்பர். அல்லது தாய் மணப்பெண்ணுக்கு ஊட்டி விடுவாள். இந்நிகழ்ச்சி, மணமகள் இனி கணவனோடு இருந்து உண்ணப் போகிறேன் என்பதையும், தாயிடம் இருந்து விடைபெறுகிறேன் என்பதையும் உணர்த்துவதாகும்.

### விநாயகர் வழிபாடு

மாப்பிள்ளை குதிரை மீது அமர்ந்து வருவார். உறவினர்கள் நடந்து உடன் செல்வர். அனைவரும் விநாயகர் கோவில் சென்று, தேங்காய் உடைத்து வழிபடுவர். அப்போது மணமகன் தனது இல்லற வாழ்வில் எவ்வித இடையூறும் நேரக்கூடாது என வழிபடுவான். பின்னர் வீட்டிற்கு வந்து தாய் கொடுக்கும் நீரைப் பருகுவான். பிறகு திருமணம் நடக்கும் இடத்திற்கு மாப்பிள்ளையை அழைத்துச் செல்வர். அவருடன் கொங்கு வண்ணான், கொங்கு நாவிதன், உற்றார் உறவினர் வருவர். நாழி அரிசிச்சாடு எடுத்து வரப்படும். அப்போது மங்கல வாத்தியம் முழங்கும்.

### கட்டிலேற்றி வருதல்

தாயிடம் நீர் வாங்கி அருந்திய பின்பு மணமகன், தன் வீட்டை விட்டுக் கிளம்புமுன் அரச சிம்மாசனம் போன்ற ஒன்றில் சற்று அமர்ந்து கிளம்புவதே 'கட்டிலேற்றி வருதல்' எனப்படும்.

## விடுதி வீடு

மாப்பிள்ளை, மணப்பெண் ஊரில் விநாயகர் கோவிலில் சற்றுநேரம் தங்குவார். கொங்கு வண்ணான் பந்தம் ஏந்தியிருப்பான். பறையன் கொம்பூதிக் கொண்டு இருப்பான். மணப்பெண் வீட்டார் மாப்பிள்ளையின் வருகையை அறிந்து மங்கல வாத்தியத்துடன் விநாயகர் கோவிலில் சென்று வரவேற்பர். கொங்குப்பண்டாரம், மாப்பிள்ளைக்குத் தலைவாசலில் மாலை அணிவிப்பான். மாப்பிள்ளை வீட்டார் தந்தை வழி உறவு வீட்டில் தங்க வைக்கப்படுதலை 'விடுதி வீடு' என்கின்றனர்.

## பொன் பூட்டல்

மணமகன், தங்கும் விடுதிக்குச் சென்றவுடன், மணமகள் வீட்டில் திருமண நிகழ்ச்சிகள் தொடங்கும். பின்னர்ப் பொன்பூட்டல் நடைபெறும். மாப்பிள்ளை வீட்டாரைச் சேர்ந்த பெண்கள், திருமணப் பொருட்கள் கொண்ட பேழை மூடியை மங்கல வாத்தியங்கள் முழங்க ஊர்வலமாக மணப்பெண் வீட்டிற்கு எடுத்து வருவர். அவர்கள் கொண்டு வந்த சேலையை மணப்பெண்ணை உடுத்தச் செய்து மோதிரம் அல்லது சங்கிலியையும் அணிவிப்பர். பின்னர்த் தங்கள் குடிப்பெருமையைக் கூறி, திருமணத்திற்குத் தங்கள் இசைவினைத் தெரிவிப்பர். இது 'பொன்பூட்டிக் குலம் ஓதுதல்' எனப்படுகிறது.

## புதுக்கலச்சோறு

பொன்பூட்டல் முடிந்த பின்பு பெண் வீட்டார் மாப்பிள்ளை தங்கியுள்ள இடத்திற்குச் சென்று பால், பழம், சர்க்கரை, அரிசி

ஆகியவற்றை அளிப்பர். மாப்பிள்ளை வீட்டுப் பெண்கள், பெண்வீட்டில் விருந்துண்பர். முதன்முதலாக மாப்பிள்ளை, பெண் வீட்டு உணவை உண்பது 'புதியகலச்சோறு' எனப்பட்டது. பின்னர் இது மருவி 'புதுக்கலச் சோறு' என்றானது.

## மாமன் பெண்ணெடுத்தல்

தாய்மாமன்களுக்குப் புதுத்துணிகள் அளிக்கப்பெற்றுக் கௌரவிக்கப்படுவர். அவர்கள் சந்தனம், குங்குமம் எடுத்து நெற்றியில் வைத்துக் கொள்வர். மணப்பெண் தோழிகள் மணப்பெண்ணை அலங்கரித்துக் கிழக்கு நோக்கி நிற்க வைத்து, மணப்பெண்ணுக்குத் தாய்மாமன் தங்க நெற்றிப்பட்டம் கட்டி, மாலை அணிவித்து, திருநீறு பூசிவிட்டு, பொட்டு வைத்து, தங்கள் தோள்மீது மணப்பெண்ணை அமர்த்தி நாட்டுக்கல் வழிபாட்டுக்குத் தூக்கிச் செல்வர். அங்கு இறக்கி விடுவர். அப்பெண்ணைப் பேழை மூடியில் நிற்கவைப்பர். நாட்டுக்கல் இருக்கும் இடத்தில் அருமைக்காரர் நாட்டுக்கல் வழிபாடு செய்வார். இவ்வழிபாட்டில் மாப்பிள்ளைக்குச் செய்வதைப் போன்றே ஐந்து சோறு சுற்றிப்போடுதலும், நிறை நாழி சுற்றுதலும் நடத்தப் பெறுகின்றன. வழிபாடு முடிந்தவுடன் மீண்டும் மணப்பெண்ணை மாமன்மார் தோளில் சுமந்து வீடு திரும்புவர். அங்கு மணப்பெண்ணுக்கு ஆரத்தி எடுத்தபின் உள்ளே அழைத்துச் செல்வர்.

கொங்கு வேளாளர் குடும்பங்களில் சகோதரி வீடுகளில் பெண்ணிருந்தால் தாய்மாமனுக்கோ அல்லது தாய்மாமனுடைய மகனுக்கோ பெண்கொடுப்பது வழக்கம். இதற்கு 'உரிமைப் பெண்'

என்று பெயர். பெண் கொடுத்தாலும் கொடுக்காவிட்டாலும், உறவுநிலை விட்டுப் போகாமல் இருக்கவும் இந்த உரிமையை நிலை நாட்டுவதற்காகவும் தாய்மாமனைச் சிறப்புச் செய்வதற்காகவும் ஏற்படுத்தப்பட்ட நிகழ்ச்சியே 'மாமன் பெண்ணெடுத்தல்' என்பது.

மணவறை

சிலர் வீடுகளில் வீடு கட்டும் பொழுதே மணவறையையும் சேர்த்துக் கட்டி இருப்பர்.[25] மணவறை இல்லாத வீடுகளில், மணமகளின் வீட்டின் முற்றத்தில் புதிய மூங்கில்கள் நான்கு மூலைகளிலும் நடப்படும். மேற்கூரைக்கு மூங்கில் வைத்து, அதனோடு பச்சைத் தென்னங்கீற்றுகளையும் வைத்து, வேய்ந்து விடுவர். இரண்டு, குலை ஈன்ற வாழை மரங்களால் மணவறையின் முகப்பு அலங்கரிக்கப்படும். தென்னங்குலை, தென்னம்பாளை, கமுகுக் குலை, கமுகம்பாளை, பனங்குலை போன்றவற்றை மணவறையின் முகப்பின் மேல் கட்டித் தொங்கவிடுவர். மற்றும் மாவிலைகளாலும், பூக்களாலும் தோரணங்களைக் கட்டி மணவறையை அலங்கரிப்பர். கிழக்கு நோக்கி, சூரியனைப் பார்த்து மணமக்கள் அமரும் வண்ணம் மணவறை அமைக்கப்பட்டிருக்கும். மணவறையினுள் மேற்குப் பகுதியில் மணமக்கள் அமர்வதற்கு மணப்பலகை போடப்பட்டிருக்கும். இதன்முன் இரண்டு கரகப்பானைகள் வைக்கப்பட்டிருக்கும். ஒன்றில் நீரும், மற்றொன்றில் நெல்லும் இருக்கும். கரகப்பானைகளின் மீது மாவிலை, வெற்றிலை, தேங்காய் ஆகியன வைக்கப்படும். விளக்குகள் ஏற்றப்படும். அருகில் மஞ்சளில் பிள்ளையார் பிடித்து வைப்பர். அருகுமணம் நிகழ்த்தப் பாலும், வெற்றிலையும்

வைக்கப்பட்டிருக்கும். கைகோர்வைக்காக ஒரு தட்டில் அரிசி, வெற்றிலை, பாக்கு, கருப்பட்டி இருக்கும்.

## துணைமாப்பிள்ளை, துணைப்பெண்

துணை மாப்பிள்ளையின் மேற்பார்வையிலேதான் மணமகன் இருப்பார். மாப்பிள்ளையின் பாதுகாவலனாகச் செயல்படுவார். மாப்பிள்ளை அழைப்பில் ஆரம்பித்து, திருமணம் முடிந்து மணமக்கள், மணமகன் வீட்டிற்குச் செல்லும்வரை அவரது பணி சிறப்பானது. மணமகனின் நிழல் போல் இருந்து அவருக்கு வேண்டிய அனைத்து உதவிகளையும் செய்வார்.

மணப்பெண்ணின் தோழியாக உள்ள துணைப் பெண்ணும், துணை மாப்பிள்ளை போன்றே மணப்பெண்ணிற்கு உதவியாக இருந்து செயல்படுவாள்.

பொதுவாக இவர்கள் இருவரும், மணமக்களுக்கு உடை சரி பண்ணுவது, முக ஒப்பனை சரி பார்த்தல், மணமாலையால் மயக்கம் ஏற்படாது பாதுகாத்தல் போன்றவை உட்பட திருமணம் முடியும்வரை இவர்கள்தாம் பெண், மாப்பிள்ளையை ஒரு கட்டுப்பாட்டில் வைத்திருப்பர்.

## மணமகன் வருகை

விடுதி வீட்டிலிருந்து மணமகன் மங்கல வாத்தியம் முழங்க உற்றார் உறவினர்களுடன் மணப்பந்தலுக்கு அழைத்து வரப்பெறுவர். மணவறையின் வாயிலில் மணப்பெண்ணின் சகோதரிகள் மாப்பிள்ளைக்கு ஆரத்தி எடுப்பார்கள்.[26] பின் இந்த ஆரத்தியை மணமகனின் காலடியில் கொட்டி விடுவார்கள். மணமகன் ஆரத்தித்தட்டில் பணம் வைத்துக்கொடுப்பார்.

இதனையடுத்து மாப்பிள்ளை தன் தோழருடன் மணவறையைச் சுற்றிவந்து மணவறையில் அமர்வார்.

## மணமகள் வருகை

மாப்பிள்ளை மணவறையில் அமர்ந்ததும், மணமகளும் அவளது தோழியும் உறவினர்களுடன், மணப்பந்தலுக்கு அழைத்து வரப்படுவர். மணமகளும், தோழியும் மணவறையைச் சுற்றி வந்த பின்னர் மணமகளை, அவளது தோழி மணப்பலகையில் அமர்த்துவள்.

## பாதபூசை

மணமக்கள் அவரவர் பெற்றோர்களின் பாதங்களைக் கழுவி சந்தனம், குங்குமம் இட்டு மலர்கள் தூவி வழிபட்டு, பெற்றோர்களின் வாழ்த்துகளைப் பெறுவர். 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்', 'தந்தை தாய்ப்பேண்'– என்பதற்கேற்பத் தந்தையையும் தாயையும் தெய்வமாக மதிக்கும் மரபு பாதபூசையில் காணப்படுகிறது.

## தாரை வார்த்தல்

பாதபூசை முடிந்த பிறகு மணமகளின் பெற்றோர் கொடுத்தோம் என்று மூன்று முறையும், மணமகனின் பெற்றோர் கொண்டோம் என்று மூன்று முறையும் கூறுவர். இதுவே 'தாரைவார்த்தல்' எனப்படும். இதனைத் தொல்காப்பியர் அன்றே,

"கற்பெனப் படுவது கரணமொடு புணரக்
கொளற்குரி மரபிற் கிழவன் கிழத்தியைக்
கொடைக்குரி மரபினோர் கொடுப்பக்கொள் வதுவே"[27]

எனக் குறித்துள்ளார்.

## திருப்பூட்டல்

மணவறையில் மணமக்களின் தாய்மாமன்கள், பண்டாரம் கொண்டுவந்த மாலைகளை மணமகனுக்கும் மணமகளுக்கும் அணிவித்துப் பொட்டிடுவர்.

ஒரு தட்டில் மஞ்சள் தடவிய தேங்காய், பழம், வெற்றிலை, பாக்கு, பூவும், இவைகளின் மீது மாங்கல்யமும் வைக்கப்பட்டிருக்கும். தட்டின் ஒரு ஓரத்தில் சூடம் ஏற்றி, அருமைக்காரர், மணமக்களிடம் காண்பித்து வழிபடச் சொல்லுவார். பிறகு கொங்கு நாவிதன் இத்தட்டை எடுத்துச் சென்று, மணப்பந்தலில் அமர்ந்திருக்கும் அனைத்துப் பெரியவர்களிடமும் ஆசிபெற்று, மீண்டும் அருமைக் காரரிடம் கொடுப்பான். அவர் கிழக்கு முகமாக நின்று சூரியனை நோக்கி இம்மங்கலத்தட்டை மூன்று முறை உயர்த்திக் காட்டி வழிபடுவார், பின் மணமகனிடம் மாங்கல்யத்தை எடுத்துக் கொடுப்பார். அப்போது கெட்டிமேளம் முழங்க, கொம்பூத, மணமகளின் கழுத்தில் மணமகன் மாங்கல்யத்தைப் பூட்டுவார்.

## மங்கல அரிசி

மணமகன், மணமகளுக்குத் திருப்பூட்டும்போது, மணப்பந்தலில் வீற்றிருப்போர் அனைவரும் மணமக்கள் மீது மங்கல அரிசி தூவி வாழ்த்துவர். அகநானூறு, நெடுநல்வாடை முதலிய சங்க இலக்கியங்களில் நெல்லும், மலரும் தூவி வழிபட்டதைக் காணமுடிகிறது. இதனுடைய எச்சமாகவே பிற்காலத்தில் நெல்லுக்குப் பதிலாக மஞ்சள் தடவிய அரிசியைத்தூவி மணமக்களை வாழ்த்தினர்.

## மாலை மாற்றுதல்

மணமக்கள் ஆரத்தியில் நனைக்கப்பட்ட வெற்றிலையினால் நெற்றியில் ஒருவருக்கொருவர் பொட்டு வைத்துக்கொண்டு, பண்டாரம் முதல்நாள் அளித்த மாலைகளை மும்முறை மாற்றி மாற்றி அணிவிப்பர்.

இச்சடங்கு இருவரின் உள்ளமும் இரண்டறக் கலக்கவே ஏற்படுத்தப்பட்டது.

## கை கோர்வையும், மங்கல வாழ்த்தும்

ஒரு தட்டில் நிறைய அரிசியும், அதன்மீது தாம்பூலமும், கருப்பட்டியும் வைத்து, மணமகன் முன்பு இந்தத் தட்டை வைப்பார்கள். பின் மணமகளின் சகோதரன் மணமகன் எதிரே அமர்த்தப்படுவான். அருமைக்காரர், விநாயகருக்கு நெருதூபம் காட்டி வழிபட்ட பின்பு, மணமகன், மணமகளின் சகோதரன் கைகளைத் தட்டிலுள்ள அரிசியில் கோர்த்து வைப்பர். பிறகு அருமைக்காரர், கொங்கு நாவிதனிடம் மங்கல வாழ்த்துப் பாடும்படி கூறுவார். மங்கல வாழ்த்துப் பாடும்போது சகலவாத்தியங்களும் நிறுத்தப்பட்டு, கொங்கு நாவிதன் பாடி முடிக்கும்போது, வெற்றிலையைக் கிள்ளி, அரிசியுடன் விநாயகருக்குப் போடுவான். தவில் வாத்தியத்திலிருந்து மட்டும் 'டும்' என்ற ஒரு ஒலி எழுப்பப்படும். மங்கல வாழ்த்து முடியும் போது சகல வாத்தியங்களும் முழங்கும். இதுவரை கைகோர்வை நீடிக்கும். கொங்கு வேளாளர் திருமணத்தில் பாடப்படும் இம்மங்கல வாழ்த்து கம்பரால் இயற்றப்பட்டதாக நம்பப்படுகிறது.

### கரம்பற்றுதல்

மணமகனின் வலக்கைச் சுண்டு விரலையும் மணப்பெண்ணின் இடக்கைச் சுண்டு விரலையும் கோர்த்து ஒரு புதுத்துணியால் சுற்றிக்கட்டி மணவறையை மூன்றுமுறை வலம்வரச் செய்வர். அருமைக்காரர் துணியை அவிழ்த்துவிட்டு இருவரின் விரல்களையும் பாலில் நனைக்கச் செய்வார். கரம்பற்றுதலைக் குறிஞ்சிப்பாட்டும்,

"நேரிறை முன்கை பற்றி நுமர்தர
நாடறி நன்மணம்"[28] எனச் சுட்டுகின்றது.

ஆண்டாளும்,

"மைத்துனன் நம்பி மதுசூதன் வந்து என்னைக்
கைத்தலம் பற்றக் கனாக்கண்டேன் தோழீ! நான்"[29]

எனப் பாடுவதைக் காணமுடிகிறது. இனி வாழ்நாள் முழுவதும் சுக துக்கங்கள் அனைத்துக்கும் கைகொடுப்பவன் என்பதனையே இந்நிகழ்ச்சி காட்டுகிறது.

### குலம் கோதல்

மணமகனும், மணமகளும் வெவ்வேறு குலத்தைச் சார்ந்தவர்கள் என்பதைத் தெரிவிக்கவே இந்நிகழ்ச்சி சொல்லப்படுகிறது. அருமைக்காரி மணவறையில், 'உப்பைத்தொட்டு, புளியைத் தொட்டு, சிறு மாங்கல்யத்தைத் தொட்டு, இன்னார் குலத்துப்பெண், இன்னார் குலத்துப் பையனுக்குப் பாரியாகிறாள்' என்று சபையில் அறிவிப்பாள்.

### குல தெய்வ வழிபாடு

மணமகனின் குலதெய்வத்தை மணமக்கள் இருவரும் வழிபடுவர்.

## அம்மி மிதித்து அருந்ததி பார்த்தல்

அம்மியைக் கழுவி, சந்தனம், பொட்டு இட்டு நெருதூபம் காட்டி, மணமகள் தனது வலது பாதத்தின் கட்டைவிரலை அம்மியில் வைத்துப் பின்னர்ச்சாலில் வைக்கப்பட்டுள்ள நீரில் தனது பிம்பத்தைப் பார்த்து அருந்ததியை வழிபடுவாள்.

## அருகுமணம் எடுத்தல்

அருமைக்காரர் பிள்ளையாரைப் பூசை செய்து, மணமக்களை அருகுமணத்தால் ஆசீர்வாதம் செய்வார். அருகம்புல் நன்கு செழித்து வளர்வது போல் மணமக்களின் வாழ்க்கையும் செழிக்க வேண்டும் என்பதே இவ்வாசீர்வாதத்தின் பொருளாகும்.

## சூரிய வழிபாடு

மணமக்கள், மணவறையைவிட்டு வெளியே வாசலில் வந்து, கிழக்கு நோக்கி நின்று சூரியனை வழிபடுவர். பின்னர் மணப்பந்தலுக்குச் சென்று பெரியோர்களின் பாதங்களைத் தொட்டு வணங்கி வாழ்த்துக்களைப் பெறுவர்.

## பால் பழம் சாப்பிடுதல்

மணமக்களை, மணமகளின் அறைக்கு அழைத்துச் சென்று புதிய பாயில் கிழக்கு நோக்கி அமர வைத்து, பால், பழம் வழங்கி உண்ணச் செய்வர்.

## கரகமிறக்குதல்

இணைச்சீர் முடிந்தவுடன் கரகப்பானையை மூடிவிடுவர். அதே போன்று அருகுமணச்சீர் முடிந்த பிறகும் கரகப்பானைகளை

மூடிவிடுவர். மணவறையிலிருந்து இப்பானைகளை எடுத்தலே, 'கரகம் இறக்குதல்' எனப்படுகிறது. அதனையடுத்து மூடிகளைத் திறந்து தாம்பூலத்தை உள்ளே வைத்து நிறைநாழி சுற்றி வழிபடுவர். சுமங்கலிப் பெண்கள் நெல் உள்ள கரகப்பானையை உரியில் வைத்து, மற்றொரு கரகப்பானையில் உள்ள நீரைக் கூரையின் மீது ஊற்றிவிடுவர்.

## நீராட்டுதல்

ஒரே மிடாவில் உள்ள நீரினால் மணமக்கள் நீராட்டப்படுவர். அப்போது அருமைக்காரர் செஞ்சோற்று உருண்டைகளை மணமக்களைச் சுற்றி நான்கு திசைகளிலும் எறிவார். இது மணமக்களுக்குக் கண்ணேறுபடாமல் இருப்பதற்காகச் செய்யப் படுவதாகும். [துட்ட தேவதைகளை வணங்கும்போது ஆட்டை வெட்டி, அதன் இரத்தத்தால் வழிபடுவர். அது போன்று மங்கல நிகழ்ச்சிகளில் செய்யக்கூடாது. எனவே இங்கு தீயவை, கண்திருட்டி போன்றவை அணுகாமலிருக்க இரத்தத்திற்குப் பதில் சிவப்பு நிறமுடைய செஞ்சோற்றுருண்டைகளைச் சுற்றி எறிவர். சிவப்பு நிறத்துக்காக மஞ்சளும், சுண்ணாம்பும் கலப்பர். இதில் சோற்றைப் பிசைந்து உருட்டிக் கொள்வர்]

மங்கல நீராட்டு, புடவை போட்டு நீராட்டல் என்றும் அழைக்கப்படுகிறது. மணமக்களுக்கு நீராட்டு முடிந்தவுடன், மணமகளுக்குப் பெற்றோர் புதுப்பட்டுப் புடவை கொடுப்பதைக் குறிக்கிறது. முகூர்த்தத்திலிருந்து இதுவரைக்கும் மணமகள், மணமகன் வீட்டார் கொடுத்த புடவையையே அணிந்திருப்பாள். ஆனால் இந்நீராட்டு முடிந்தவுடன் மணமகளின் பெற்றோர், பேழை மூடியில்

புடவை, இரவிக்கை, வெற்றிலை, பாக்கு, பணம் போன்றவற்றை வைத்து அவளிடம் கொடுப்பர்.

## சட்டுவச்சோறு

நீராட்டு முடிந்தவுடன் மணமகள், பெற்றோர் கொடுத்த புடவையை அணிந்து கொண்டு, முதன்முதலில் கணவனுக்குச் சோறு பரிமாறுவாள். கணவனை உட்கார வைத்துத் தலைவாழைஇலை போட்டு, சோற்றைத் தட்டிலிருந்து சட்டுவத்தால் தள்ளுவாள். இதனுடன் சர்க்கரை, பழம், நெய் போன்றவற்றையும் வைப்பாள். சட்டுவத்தால் சோற்றைத் தள்ளுவதினால் இது சட்டுவச்சோறு எனப்பட்டது.

## மொய்க்களரி

மணமகன் வீட்டிற்கென்று ஒரு புறமும், மணமகள் வீட்டிற்கென்று மற்றொரு புறமும் மொய்க்களரி கூட்டப்படும். மணமகனின் உறவினர்கள் மணமகன் மொய்க்களரியிலும், மணமகள் உறவினர்கள் மணமகள் மொய்க்களரியிலும் இருவருக்கும் உறவினர்களாக உள்ளவர்கள் இருவரின் மொய்க்களரிகளிலும் மொய் [பணம்] வைப்பர். திருமண வீட்டாருக்கு உறவினர்கள் வைத்துக் கொடுக்கும் பணம் 'மொய்க்களரி' எனப்படும். தொன்றுதொட்டு திருமணம் போன்ற நிகழ்ச்சிகள், திருமண வீட்டாருக்கு ஒரு சுமையாக இருக்கக்கூடாது என்பதற்காக இந்நிகழ்ச்சியினை ஒரு சமுதாய நிகழ்வாகவும், அதில் அனைவரும் பங்கெடுத்து நிறைவு செய்யவும் இம்முறை ஏற்படுத்தப்பட்டது.

## பரியம் செலுத்துதல்

பெண்ணை வளர்த்ததற்காக மணமகன் வீட்டார், மணமகள் வீட்டாருக்குக் கொடுக்கப்படும் பணம் 'பரியம்' எனப்படும். இது 'சிறுசீர்ப் பரியம்' என்றும் சொல்லப்படும். மணமகனும், மணமகன் பங்காளிகளும் மணப்பந்தலில் அமர்ந்து கொண்டு, நாவிதனை அழைத்துத் தாங்கள் பரியம் செலுத்த வந்திருப்பதாக மணப்பெண் வீட்டாரிடமும், அவர்கள் பங்காளிகளிடமும் அறிவிக்கும்படி கூறுவர். அவர்களும் அங்கு வந்து அமர்வர். மணமகள் வீட்டார், மணமகன் வீட்டாரிடம் பரியத் தொகை எவ்வளவு? என்று கேட்பர். முதலில் மாப்பிள்ளை வீட்டார் ஒரு குறைவான தொகையைச் சொல்லுவர். அதனை மணப்பெண் வீட்டார் ஏற்றுக் கொள்ள மாட்டார்கள். இவ்வாறே இரு வீட்டாரும் சிறிது நேரம் கேலியும், கிண்டலுமாகப் பேசிக் கொண்டு இருப்பார்கள். கடைசியில் ஒரு பெரியவர் அக்கிராமத்திற்கு உண்டான பரியப்பணத்தைக் கொடுக்கும்படி மணமகன் வீட்டாரிடம் கூறுவார். மணமகன் வீட்டார் ஒரு தட்டில் தேங்காய், பழம், வெற்றிலை பாக்கு, மஞ்சள் துணியில் முடிந்த பணமுடிப்பையும் முக்காலியின் மீது வைத்து விடுவார்கள். மணப்பெண் வீட்டுப் பங்காளிப்பெண் அவற்றிற்கு நீர் விளாவி,. நிறைநாழி சுற்றி, அதனை எடுத்துப் போய் மணமகள் வீட்டினுள் வைத்துவிடுவாள்.

## புலவர் வாழ்த்து

புலவர், விநாயகருக்குப் பூசை செய்து வழிபட்டு, மணமக்களை வாழ்த்திப் பாடுவார். அவருக்குத் திருமண வீட்டார் பால், பழம்

வழங்கி, பணமும் கொடுத்துச் சிறப்புச் செய்வர். கொங்குச் சமுதாயத்திற்கும் புலவருக்கும் நெருங்கிய தொடர்புண்டு. கொங்கினத்தில்தான் புலவர் என்ற ஒரு சாதியே உண்டு. கொங்கினம், புலமைக்கு முதன்மை கொடுத்துப் புலமையை ஆதரித்தது புலனாகின்றது.

### பாத அணி அணிதல்

திருமணம் முடிந்து மணமக்கள், மணமகன் இல்லத்திற்குச் செல்லும்போது, பண்ணைமாதாரி திருமணத் தம்பதியருக்குச் சிறப்பாகச் செய்த பாதணிகளை ஒரு முக்காலியின் மீது வைத்து, அவர்களுக்கு அணிவிப்பான். இம்மாதாரிக்கு ஒரு கூடையில் அரிசி, பருப்பு, சர்க்கரை, தேங்காய், பழம், வெற்றிலை, பாக்கு முதலியவற்றுடன் பணமும் வைத்துச் சிறப்புச் செய்வர்.

### மணமக்கள், மணமகன் வீடுவருதல்

மணமக்கள் ஊர்வலமாக விநாயகர் கோவிலுக்கு மங்கல வாத்தியம் முழங்க அழைத்து வரப்பட்டு, விநாயகரை வழிபட்ட பின்பு, ஒரு தேங்காயை எடுத்து மணமக்களின் தலையைச் சுற்றி, அவர்கள்முன் உடைப்பர். இதற்கு எறிதேங்காய் உடைத்தல் என்று பெயர். பெரியோர்களின் பாதங்களைத் தொட்டு வணங்கி, வாழ்த்துக்களைப் பெற்ற பின்பு மணமகன் இல்லத்துக்கு மணமக்கள் புறப்படுவர்.

### மணமகள், மணமகன் வீட்டில் புகுதல்

மணமக்கள், மணமகன் ஊரை வந்தடைந்ததும் விநாயகரை வழிபட்டுப்பின் மணமகன் இல்லத்திற்கு வருவர். மணமகன் வீட்டில்

மணமக்களுக்கு ஆரத்தி எடுக்கப்படும்.[30] அதனையடுத்து மணமகள் வலதுகாலை வைத்து வீட்டில் நுழைவாள். அங்கு உப்பு, புளி, அரிசி, பருப்பு, பால், தயிர் போன்றவற்றைத் தொட்டு வணங்குவாள். பின் மணமக்களை ஒரு அறையில் அமர்த்தி, பால், பழம் அருந்தச் செய்வர்.

## சம்பந்தம் கலத்தல்

மணமகள் வீட்டார் நல்லநாள் பார்த்து மணமக்களை மறுவீடு அழைக்கச் செல்லுவர். அப்போது இனிப்புகளையும், பழங்களையும் கொண்டு செல்லுவர். இவர்களை, மணமகன் வீட்டார் சிறந்த முறையில் வாயில்வரை வந்து வரவேற்று உபசரித்து விருந்தும் அளிப்பார்கள். அனைவரும் விருந்துண்டு, தாம்பூலம் தரிப்பர். மணமக்களை மணமகள் இல்லத்திற்கு அழைத்துச் செல்லுவர். அப்போது விநாயகரை வழிபட்டு, கண்ணேறு கழிக்க எறிதேங்காய் உடைத்து விட்டுச் செல்லுவார்கள்.

திருமணத்தில் மணமக்களின் உற்றார் உறவினர்கள், நண்பர்கள் எனப்பலரும் குழுமியிருப்பர். திருமண வீட்டார் அனைவரையும் பொது நோக்கில் பார்ப்பர். ஆனால் 'சம்பந்தம் கலத்தல்' என்ற நிகழ்ச்சியில் மணமக்களின் நெருங்கிய உறவினர்கள் மட்டுமே பங்கெடுத்துக் கொள்வர். அப்போது இருவீட்டு உறவுகளையும் அறிமுகம் செய்து கொள்வர். இதற்காகவே இவ்விருந்து ஏற்பாடு செய்யப்படுகின்றது.

## மறு சரடு

பெண் வீட்டார், மணமகனின் வீட்டிலிருந்து வரும்போது கரகப்பானை நெல்லையும் எடுத்து வருவர். இருவீட்டாரின் கரகப்பானைகளில் உள்ள நெல்லை ஒன்றாகக் கலந்து உரலில் இட்டு குத்தி அரிசி எடுத்த பின், மணப்பெண் இவ்வரிசியைக் கொண்டு விநாயகர் கோவிலில் பொங்கல் வைப்பாள். நாவிதன் 17 சிறிய சரடுகளைத் திரித்து மஞ்சள் நீரில் நனைத்துக் கொடுப்பான். இதனை விநாயகருக்கு அணிவிப்பர். விநாயகருக்குப் பொங்கல் படைக்கப்பட்டு விநாயகர் வழிபாடு நடைபெறும். அருமைக்காரி விநாயகருக்கு அணிவித்த சரடில் ஒன்றை எடுத்து மாப்பிள்ளையின் கையில் கொடுத்து மணப்பெண்ணின் கழுத்தில் கட்டச் சொல்லுவாள். இதற்கு 'உட்கழுத்துச் சரடு' என்று பெயர். மீதி உள்ள 16 சரடுகளில் மாங்கல்யம் கோர்க்கப்பட்டு மீண்டும் மாப்பிள்ளை பெண்ணின் கழுத்தில் கட்டுவார். மணப்பந்தலில் அணிவித்த சரடைக் கழற்றி விநாயகருக்குச் சாற்றுவர். மாங்கல்யத்தில் உள்ள 16 சரடுகள் பதினாறும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்வதைக் குறிக்கும். இதனையடுத்து அனைவருக்கும் பொங்கல் வழங்கப்படும். இந்நிகழ்ச்சி 'மறுசரடு அணிவித்தல்' என்றும், 'கரகத்து நெல்குத்திப் பொங்கல் இடுதல்' என்றும், 'கரகப் பொங்கல்' என்றும் அழைக்கப் படுகிறது. திருமண நிகழ்ச்சிகளில் இது ஒரு முக்கிய நிகழ்ச்சியாகக் கருதப்படுகிறது. கொங்கு மகளிர் தாலிக் கொடி இல்லாமல் கூட இருப்பார்கள். ஆனால் உட்கழுத்துச் சரடு இல்லாமல் இருக்க மாட்டார்கள். அவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்ததாக இச்சரடு கருதப்படுகிறது.

## கங்கணம் அவிழ்த்தல்

மறுசரடு அணிந்த பிறகு மணமக்கள் விநாயகரை வழிபட்டபின், மணப்பந்தலில் அணிந்த கங்கணங்களை அவிழ்த்துக் கூரையின் மீது எறிந்து விடுவர். அன்று இரவுதான் மணமக்கள் இல்லற வாழ்க்கையில் ஈடுபடுவர்.

இன்றைய அவசரயுகத்தில் மணமக்கள் திருப்பூட்டுதல் நிகழ்ச்சி முடிந்து, சூரிய வழிபாட்டை முடித்த உடனேயே மணமேடையில் கங்கணம் அவிழ்க்கப்பட்டு அருகுமணப் பாலில் போடப்பட்டு விடுகின்றது.

## பெண்ணெடுத்த சோறு

ஒரு வாரம் கழித்து மணமகள் வீட்டில் தாய்மாமன்கள், அத்தைகள் அனைவரையும் அழைத்துப் புதுத்துணிகள் எடுத்துக் கொடுத்து விருந்து வைக்கப்படும். திருமணத்தின்போது தாய்மாமன் பெண்ணெடுத்ததால், அவர்களுக்கு நன்றி கூறும் முகமாக இவ்விருந்து அளிக்கப்படுகிறது.

திருமணச்சடங்குகள் அனைத்தும் குடும்பத்தின் வளமை கருதிச் செய்யப்படுகின்றன என்பது தெளிவாகும்.

திருமணச்சடங்கு முறைகளைப் பின்னிணைப்பில் நிழற்படங்கள் காட்டுகின்றன.

# எழுதிங்கள் சீர்

எழுதிங்கள் சீர் திருமண நிகழ்ச்சி போன்றே நடைபெறும். இதனை இரண்டாவது திருமணம் என்றும் கூறுவர். ஏழு திங்கள் விரதமிருந்து செய்யும் சீர் ஆதலால் ஏழுதிங்கள் சீர் என்றும், கதிரவன் எழும் [உதயம்] முன் செய்யும் சீர் ஆதலால் எழுதிங்கள் சீர் என்றும் கூறுகின்றனர். நாளடைவில் பேச்சு வழக்கில் எழுதிங்கம்சீர் என்று அழைக்கப்படலாயிற்று.

பெண்ணின் தாய் வீட்டில் இச்சீர் நடைபெறும். திருமண அழைப்புப் போன்றே இச்சீருக்கும் உறவினர்களுக்கு அழைப்பு விடுக்கப்படும். நல்ல நாள் பார்த்து இச்சீரைச் செய்வர். குறித்த அந்நன்னாளில் மாலை ஏழு மணிக்கு உறவினர்கள், நண்பர்கள் சூழ அருமைக்காரர் முகூர்த்தக்கால் நடுவர்.

## புடச்சட்டி தூக்குதல்

ஐந்துவள்ளத் தினைமாவில் நீர் விட்டுப் பிசைந்து அம்மிக்குழவி போல் உருட்டி இரு கூறாகப் பிளந்து நடுவில் ஒரு பெரிய அச்சு வெல்லத்தை வைத்து மூடிவிடுவார்கள். புது மண்பானையில் குறிப்பிட்ட அளவு நீர்விட்டு, அப்பானையின் வாயில் மாங்குச்சிகளை குறுக்கும் நெடுக்குமாகப் பரப்பி, அதன்மேல் இம்மாவுருண்டையை வைப்பார்கள். எழுதிங்கள் சீர் செய்து கொள்ளும் பெண்ணின் சகோதரன் இந்த மண்பானையைத் தூக்கி அடுப்பில் வைப்பான். இதனையே 'புடச்சட்டி தூக்குதல்' என்பர். மாவு நன்றாக வேகும் வரை வேக வைப்பார்கள்.

## குழவி எடுத்தல்

பச்சைப் பந்தலின் கீழ், சீர் செய்து கொள்ளும் பெண்ணை நீராட்டுவர். அங்கு மர உரல் வைக்கப்பட்டிருக்கும். அவ்வுரலின் பின் அப்பெண்ணை நிறுத்துவர். அப்பெண்ணின் சகோதரன், அவளின் தலைமீது இலந்தை முள்ளைக் குடை போல் பிடித்து நிற்பான். அப்போது நாவிதன் உழுபடைக் கொழுவினை நன்றாகக் காய்ச்சிக் கொண்டுவந்து அப்பெண்ணின் அருகில் வைத்து, அதன்மீது மோரினை ஊற்றுவான். சடச்சடவென்று சத்தம் வரும். அப்போது அப்பெண் உரலைக் காலால் உதைத்துத் தள்ளிவிட்டு வீட்டினுள் சென்று விடுவாள். அப்பெண்ணின் கணவனின் சகோதரிகள் உரலில் வைத்திருக்கும் குழவிக்கல்லை தூக்கிக் கொண்டு போய் சீர் செய்து கொள்ளும் பெண்ணின் மடியில் போட்டு விடுவர். இந்நிகழ்ச்சியை ‘குழவி எடுத்தல்’ என்று சொல்லுவர். பின் அப்பெண்ணிற்கு, புளிய ஆக்கை போட்டுத் தாண்ட வைத்து நீராட்டுவர். இதன் பின்னரே உறவினர் அனைவருக்கும் விருந்திடுவர். அப்பெண்ணும் விரதம் முடிப்பாள். இனி இவள் சீர்க்காரியாவாள்.

## மறுநாள் நிகழ்ச்சி

## கோதை மாவு பிளத்தல்

விடியற்காலை நான்கு மணிக்கு, புடச்சட்டி மாவை எடுத்துவந்து வாசற்படியின் மீது வைப்பார்கள். அருமைக்காரியும், சீர் செய்து கொள்ளும் பெண்ணும் அந்த மாவை இரு கூறாகக் கோடரியால் பிளப்பார்கள். இதுவே, ‘கோதை மாவு பிளத்தல்’ எனப்படும். மாவின் நடுவில் வைக்கப்பட்ட வெல்லம் முன்னர் வைத்தது போல் அப்படியே

உருகாமல் இருந்தால் குடும்பத்திற்கு நல்லது என்பர். இனிமேலும் குடும்பம் சிறக்கும் என்பதாகக் கொள்வர்.

### மிடாச்சோறு தோண்டுதல்

சீர் செய்து கொள்ளும் பெண்ணையும், அவள் கணவனையும் மணவறையில் அமரவைத்து மாலையிட்டு, பொட்டிட்டு அருகுமணம் செய்வார் அருமைக்காரர். பின் செஞ்சோறு சுற்றுவார், ஆரத்தி எடுத்து நீராட்டுவார். இதன் பின்னர், சீர்ப்பெண் ஒரு மண்பானையில் சோறாக்கி அச்சோற்றினைக் கரண்டியால் தோண்டி எடுத்து எல்லோருக்கும் போட்டு, தானும் உண்பாள். இதுவே, 'மிடாச்சோறு தோண்டுதல்' எனப்படும்.

இந்த சீருக்காகும் அனைத்துச் செலவுகளையும் தாய் வீட்டாரே செய்வர். தாய் வீட்டினர், எழுதிங்கம் செய்து கொள்ளும் பெண், அவள் கணவன், குழந்தைகள் அனைவருக்கும் புத்தாடை கொடுப்பர். பெண்ணின் சகோதரன் பல சீர்கள் செய்வான். பொன் ஆபரணங்கள் [வளையல், சங்கிலி] அளிப்பார்கள். வசதிக்கேற்ப பணமுடிப்பும் கொடுப்பார்கள். சீர்க்கூடையில் அரிசி, வெல்லம், தேங்காய், பழம், வெற்றிலை, பாக்கு வைத்து, சகோதரன் சீர்க்கூடை எடுத்துவர, பிள்ளையார் கோவில் சென்று வழிபட்டு, கணவன் ஊர் செல்வர். இந்தச் சடங்கு செய்து கொள்ளும் பெண்ணே 'அருமைக்காரி' ஆகும் தகுதி பெறுகிறாள்.

# முழுக்காதுச்சீர்

காங்கய நாட்டில் காடையூரில் அமைந்திருக்கும் காடையீஸ்வரர், வெள்ளையம்மனைக் குலதெய்வமாக வழிபடும் முழுக்காதன் குலத்தினர், 'முழுக்காதுச்சீர்' எனும் சடங்கினைச் செய்கின்றனர். இச்சடங்கினைக் 'காதுகுத்துக் கல்யாணம்' என்றும் சொல்லுவர். இசுலாமிய சர்தார், வெள்ளையம்மனுக்குச் செய்த மாபெரும் உதவிக்காகவே முழுக்காதுச்சீர் ஏற்பட்டது என்று கூறுவர்.

முழுக்காதுச்சீர் இரண்டு குழந்தைகள் பிறந்த பின்னரே செய்யப்படும். ஒரு குழந்தை மட்டும் இருப்பின் மற்றொரு குழந்தைக்குப் பதில் ஆயுதம் வைத்து சடங்கு செய்யப்படும். ஆண்குழந்தை எனில் திருமணத்திற்கு முன்பும், பெண்குழந்தை எனில் பூப்பெய்வதற்கு முன்னும் இச்சடங்கினைச் செய்துவிட வேண்டும்.

முழுக்காதன் குலத்தைச் சேர்ந்த ஒவ்வொருவரும் தங்கள் குலதெய்வக் கோவிலில் வைத்து இச்சடங்கினைச் செய்கின்றனர்.

## சடங்கு செய்யும் மாதம்

ஆடிமாதத்தில் முழுக்காதுச்சீர் நடைபெறுகிறது.

## முழுக்காதுச்சீர் நடைமுறைகள்

முழுக்காதுச்சீர் செய்து கொள்வோர், திருமணச் சடங்கு செய்வதற்கு மேற்கொள்ளும் சடங்குமுறை போன்றே முழுக்காதுச்சீர் செய்வதற்கும் மேற்கொள்கின்றனர்.

சீர் செய்து கொள்ளும் பெண்ணின் தாய் வீட்டில் முறைப்படி எழுதிங்கள் சீர் செய்த பின்னரே முழுக்காதுச்சீர் செய்து கொள்ள

வேண்டும். எனவே, முழுக்காதன் குலத்தாருக்கு எழுதிங்கள் சீர் மிக முக்கியமானதாகிறது.

## நாள்குறித்தல்

ஒரு நல்ல நாளில் முழுக்காதுச்சீர் செய்வதற்கான நேரத்தையும், சீர் செய்யும் நாள் எந்த நாள் என்று குறிப்பிடுவதற்கும் "நாள் குறித்தல்" என்று கூறுகின்றனர்.

## விறகு வெட்டுதல்

முழுக்காதுச்சீர் செய்வதற்கு ஒரு வாரத்திற்கோ அல்லது பத்து நாட்களுக்கு முன்போ ஒரு நல்ல நாளில் 'விறகு வெட்டுதல்' எனும் சடங்கு நடைபெறுகிறது. இந்நாளில் பச்சை மரத்தினை விறகிற்காக வெட்டிக் காயப்போடுவர். இந்த விறகு வெட்டுதல் சடங்கு நடந்தபின் காது குத்துச் சடங்கு முடியும் வரை மிகவும் தூய்மையாகச் சீர்க்காரர்கள் இருக்கவேண்டும். நல்லது கெட்டதுக்குப் போகக்கூடாது. அடுத்த வீட்டுக்குக்கூடப் போகக்கூடாது. எந்தத் தீட்டும் படக்கூடாது.

## மோடியாத்தா கோவில் வழிபாடு

சீர் செய்து கொள்ளும் குடும்பத்தார் முதலில் மோடியாத்தா கோவிலுக்குச் சென்று வழிபடுவர். தற்காலிகமாக ஒரு மோடியாத்தா கோவிலை, தங்கள் பகுதியிலேயே ஏற்படுத்திச் சடங்குகள் செய்வர்.

விநாயகர் கோவிலுக்கு அருகில் ஒரு வட்ட வடிவ இரண்டடி ஆழமுள்ள குழி தோண்டப்படும். ஒரு தேங்காய் மூடி நிறைய நவதானியத்தை நிரப்பி, இதனுடன் கருப்பட்டியும் சேர்த்து அக்குழியின் மையப்பகுதியில் வைக்கப்படும். அக்குழியை ஒரு சதுரக் கல்லால் மூடி அதன் மீது இலந்தை முள்ளை வைத்து மூடிவிடுவர்.

சீர் செய்து கொள்ளும் தம்பதிகளுக்குத் திருமணச் சடங்குகள் போலவே எல்லாச் சடங்குகளும் நடைபெறும்.

வீட்டில் பந்தல் அமைத்து, முகூர்த்தக் காலிட்டு, பந்தலில் குலாலர் கொடுத்த பானைகளில் மங்கலப் பொருட்களை நிரப்பி வைப்பர். வண்ணார் மேற்கட்டி கட்ட வேண்டும். பெற்றோர் வீட்டிலிருந்து சீருக்கு வேண்டிய சாமான்கள் கொண்டு வரப்பெறும். அவைகளை வீட்டு வாசலில் வைத்துத் தீர்த்தத் தண்ணீரைச் சுற்றித் தீபம் ஏற்றப்பெற்று உப்பு இல்லா வீட்டில் வைக்க வேண்டும்.

சீருக்கு வேண்டிய நெல், பச்சரிசி, தேங்காய், பழம், கருப்பட்டி, வெற்றிலை, பாக்கு, நெய், பால், தயிர், புதுத்துணிகள், சீருக்குரிய பாத்திரங்கள் ஆகியவை அவ்வீட்டுக்குள் வைக்கவேண்டும். முழுக்காதன் குலத்தாரைத் தவிர வேறு யாரும் அவ்வீட்டுக்குள் போகக்கூடாது.

மோடியாத்தா கோவிலுக்குச் சென்று முதல்நாள் மூடிய குழியைத் திறந்து பார்ப்பர். குழியினுள்ளே வைக்கப்பட்டிருந்த தேங்காயும், கருப்பட்டியும் கெடாமல் இருப்பதையும், நவதானியம் முளைவிட்டிருப்பதையும் பிறருக்கு எடுத்துக் காட்டுவர். பின்னர் வீடு திரும்புவர்.

இச்சீர் நடைபெறும்போது எந்த ஒரு பொருளையும், சாப்பிட்ட இலையையும் கூட வெளியில் எறியக் கூடாது. அவ்வீட்டினுள் வைத்திருக்கும் ஒரு மிடாவினுள் போட்டு வைப்பர்.

## கருப்புத்தெய்வ வழிபாடு

கருப்புத்தெய்வ வழிபாடு என்பது, சீர் செய்து கொள்ளும் தம்பதிகள், செவ்வாய்க்கிழமையன்று அவர்கள் வீட்டைத் தூய்மைப் படுத்துவதிலிருந்து துவங்குகிறது. புதனன்று இவர்களுக்கு, சீர்ப்பெண்ணின் பெற்றோர், கருப்பு ஆட்டுக்கிடாய் இரண்டு, கருப்புக்கோழி இரண்டு, பித்தளைப் பொம்மைகள் இரண்டு எனக் கொடுப்பர். இரண்டு ஆண் குழந்தைகள் இருப்பின், இரண்டு ஆண் பொம்மைகளும், இரண்டு பெண் குழந்தைகள் இருப்பின், பெண் பொம்மைகள் இரண்டும், ஒரு ஆண், ஒரு பெண் குழந்தைகள் இருப்பின் ஒரு ஆண், ஒரு பெண் பொம்மையும், இரண்டுக்கு மேல் எத்தனை குழந்தைகள் இருப்பினும் ஒரு ஆண் பொம்மையும், ஒரு பெண் பொம்மையும் தருவர். சீருக்குத் தேவையான பொருட்களும், விருந்துக்குத் தேவையான பொருட்களும் கொடுப்பர். அன்று விருந்து நடைபெறும். விருந்து முடிந்த பின் பெற்றோரும், சுற்றத்தாரும் அவரவர் ஊருக்குச் சென்று விடுவர்.

வியாழனன்று, முழுக்காதன் குலத்துப் பெண்கள் சீர் செய்யும் இடத்திற்குச் செல்வர். அப்போது கம்புமாவு, தேங்காய், வாழைப்பழம், சூடம், ஊதுபத்தி, பூ இவைகளைக் கொண்டு செல்வர். ஆட்டுக்கிடாய், கோழி, பொம்மை என இவைகளை எழுதிங்கள் சீர் செய்த ஆண்கள் எடுத்துச் செல்வர். எண்ணெய், எள், மஞ்சள், சந்தனம் என பூசைக்குரிய பொருட்கள் அனைத்தும் எடுத்து வரப்படும். பொம்மைகளை ஆற்று நீரில் அல்லது குளத்து நீரில் கழுவி எடுத்து வருவர். வழிபடும் இடத்தில் தெப்பக்குளம் போல் செய்து, அதன் மீது

பச்சை மூங்கிலில் குடிசை போல் கட்டுவர். தெப்பக்குளத்தின் நான்கு மூலைகளிலும் கரும்பு வைத்துக் கட்டி, அதில் மாவிலைத் தோரணமும் கட்டி அலங்கரிப்பர். சீர் செய்து கொள்வோர் விபூதி, சந்தனம், குங்குமம் இட்டுக் கொள்வர். சீர் செய்து கொள்ளும் பெண்ணின் ஒரு புடவையைக் கொண்டு வந்து அத்தெப்பக்குளத்தில் விரித்துவிடுவர். அதன்மீது பொங்கல், பலி இட்ட ஆடு, கோழிகளின் இறைச்சி, கம்புமாவு ஆகியவற்றை வைப்பர். சீர் செய்வோர், நாவிதன், வண்ணான் ஆகியவர்களைத் தவிர, மற்றவர்கள் அங்கு இருக்கக் கூடாது. எனவே மற்றவர்கள் சென்று விடுவர். அதன்பின் இரண்டு தேங்காய்களை உடைத்து வைத்துப் பூசை செய்து, தெய்வத்தை வழிபடுவர்.

விருந்துண்டபின் மீதமாகும் பொங்கலையும், கறியையும் வீட்டுக்குக் கொண்டு செல்லாமல், வேறு யாருக்கும் தராமல் அவ்விடத்திலேயே குழியைத் தோண்டிப் புதைத்து விடுவர். பின்பு வீடு திரும்புவர்.

### வீரமாச்சி வழிபாடு

வெள்ளியன்று வீட்டைத் தூய்மைப்படுத்துவர். சீர் செய்து கொள்வோர் எண்ணெய் தேய்த்து நீராடுவர். சாமி சிலைக்குச் சிவப்புக் கலந்த நீல வண்ண ஆடை அணிவித்து, பொட்டிட்டு, மலர்களாலும், ஆபரணங்களாலும் அலங்கரிப்பர். கோவிலில் நந்தா தீபம் ஏற்றுவர். பின்னர் உரல், உலக்கை, வடச்சட்டி ஆகியவற்றைத் தூய்மைப் படுத்துவர். அவைகளுக்கு விபூதி, சந்தனம், குங்குமம் இடுவர். உரலுக்கும், உலக்கைக்கும் நூல் சுற்றி வைப்பர்.

சூடம் ஏற்றி அடுப்பை வழிபடுவர். வடச்சட்டியை அடுப்பில் வைத்து, அதில் ஒருபடி, கம்பைப்போட்டு, அத்துடன் வேப்பிலையும் சேர்த்து நன்கு வறுத்தெடுப்பர். அதனை உரலில் இட்டுச் சடங்கிற்காக ஏழுமுறை குத்துவர். குத்தியதை எடுத்துப் புடைத்தெடுப்பர். பின் அதனைப் பானையில் இடுவர். மற்றொரு பானையில் தண்ணீர் வைக்கப்பட்டிருக்கும். ஐந்துபடி, கம்பைப்போட்டுச் சமைத்து, அதைப் பல உருண்டைகளாகப் பிடித்து, தண்ணீருள்ள பெரிய மண்பானையில் போட்டு வைப்பார்கள். அந்தப் பானைகளுக்கு விபூதியிட்டு, சந்தனம், குங்குமம் இட்டு, மலர்களால் அலங்கரிப்பர். பின் அப்பானைகளின் வாயை வெள்ளை மாத்தால் மூடி, அதன் மீது வேப்பங் கொத்துக்களை வைத்து வழிபடுவர். இத்துடன் வீரமாச்சி வழிபாடு முடிவடைகிறது. அதன் பிறகு இரவு விருந்து நடைபெறும்.

சனியன்று மாமன், மைத்துனர்கள் வழிபடும் இடத்தினருகில், களிமண்ணால் ஒரு சிறிய கோவில் போல் செய்வர். அதற்குக் காவியும், சுண்ணாம்பும் அடிக்கப்படும். அதன் பிறகு வழிபாடு நடைபெறும். பின்னர் மதிய விருந்து அளிப்பர்.

ஊர்வலம்

அன்று மாலை, பேழை மூடியில் வெள்ளைத் துணியை விரித்து, அதன்மீது சாமி சிலையை வைப்பர். அதனுடன் விபூதி, சந்தனம், குங்குமம், ஊதுபத்தி, சூடம், சாம்பிராணி, தேங்காய், பழம், வெற்றிலை, பாக்கு, நவதானியம் வைத்து, அதனைச் சீர் செய்து கொள்ளும் பெண் தலையில் வைத்து, கோவிலுக்கு எடுத்துச் செல்வாள். அப்போது எழுதிங்கள் சீர் செய்த பெண்கள் இருவர்,

ஒருவர் கோமயமும், மற்றொருவர் தண்ணீரும் எடுத்துக் கொண்டு, சீர்க்காரப் பெண்ணிற்கு முன்னால் ஒருவரும், பின்னால் ஒருவருமாகச் செல்வர். இவர்களின் தலைக்கு மேல், சீர் செய்து கொள்ளும் பெண்ணின் சகோதரர்கள் வெள்ளைத் துணியை விரித்துப் பிடித்துச் செல்வர். இவர்களின் முன்னால் வண்ணான் மாத்து விரித்துக் கொண்டே செல்வான். அதன்மீது இவர்கள் நடந்து செல்வர். இந்த ஊர்வலம் வாத்தியம் முழங்க, புறப்பட்டுச் செல்லும். ஊர்வலம் வீட்டைவிட்டுப் புறப்படும் முன் பூசை செய்யப்படும். மறுபடியும் கோவிலின் முன்பும் பூசை செய்யப்படும். கோவிலிலிருந்து திரும்பி வீட்டிற்கு வந்தவுடன் மறுபடியும் பூசை செய்யப்படும். பின்னர் விருந்து நடைபெறும்.

ஞாயிறன்று மறுபடியும் ஊர்வலமாகக் கோவிலுக்குப் புறப்பட்டுச் செல்வர். கோவிலின் நுழைவு வாயிலில் பூசை செய்யப்படும். அங்கு ஆட்டுக்கிடாய் பலியிட்டுக் கறி சமைப்பர். ஒரு குதிரை கொண்டு வரப்பட்டு, அதனைக் குளிப்பாட்டுவர். கறி, அரிசி மாவு, முன்னால் செய்த கம்பச் சோற்றுருண்டை, தேங்காய், பழம், சூடம், பத்தி, சாம்பிராணி, மலர்கள் இவைகளை, குதிரையின் மேல் வைத்துக் கோவிலுக்குள் எடுத்துச் செல்வர். சாமிக்குப் பொங்கல் படைத்து வழிபடுவர். காகத்திற்கு இட்டபின் மற்றவர்களுக்கு வழங்குவர்.

வீட்டிற்குச் சாமி சிலையை எடுத்து வந்து பூசை செய்வர். இதன் பின்னர் இரவு விருந்து நடைபெறும்.

அடுத்த நாள் திங்களன்று கோழி பலியிடப்பட்டுச் சமைக்கப்படும். களிமண்ணால் செய்யப்பட்ட சிறிய கோவிலுக்கு, சமைத்தவற்றை

எடுத்துச் சென்று, பூசை செய்து சாமியை வழிபடுவர். சாமி சிலையை அதற்குரிய இடத்தில் வைப்பார்கள். இத்துடன் வீரமாச்சி வழிபாடு முடிவடைகிறது.

இதன்பிறகு, காடையூர் காடையீஸ்வரர் கோவிலில் இருக்கும் காடையீஸ்வரர், பங்கசாட்சியம்மன், வெள்ளையம்மன் ஆகிய தெய்வங்களுக்குத் தனித்தனியாக அபிடேகம் செய்து பூசை செய்வர்.

மூன்று தெய்வங்களுக்கும் அபிடேகப் பூசை நடத்தப்பட்ட போதிலும், வெள்ளையம்மனுக்கு மட்டுமே பொங்கலிடுகின்றனர்.

## வெள்ளையம்மன் வழிபாடு

பொங்கலை, வெள்ளையம்மன் முன் வைப்பர். ஒரு தட்டில் தேங்காய், பழம், ஊதுவத்தி, சூடம் ஆகியவற்றை வைத்து வெள்ளையம்மனுக்குப் பூசை செய்து வழிபடுவர். அப்போது அம்மனுக்கு மாலை அணிவிக்கப்படும்.

வெள்ளையம்மனுக்குப் பூசை செய்து வழிபட்டதும், அருமைக்காரர் காதுகுத்திக் கொள்ளும் குழந்தைகளுக்கும், தாய், தந்தையருக்கும், தாய்மாமனுக்கும் மாலை அணிவிப்பார். பின்பு மீண்டும் பூசை செய்து வெள்ளையம்மனை வழிபடுவர்.

வெள்ளையம்மனுக்குப் பூசை முடிந்ததும், தேங்காய் பழத்தட்டைத் தாய்மாமன் கையில் எடுத்துக் கொடுப்பர். அனைவரும் மேள தாளத்துடன் கோவிலை வலம் வருவர். பின் வெள்ளையம்மன் முன்போ அல்லது அங்கிருக்கும் விநாயகர் முன்போ அனைவரும் அமர்வர்.

## காதுகுத்துத் தொடங்கும்முன் நடைபெறும் சடங்குகள்

காது குத்துவதற்கு முன் சில சடங்குகள் அருமைக்காரரால் செய்யப்படும். இச்சீரை அருமைக்காரர்தான் செய்ய வேண்டும்.

அருமைக்காரர் நிறை செம்பு நீரை எடுத்து மூன்று முறை நீர் விளாவுவார். அடுத்து ஊதுபத்திகளை எடுத்துச் சுற்றுவார். அதனையடுத்து நிறைநாழியை மூன்றுமுறை சுற்றுவார். பின்னர் அருகுமணம் எடுக்கப்படும். மீண்டும் நீர் விளாவி, நிறைநாழி சுற்றப்படும்.

## காதுகுத்துதல்

சடங்குகள் முடிந்ததும், சீர் செய்து கொள்பவரின் குழந்தைகள் தாய்மாமன் மடியில் அமர்த்தப்படுவர். அப்போது அருமைக்காரர், கோவிலில் உள்ள இரும்புக் கொழுவை எடுத்து சூரியன், குலதேவதை முதலான தெய்வங்களை வணங்கிவிட்டு காது குத்திக் கொள்பவரின் காதில் குத்துவதுபோல் மூன்றுமுறை வைத்து எடுப்பார். கொழுவைக் காதில் வைத்து எடுப்பதற்கு முன் காது குத்தப்படும் இடத்தில் சந்தனப்பொட்டு இடப்படும். இந்நிகழ்ச்சி முடிந்ததும், முன்போலவே வழிபாட்டுச் சடங்குகள் செய்யப்படும்.

இந்தச்சீர் முடிந்ததும் குழந்தைகளுக்குப் பொற்கொல்லரால் காதுகுத்தி அணிகலன் அணிவிக்கப்படும். இந்த அணிகலன் செய்யும் பொறுப்பு, தாய்மாமனையே சார்ந்ததாகும். அதற்கான செலவுகளைத் தாய்மாமனே ஏற்றுக் கொள்வார். காதுகுத்துச் சடங்கின்போது தாய்மாமன் முக்கிய இடம் வகிப்பர்.

## கரியகாளியம்மன் வழிபாடு

முழுக்காதுச்சீராகிய காதுகுத்தும் சீர் முடிந்ததும், காடையீஸ்வரர் கோவிலுக்குக் கிழக்குப் பக்கத்தில் அமைந்துள்ள கரியகாளியம்மன் கோவிலுக்கு அனைவரும் செல்வர். அங்கு தேங்காய் உடைத்து, பழம் வைத்து, ஊதுபத்தி ஏற்றி, சூடமேற்றி வழிபடுவர். வழிபட்டபின் பிரசாதத்தை[தேங்காய், பழம்]க் காதுகுத்திக் கொண்ட குழந்தைகளின் தாய், மடியில் வாங்கிக் கொள்வர்.

## மாலை கழற்றல்

காதுகுத்துவதற்கு முன் வெள்ளையம்மன் முன்பாக அருமைக்காரரால் அணிவிக்கப்பட்ட மாலைகளை, காதுகுத்துச்சீர் முடிந்ததும், கரியகாளியம்மன் கோவிலுக்கு வந்து கரியகாளியம்மனை வழிபட்ட பின்பே கழற்றுகின்றனர். கழற்றப்பட்ட மாலைகளைக் கரியகாளியம்மன் கோவில் முன்பாக உள்ள மரத்தில் போட்டு விடுவர். மாலை கழற்றப்பட்ட பின்பு தான், முழுக்காதுச்சீர் [காதுகுத்துச்சீர்] நிறைவடையும்.

முன்பு விரிவாகப் பல நாட்கள் நடைபெற்ற இச்சடங்கு, இப்போது மிகவும் சுருங்கி விட்டதென்றும், பல சடங்குகள் செய்யப்பெறாமல் விடுபட்டுவிட்டன என்றும் கூறப்பெறுகின்றது.

ஒரு வாரத்திற்குமேல் நடைபெறக்கூடிய இச்சடங்கு இன்று ஒரே நாளில் காடையீஸ்வரர் கோவிலில் அபிடேகம், பொங்கல் இவற்றுடன் வழிபாட்டை முடித்து இச்சீரை முடித்து விடுவர்.

இ. இறப்புத்தொடர்பின (முதுமை)

சேமம் அடைத்தல்

வாய்க்கரிசி

ஒப்பாரி

பறை கொட்டுதல்

வாசற்பணம்

சீர்த்தண்ணீர்

குளிப்பாட்டுதலும், நெய்ப்பந்தம் பிடித்தலும்

பச்சைப்பந்தல்

பின்னப்பூப் போடுதல்

கோடி போடுதல்

மஞ்சள் அரைத்துப் போடுதல்

தேர் கட்டுதல்

தேரில் வைத்தல்

சவத்தை எடுத்துச் செல்லல்

சுடுதல்

கட்டிவளத் தானியம்

நீர் பிழிதல்

எரித்தல்

காடாற்றுதல்

அங்கம் கரைத்தல்

புதைத்தல்

தாலி வாங்குதல்

கழுத்தாடை சுற்றுதல்

கருமாதி

இராட்டை கொடுத்தல்

கூரைமேல் சோறு போடுதல்

மோட்சதீபம் ஏற்றுதல்

கருவுற்ற பெண் இறந்தால் செய்யும் சடங்கு

குழந்தை இறந்தால் செய்யும் சடங்கு

கருவாட்டுச் சோறு

# இறப்புச் சடங்குகள் (முதுமை)

தொல்காப்பியர் காலத்திலேயே நிலையாமைக் கருத்து தமிழகத்தில் நிலவி வந்துள்ளது. உலகத்தில் தோன்றியன அனைத்தும் ஒருகாலத்தில் மறைந்துபடுவது இயற்கை. இந்தக் கருத்தை அடிப்படையாகக் கொண்டே புறத்திணையியலில் காஞ்சித் திணையைத் தொல்காப்பியர் படைத்துள்ளார்.

புறநானூற்றில்,

'மன்னா வுலகத்து மன்னுதல் குறித்தோர்' என்பதில், 'மன்னா உலகம்' நிலைபேறற்ற உலகத்தைக் குறிப்பிடுகின்றது. மேலும்,

"ஒருவனை யொருவ னடுதலுந் தொலைதலும்
புதுவ தன்றிவ் வுலகத் தியற்கை"[1]

என்று இடைக்குன்றூர்கிழாரும் பாடியுள்ளார்.

வள்ளுவர் நிலையாமை பற்றி,

"நெருந லுளனொருவன் இன்றில்லை என்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு"[2]

என்று தெளிவுபடுத்துகின்றார். மேலும்,

'உறங்குவது போலும் சாக்காடு'

என்று இறப்பினை மிக உறுதியாகச் சுட்டிச் செல்கின்றார். அதனால், உலகத்தில் வாழும் ஒவ்வொருவருக்கும் என்றோ ஒரு நாள் இறப்பு நிகழ்வதுண்டு. இறப்பு என்பது மனிதனுக்கு மட்டுமின்றி உலகில் தோன்றிய உயிர் வாழினங்களான புல், பூண்டு, செடி, கொடி,

பறவை, விலங்கு, மனிதன் அனைத்துக்கும் பொருந்துவதாகும். மனிதன் இறந்தபிறகு சிறப்பான முறையில் புதைப்பதோ, எரிப்பதோ, சுடுவதோ முறையாக நிகழ்ந்து வருகிறது. ஒவ்வொரு சமுதாயத்திலும் பிறப்புக்குரிய சடங்குகள் அமைந்திருப்பன போலவே இறப்புக்குரிய சடங்குகளும் அமைந்துள்ளன.

கொங்கு வேளாளர்களின் சமுதாயத்தில் உள்ள இறப்புத் தொடர்பான சடங்குகள், இங்கு சுட்டப்பெறுகின்றன.

## சேமம் அடைத்தல்

ஒருவர் இறந்த செய்தியைக் கேள்விப்பட்டவுடன் கொங்கு நாவிதன், கொங்கு வண்ணான் இருவரும் இறந்த உடல் அழிவதினின்றும் தடுப்பதற்குரிய செயல்களைச் செய்வர். இறந்த உடலின் வாய், மூக்கு, காது, வெளியேற்றும் உறுப்புகள் ஆகியனவற்றைப் பருத்தித்துணி அல்லது பஞ்சை வைத்து அடைப்பர். பிறகு வாய்க்கட்டு, கைக்கட்டு, கால் கட்டு, கால் பெருவிரல் கட்டு என வெள்ளைத் துணியால் கட்டுவர். இது 'சேமம் அடைத்தல்' எனப்படும். இறப்புச் செய்தியை முதலில் பங்காளிகளுக்கே தெரியப்படுத்துவர். அவர்கள் வருவதற்குள் இறந்த உடலுக்குத் தேர் கட்டுவதா அல்லது பாடை கட்டி எடுப்பதா என்பதை முடிவு செய்து, அதற்கேற்றாற்போல் நாற்காலியில் அமர்த்தியோ அல்லது படுக்கவோ வைத்து விடுவர். பங்காளிகளை அடுத்து மிக நெருங்கிய உறவினர்களுக்கு இறந்த செய்தி தெரிவிக்கப்படும். பின்னர் மாதாரி அழைக்கப்பட்டு. அவன் மூலமாக உற்றார் உறவினர்களுக்கு இழவுச் செய்தியைத் தெரியப்படுத்துவர். பங்காளிகள் வந்து சீர் செய்து சாமி கும்பிடுவர்.

### வாய்க்கரிசி

இறந்தவரது பங்காளி வீட்டுப்பெண், நெல்லை உரலில் போட்டு, சடங்கிற்காக இரண்டு, மூன்று குத்துக் குத்தி ஒரு தட்டில் போட்டு எடுத்து வருவாள். இதுவே 'வாய்க்கரிசி' ஆகும். சவத்தின் தலைமேட்டில் தீபம் ஏற்றி, சவத்துக்கு மாலைபோட்டு, வாய்க்கரிசி உள்ள தட்டில் தேங்காய் உடைத்து வைத்து, பழமும் வைத்து, பத்தி ஏற்றி, சூடம் ஏற்றிச் சவத்தை வழிபடுவர். நிறைசெம்புத் தண்ணீரையும் தலைமேட்டில் வைத்து விடுவார்கள். வழிபடும்போது, இறந்தவரின் ஆன்மா இறைவனோடு கலந்து விட்டதாக எண்ணி இறந்தவரின் குடும்பத்தாரும், பங்காளிகளும், குடும்பத்தில் உள்ளவர்களும் தங்கள் குடும்பம் நன்றாக இருக்க வேண்டும் என்று வழிபடுவர். பிறகே அங்குள்ள பெண்கள் அனைவரும் அழுவார்கள். பங்காளிப் பெண்கள் மாரடித்து அழுவர். இவர்கள் ஒப்பாரிப் பாடல்களைப் பாடி [ஒப்பாரி வைத்தல்] அழுவார்கள். "செத்த பிணத்தைச் சீரிட்டு அழு" என்று ஒரு பழமொழியே உண்டு.

சுடுகாட்டில், கட்டை அடுக்கி அதன்மேல் சவத்தை வைத்த பிறகு, சவத்துக்கு வாய்க்கரிசி போடப்படும். எரிப்பதற்குப் பதிலாக புதைப்பதாக இருந்தால் குழிமேட்டில் சவத்தை வைத்து வாய்க்கரிசி போடப்படும்.

### ஒப்பாரி

இழவு வீட்டிற்கு வரும் பெண்கள் இறந்தவர் வீட்டுப் பெண்களைக் கட்டி அழும் பொழுது பாடும் பாடலுக்கு 'ஒப்பாரி' என்று பெயர். அப்போது இசைத் தொடர்பான ஆழமான கருத்துடைய

பாடல்களைப் பாடிக் கொண்டு அழுவர்.[3] இதனால் அவர்களின் நினைவாற்றல், கற்பனைத்திறன், செவிவழிச் செய்திகள் முதலானவை வெளிப்படுகின்றன. அவர்களின் கேள்விச் செல்வமும் இதனால் புலப்படுகின்றது. இறந்தவர் பெருமையைப் பாடுவர். நெருங்கிய உறவினர்கள் ஊரின் எல்லையிலிருந்து முக்காடு போட்டபடி, தலைமேல் கைவைத்துப் பாடி அழுது கொண்டுவருவர்.

இசைத்தன்மை எல்லாத் துன்பங்களையும் போக்கக்கூடியது. ஒப்பாரி என்பது அழுகைப் பாட்டு என்று அழைக்கப்படும்.

தொல்காப்பியரும் புறத்திணையியலில்,

"கழிந்தோர் தேஎத்து அழிபடர் உறீஇ
ஒழிந்தோர் புலம்பிய கையறு நிலையும்"[4]

என்று கூறுகிறார்.

## பறைகொட்டுதல்

சாமி கும்பிட்ட பின்னர்க் கொங்குப்பறையன் வாசலில் சங்கு ஊதி, பறை கொட்டுவான். இதனைப் புறநானூறும்,

"ஓரி னெய்தல் கறங்க"[5]

எனச் சாப்பறை பற்றிக் குறிப்பிடுகின்றது.

நாலடியார்,

"கணங்கொண்டு சுற்றத்தார் கல்லென் றலறப்
பிணங்கொண்டு காட்டுய்ப்பார் ......................
..................................................................
டொண்டொண்டொண் என்னும் பறை."[6]

எனவும், திருமந்திரம்,

"நாட்டுக்கு நாயகன் நம்மூர்த் தலைமகன்
காட்டுச் சிவிகையொன் றேறிக் கடைமுறை
நாட்டார்கள் பின்செல்ல முன்னே பறைகொட்ட"[7]

எனவும் சாப்பறை கொட்டப்பட்ட செய்தியைக் கூறுகின்றன.

## வாசற்பணம்

இறந்தவரின் வீட்டின் முன்பாகப் பந்தல் போடப்படும். இழவுகாண வருபவர்கள் அமர்வதற்கு ஏற்ற வசதிகள் செய்யப்படும். இழவு வீட்டார் பறையனுக்கு ஒரு வேட்டியைக் கொடுப்பர். அவன் அதை வாசலில் விரித்து விடுவான். அதில் அவர்கள் நெல், சோளம், கம்பு போன்ற தானியங்களைக் கொண்டு வந்து கொட்டுவார்கள். இதற்கு 'வாசல்தானியம்' என்று பெயர். இதனையடுத்து அங்கு வரும் உற்றார் உறவினர்கள் அத்துணியில் பணத்தைப் போடுவர். இது 'வாசற்பணம்' என்று சொல்லப்படும். இதில் வரும் சிறுதொகையை இடுகாட்டில் வைத்து சரிபாதி பறையனுக்கும், நாவிதனுக்குக் கால்பாதியும், வண்ணான், மாதாரி மற்றும் ஏழை மக்களுக்கு மற்ற கால் பாதியும், பங்கிட்டுக் கொடுக்கப்படும். நன்றாக வாழ்ந்து வயதாகி இறந்தவராக இருந்தால், பறையன் பறையடித்துக் கொண்டு, இறந்தவரின் பெருமையைக் கூறியும், இறந்தவர் சொர்க்கலோகம் செல்ல வேண்டியும். வேடமிட்டு ஆடிப்பாடி [கூத்தாட்டம்] வாசலில் அமர்ந்திருப்பவர்களிடம் வாசற்பணம் வசூல் செய்வான்.

இம்முறை இறந்தாரின் குடும்பத்தாருக்குப் பணச்சுமை இல்லாமலிருப்பதற்காக ஏற்படுத்தப்பட்டது.

## சீர்த்தண்ணீர்

இறந்தவர்க்கு மிக நெருங்கிய உறவினர்கள் வந்த பின்புதான் சவத்தை எடுப்பதற்கான காரியங்களைத் தொடங்குவர்.

இறந்த உடலைக் குளிப்பாட்டுவதற்கு என்று எடுத்து வரப்படும் தண்ணீர் 'சீர்த்தண்ணீர்' எனப்படும். பொதுக் கிணற்றிலிருந்தோ அல்லது ஆற்றிலிருந்தோ நீர் எடுத்து வரப்படும். தண்ணீர் கொண்டுவரச் செல்லும் பங்காளி, மாமன், மைத்துனர் என மூன்று பேரோ அல்லது ஐந்து பேரோ குளித்துத் திருநீறு இட்டு, பின்னரே பானைகளில் நீரை எடுத்து வருவர். அப்போது சங்கு, தாரை, தப்பட்டை முழங்க அழைத்து வரப்படுவார்கள்.

## குளிப்பாட்டுதலும், நெய்ப்பந்தம் பிடித்தலும்

இறந்தவர் உபயோகித்த கட்டிலைக் கொண்டு வந்து, அதன்மீது சவத்தை வைப்பார்கள். இறந்தவர் ஆணாக இருந்தால் நாவிதன் முகமழித்து விடுவான். பிறகு பேரப்பிள்ளைகள் சவத்தைச் சுற்றி நெய்ப்பந்தம் பிடித்துக் கொண்டு நிற்பர். இறந்தவர் ஆணாக இருந்தால் மனைவியும், பெண்ணாக இருந்தால் கணவனும் சவத்துக்கு எண்ணெய், அரப்பு வைப்பார்கள். இறந்தவரின் மக்கள், பேரன் பேத்திகள் எண்ணெய், அரப்பு வைத்து விட்டுச் சுற்றி வருவர். பிறகு பங்காளிகளும் எண்ணெய், அரப்பு வைப்பார்கள். இச்சடங்கு முடிந்தவுடன் நாவிதன், சீர்த்தண்ணீரையும், இளநீரையும் கொண்டு சவத்தைக் குளிப்பாட்டுவான். அப்போது இறந்தவரின் மனைவியை, இறந்தவரின் சகோதரி அழைத்து வந்து சவத்தின் காலடியில் உட்கார வைப்பாள். அப்பெண்ணிற்குத் தண்ணீர் ஊற்றிக் குளிப்பாட்டுவாள்.

அப்பொழுது வண்ணாத்தி மாத்து [சேலை] கொடுப்பாள். அதனைத் தலைமீது வைத்துக் கொண்டு, சவத்தைச் சுற்றி வந்தபிறகு வீட்டினுள் அழைத்துச் செல்வர். நாவிதன் சவத்திற்குத் திருநீறு, சந்தனம், பொட்டு இட்டு, நெற்றியில் ஒரு ரூபாய் நாணயத்தையும் வைத்துவிடுவான். அதன் பிறகு பச்சைப் பந்தலில் கொண்டுபோய் வைத்து விடுவர்.

## பச்சைப்பந்தல்

வீட்டின் முன்புறத்தில் அப்போது வெட்டிக் கொண்டு வந்த பச்சை மாறாத, இலைகள் உதிராத நொச்சிக் குச்சிகளையும், பாச்சாங்குச்சிகளையும் நட்டு, அதன் மேல்புறம் வெள்ளை வேட்டியை விரித்து விடுவர். அதன் மீது வேப்பந்தழைகளையும், ஆவாரங் கொத்துகளையும் பரப்பி வைப்பார்கள். இதுவே 'பச்சைப் பந்தல்' எனப்படும்.

## பின்னப்பூப்போடுதல்

இறந்தவரின் மகள் வயிற்றுப் பேரனால் செய்யப்படும் சீர் இது. இவனை நாட்டுக்கல் இருக்கும் இடத்திற்கு அழைத்துச் சென்று, குளிக்கச் செய்வர். பின் நெற்றியில் திருநீறு, பொட்டு இட்டு, உருமால் கட்டியபின், கொங்குப் பண்டாரம், தான் கட்டிக் கொண்டு வந்த பூமாலையை அவன் கழுத்தில் அணிவிப்பான். ஒரு மூங்கில் கூடையினுள் பூக்களைப் போட்டு, கூடையைச் சுற்றிப்பூக்களைக் கோர்த்துக் கட்டி விடுவான். கூடையினுள் கண்ணடக்கமும் வைக்கப்படும். அவன், தலையில் சும்மாடு வைத்து, அதன் மீது கூடையை வைத்துவிடுவர். தாரை, தப்பட்டை முழங்க அவன் பச்சைப்

பந்தலுக்கு அழைத்து வரப்படுவான். அங்கு சவத்திற்கு எதிரே திரும்பி நின்று, கூடையிலுள்ள பூக்களைச் சவத்தின் மீது போட்டுவிட்டுத் திரும்பிப் பார்க்காமல் சென்று விடுவான்.

### கோடி போடுதல்

இறந்தவர் ஆணாக இருந்தால் பங்காளிகள் சேர்ந்து ஒரு கோடியும், மாமன், மச்சினர்கள் சேர்ந்து ஒரு கோடியும் போடுவார்கள். இறந்தவர் பெண்ணாக இருந்தால், புகுந்த வீட்டுப் பட்டும், பிறந்த வீட்டுப் பட்டும் போடப்படும். பட்டு என்பது சாதாரண புதிய சிவப்புச் சேலையைக் குறிக்கும்.

### மஞ்சள் அரைத்துப் போடுதல்

கோடி போட்ட சடங்கு முடிந்தபின், பங்காளிப் பெண், மஞ்சள் அரைத்து நாவிதனிடம் கொடுப்பாள். அவன், சவத்தின் கண், காது, மூக்கு இவற்றை மஞ்சள் வைத்து மூடிவிட்டு, கண்களுக்குக் கண்ணடக்கம் வைப்பான். இதனையடுத்து கோடி மீது பங்காளிப் பெண், தான் அரைத்த மஞ்சளைத் தெளிப்பாள், நாவிதன் பன்னீர் தெளித்து விடுவான். பின்னர் அனைவரும் சவத்தை வழிபடுவர். சவத்தைத் தேருக்கு எடுத்துச் செல்வர்.

### தேர் கட்டுதல்

பச்சைப் பூவரசு மரத்தை வெட்டி, ஆசாரி தேர் கட்டுவான். தேரைப் பல்லக்குப் போன்றும், படகு போன்றும் கட்டுவர். வண்ணான், தேரைச் சுற்றியும் மாத்தைக் கட்டுவான். தேரில் சவத்தை அமர்த்தி வைக்க, கோடித்துணிகளுக்குள் வைக்கோலைத் திணித்து மெத்தை செய்து வைப்பர். தேர் மலர்களால் அலங்கரிக்கப்படும். வாழைக்

கன்றுகளை நான்கு மூலைகளிலும் கட்டிவிடுவர். தென்னம்பாளை, இளநீர் கட்டப்படும். இறந்தவர் விரும்பும் உணவுப்பொருட்களையும் வைப்பார்கள். தேரின் உச்சியில் கலசம் வைத்துக் கட்டப்படும். தேர், விநாயகர் கோவிலுக்கு அருகில் வைக்கப்பட்டு இருக்கும். தேருக்கான செலவுகள் அனைத்தும் இறந்தவரின் மகளைச் சார்ந்தது.

## தேரில் வைத்தல்

சவத்தைத் தேரில் வைத்து வேட்டிகளினால் இறுகக் கட்டிவிடுவர். சவத்துக்கு எதிரே தேரில் முகம்பார்க்கும் கண்ணாடி கட்டிவிடப்படும். இறந்தவரின் மனைவி வெள்ளைத் துணியால் முக்காடு போட்டு, தேரின் அருகில் வந்து, சவத்தை வணங்கி, சவத்தின் மீது வெற்றிலை பாக்கு வைப்பாள். அதனை, அங்கிருப்போர் எடுத்து அப்பெண்ணிடம் கொடுத்து விடுவர். அவளது உட்கழுத்துச் சரடைக் கழற்றி, சவத்தின் கால் பெருவிரலில் கட்டி விடுவர். சகோதரனே அப்பெண்ணை வீட்டினுள் இருந்து தேர் வைக்கும் இடத்திற்குக் கூட்டிக் கொண்டு வருவான். மற்றவர்கள் பின் தொடர்ந்து வருவர். அப்பெண்ணை வீட்டினுள் விட்ட பின்னரே, சவத்தை எடுத்துச் செல்வர்.

## சவத்தை எடுத்துச் செல்லல்

சவத்தை இரவு முழுவதும் வீட்டினுள் வைத்திருந்தார்களெனில் [இராப்பிணம்], அதனை எடுத்துச் செல்லும் சமயம், ஒரு கோழிக்குஞ்சின் கழுத்தை அறுத்து அதை வீட்டைச் சுற்றி இழுத்து வந்து, சவத்துடனே இடுகாட்டுக்கும் எடுத்துச் சென்று புதைப்பர். இதற்கு ஒரு காரணம் சொல்லுகின்றனர். 'இராப்பிணமிருந்தால்

துணைப்பிணம் கேட்கும்' என்கின்றனர். நல்லநேரம் பார்த்தே தேர் எடுத்துச் செல்லப்படும். இறந்த நிமிடத்திலிருந்து சங்கு ஊதி, சகுண்டி அடித்துத் தப்பட்டை கொட்டிக் கொண்டே இருப்பர். சவத்தை எடுத்துச் செல்லும் போதும், இவ்வொலிகளை முழக்கிக் கொண்டு சவத்தின் முன்னே செல்வார்கள். சவத்தை வீட்டிலிருந்து தேருக்கு எடுத்து வரும்போது, கால்கள் வெளியே இருக்கும்படி எடுத்துப் போவார்கள். வண்ணான், தேர் செல்லும்போது தீப்பந்தம் பிடித்துச் செல்வான். சவத்தை எடுத்துச் செல்லும்போது மனைவி வரமாட்டாள். மக்கள், பேரன் பேத்திகள், உறவுப்பெண்கள் எனப் பெண்கள் அனைவரும், தெருவின் முச்சந்தி வரைக்கும் சவத்தின் பின்னர்ச் செல்வர். அவ்விடத்திலேயே அனைவரும் கட்டிப்பிடித்து ஒப்பாரி வைத்து அழுவர். பிறகு வீட்டுக்கு வந்து இறந்தவரின் மனைவியைக் கட்டிப்பிடித்து அழுவார்கள். சவத்தைத் தெரு முச்சந்தி வரைக்கும், வீட்டை நோக்கி இருக்குமாறும், பிறகு இடுகாட்டை நோக்கி இருக்குமாறும் தேரைத் திருப்பிக் கொள்வர். இந்நிகழ்ச்சியைக் காணும்போது பிற்காலக் கவிஞர் ஒருவர் 'வீடுவரை உறவு, வீதி வரை மனைவி, காடுவரை பிள்ளை' என்று பாடிய பாடல் நினைக்கத் தக்கதாயுள்ளது.

### சுடுதல்

சிதையானது மரம் மற்றும் சாண எருவால் தயார் செய்யப் பட்டிருக்கும். உடல் தெற்கு வடக்காக அதன்மீது வைக்கப்படும். உலர்ந்த வைக்கோலால் உடல் மறைக்கப்பட்டு, சிதை முழுவதும் சிறுசிறு துளைகள் விட்டு, களிமண்ணால் பூசப்படும். இறந்தது தாய்

எனில் மூத்த மகனும், தந்தை எனில் இளைய மகனும் சிதைக்குத் தீ மூட்டுவர். இதற்கு முன்பு, ஒரு மண்குடத்தில் நீர் எடுத்துக் கொண்டு தோளில் வைத்து சிதையை மூன்று முறை சுற்றி வருவர். ஒவ்வொரு முறை சுற்றும்போதும் நாவிதன் குடத்தில் ஓட்டை போடுவான். மூன்றாவது சுற்றில் ஓட்டை போட்டு நீர் சிந்திக் கொண்டே வரும்போது கீழே போட்டு உடைத்து விடுவர். பிறகு சிதைக்கு, திரும்பி நின்று பின்புறமாகக் கையை நீட்டிக் கொள்ளி (தீ) வைப்பர்.

சிதை முழுவதும் எரிந்து சாம்பலாகும் வரை கொங்குப் பறையன் அவ்விடத்திலேயே இருந்து கவனித்துக் கொள்வான். குடம் உடைத்தலைப் பட்டினத்தடிகள்,

"கொன்பெற்ற மைந்தரும் பின்வலம் வந்து குடமுடைத்தார்"[8]

எனப் பாடியுள்ளார்.

குடத்தில் நீர் இருப்பின் பயன் உண்டு. நீர் இல்லாத ஓட்டைக் குடமாகில் பயனேதும் இல்லை. அதுபோலத்தான் உயிரற்ற உடம்பும். இதுவே குடம் உடைத்தல் மூலம் உணர்த்தப்படுகிறது.

"குடம் நீர் நிறைந்திருக்கும் பொழுதுதான் அதற்கு மதிப்பு. அதுவும் பயன்படக் கூடியதாக அமையும். குடத்திலிருந்து நீர் கீழே சொரிந்து விட்டால் அதனால் பயன் ஏதும் இல்லை. உடம்பிலிருந்து உயிர் நீங்கி விட்டாலும் அப்படித்தான், உயிரற்ற உடலும் நீரற்ற குடமும் ஒன்று என்பதைத்தான் குடம் உடைப்பதன் மூலம் உணர்த்துகின்றார்கள் போலும் என்று எண்ண வேண்டியுள்ளது. மூன்று ஓட்டைகள் போடுகின்றார்களே அது ஏன் என்ற வினாவும் எழும்பும். மனிதன் வாழ்ந்த காலத்தில் தன் முன்னோர்க்காகவும், தனக்காகவும்,

தன்வழிமுறையினர்க்காகவும் வாழ்ந்தான்.

"தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும்

பொன்போற் புதல்வர்"[9]

என்ற புறநானூற்று அடிகள் தன் குலத்திலிருந்த முன்னோர்களுக்காக கருமம் செய்வது பெறப்பட்டது.

தனக்காக வாழ்வது திருமணம் செய்துகொண்டு இல்லறக் கடமைகளை ஆற்றுவதினால் பெறப்பட்டது.

"சான்றோ னாக்குதல் தந்தைக்குக் கடனே"[10]

என்பதில் வழிமுறையினர்க்குப் பயன்படுவது பெறப்பட்டது.

இம்மூன்றும் கழிந்தன என்பதைக் காட்டத்தான் மூன்று ஓட்டைகள் போடுகின்றனர். இனிமேல் ஒன்றுக்கும் பயன்படாது என்பது கருத்து. பயனற்ற ஓட்டைக் குடத்தை வீட்டில் வைத்தால் வீட்டை அடைக்கும். ஓட்டைக் குடத்தால் பயனுமில்லை. அதுபோலத்தான் உயிரற்ற உடம்பும். எனவே, அதைத் தீயிட்டு அழித்து விடுகின்றனர். உயிரற்ற உடம்பு பயனற்றது, அழிக்கப்பட வேண்டியது என்பதை உணர்த்துவதற்காகத்தான் குடம் உடைக்கும் நிகழ்ச்சி நடைபெறுகின்றது. வாழ்க்கைத் தத்துவத்தை உணர்த்தும் ஒரு அரிய செய்தி சாதாரணக் குறியீடாகச் சடங்காகச் செய்யப்படுகின்றது"[11] என்று அ.விசுவநாதன் குறிப்பிடுகின்றார்.

## கட்டிவளத்தானியம்

இறந்தவரின் வீட்டில் பறையனுக்கு அளந்து ஏழு வள்ளம், அளக்காமல் ஏழு வள்ளம் என்று நெல் போடுவர். இழவுக்கு வரும்

உறவினர்கள் வாசற்பணத்தோடு மட்டுமில்லாமல் பலவகை தானியங்களையும் கொண்டுவந்து கொட்டுவர். இதனை இடுகாட்டில் கூடியுள்ள ஏழைகளுக்கு வழங்குவர். இதுவே 'கட்டிவளத் தானியம்' எனப்படுகிறது.

பெண்கள் வீடு திரும்பியவுடன் வீட்டைத் தூய்மைப்படுத்துவர்.

## நீர் பிழிதல்

பசுவின் சாணமும் செம்மண்ணும் சிறிதளவில் கலந்து, சவம் வைக்கப்பட்டிருந்த இடத்தை வழித்து விடுவர். குளித்து விட்டு அவ்விடத்தில் விளக்கு ஏற்றுவர். தெருவில் பெண்கள் அழுது முடித்து வரும் பொழுதே, மகள் முறையில் இருக்கும் மூன்று பெண்களும் கிணற்றில் குளித்துவிட்டு ஈரச் சேலையுடன் வீட்டிற்கு வருவர். பின் கிழக்கு முகமாய் அமர்ந்து விளக்கைப் பார்த்து வழிபடுவர். இதற்கு 'நீர் பிழிதல்' என்று பெயர். தீ மூட்டிய பின் இடுகாட்டிலிருந்து வந்த ஆண்கள் அனைவரும் வீட்டினுள் ஏற்றப்பட்டிருக்கும் விளக்கைப் பார்த்து வழிபட்டுச் செல்வர்.

## எரித்தல்

திடீரென தற்கொலை செய்து கொண்டு இறப்பவர்களை வீட்டிற்கே கொண்டுவராமல் (வீட்டில் இறந்து விடாமல் வெளியிடத்தில் இறந்திருந்தால்) எந்த இடத்தில் இறந்தாரோ, அங்கிருந்து சுடுகாட்டிற்கு எடுத்துச் செல்லுவர். அங்கு விறகுகளை அடுக்கி, சவத்தை அதன் மீது வைத்து, அதன் மேலேயும் விறகுகளை வைத்து எரித்து விடுவர்.

## காடாற்றுதல்

இரண்டாம் நாள் சுடுகாட்டில் எரித்த இடத்தில், பங்காளிகள் கிணற்றிலிருந்து நீர் எடுத்துச் சென்று அங்கத்தின் மீது ஊற்றுவர். அவை கரைந்த பிறகு வீட்டிற்கு வந்து விடுவர். இதுவே 'காடாற்றுதல்' எனப்படும்.

## அங்கம் கரைத்தல்

மூன்றாம் நாள் இறந்தவரது உறவினரும், சுற்றத்தாரும் சுடுகாட்டிற்குச் செல்வர். கொள்ளி வைத்தவர், நாவிதனின் துணையுடன் இறந்தவரது உடல் எலும்புகளை [வெந்து சாம்பாலாகி இருக்கும் அங்கம்] ஒரு புதிய பானையில் சேகரித்து, வெள்ளைத் துணியால் அப்பானையை மூடிக் கட்டிவிடுவர். இப்பானையை வீட்டில் கொண்டு வந்து வைத்து விடுவர். பதினாறு நாட்கள் இதற்குத் தீபமேற்றி, கற்பூரம் காண்பித்து வழிபட்டு வருவர். பதினாறாம் நாளன்று புனித ஆற்றிற்கு எடுத்துப்போய்க் கரைத்து விடுவர்.

## புதைத்தல்

இறந்தவர் ஆணாக இருந்தாலும், பெண்ணாக இருந்தாலும் சவத்தைப் புதைக்குங்கால் சடங்குகள் செய்யப்படுவதில்லை. தேங்காய் உடைத்து, சூடமேற்றி, பங்காளிப் பெண்ணும் மற்றவர்களும் வழிபட்டபின் ஒப்பாரி வைத்து அழுவர். சவம் பாடைகட்டி எடுக்கப்படும். திருமந்திரம், பாடையைக் "காட்டுச்சிவிகை"[12] எனச் சுட்டுகின்றது. புறநானூறும், "கால்கழி கட்டிலிற் கிடப்பி"[13] எனக் குறிப்பிடுகின்றது. பச்சை மூங்கில் தப்பைகளால் பாடைகட்டி, அதன்மீது வைக்கோல் போட்டு, வெள்ளைத்துணியைப் பரப்பிக்

கட்டிவிடுவர். இறந்தவர் உபயோகித்த பொருட்களையும் இடுகாட்டில் புதைக்கும் குழிக்குள்ளேயே போட்டு விடுவர். சவத்தைக் குழியில் இறக்கியவுடன் மகன் தனது புறங்கையால், மண்ணை மூன்று முறை தள்ளுவான்.

பிறகு மற்றவர்களும் மண்ணைத் தள்ளுவார்கள். பறையன் குழியை மூடிவிடுவான். அனைவரும் வீட்டிற்கு வந்து, அங்கு ஏற்றி வைத்த விளக்கைப் பார்த்து வழிபடுவர். புதைப்பதற்குச் குழி தோண்டிய மண்வெட்டியை வீட்டின் முன்னே வைத்து, அதற்குப் பங்காளிப் பெண் தண்ணீர் ஊற்றிக் கழுவி விடுவாள். இறந்தவருக்குக் காது குத்தவில்லை எனில், நாவிதன் காரை முள்ளால் காதைக் குத்திவிடுவான். பின்னரே குழியில் வைக்கப்படும்.

இவ்வாறு சுடுதல், எரித்தல், புதைத்தல் எனும் செய்திகளை மணிமேகலையும்,

"சுடுவோர் இடுவோர் தொடுகுழிப் படுப்போர்"[14]

எனக் குறிப்பிடுகின்றது.

## தாலி வாங்குதல்

இரண்டாம் நாள் இரவு [கருமாதிக்கு முந்திய இரவு] இறந்தவரின் மனைவி அணிந்திருந்த அத்தனை நகைகளையும் கழற்றி விடுவர். வாய்க்கரிசி வைத்த பெண், இறந்தவரின் மனைவியின் சரட்டை அறுத்துத் தாலியைப் பித்தளைத் தட்டில் உள்ள பாலில் போட்டு விடுவாள். சரட்டை ஒரு பானையினுள் போட்டு இதனுடன் தாம்பூலம், காணிக்கை போன்றவைகளையும் போட்டு நாவிதனிடம் கொடுத்து விடுவாள். அவன், அதனை நீர் இருக்கும் இடத்திற்குச் சென்று கரைத்து விடுவான்.

## கழுத்தாடை சுற்றுதல்

இறந்தவரின் மனைவிக்கு, புகுந்த வீட்டுக் கழுத்தாடை சுற்றப்படும். [வெள்ளைப் புடவையைக் கழுத்தில் சுற்றுவர்] உடன் பிறந்தவன், பிறந்த வீட்டுக் கழுத்தாடை சுற்றுவான். கோழிக்குஞ்சுக் குழம்பு வைத்து விதவைப் பெண்ணுக்கும், உடன் அமர்ந்திருக்கும் பெண்களுக்கும் சோறு போடுவர்.

## கருமாதி

மூன்றாம்நாள் மக்கள், பேரன், பேத்திகள், பங்காளிகள் போன்றோர் எண்ணெய், அரப்பு வைத்துக் குளிப்பார்கள். இதனைக் கருப்புக் கழித்தல் அல்லது தீட்டுக் கழித்தல் என்று சொல்லுவர்.

நல்ல நேரம் பார்த்துப் பங்காளிகள், உறவினர்கள் சுடுகாட்டுக்குச் செல்வர். நாவிதன், பால், நெய் எடுத்துக் கொண்டு முன்னே செல்வான். சுடுகாட்டுக்கு முன்பாக உள்ள ஆவாரஞ் செடியின் மீது பாலையும், நெய்யையும் ஊற்றி விடுவான். பிறகு அனைவரும் வீட்டிற்கு வருவர். இந்நிகழ்ச்சிக்குச் 'செடிமேல் தண்ணீர் ஊற்றுதல்' என்று பெயர்.

## இராட்டை கொடுத்தல்

கருமாதியெல்லாம் முடிந்த பிறகு ஒருநாள், உடன்பிறந்தான், விதவைப் பெண்ணுக்கு இராட்டை வாங்கிக் கொடுப்பான். இதற்கு, "இராட்டை நூற்றல் சீர்"[15] என்று பெயர். இதனைப் புறநானூறும், "பருத்திப்பெண்டிர்"[16] எனக் குறிக்கின்றது. இறையனார் களவியல் உரையில், "நுண்ணிய பலவாய பஞ்சின் நுனிகளாற் கைவல் மகடூஉத் தனது செயற்கை நலந்தோன்ற ஓரிழைப் படுத்தலாம் உலகத்து நூல்

நூற்றல் என்பது"[17] எனக் குறிக்கிறது. தாயாதிகள் அரிசி, வெல்லம் கொண்டு போய் விதவைப் பெண்ணுக்குக் கொடுப்பார்கள். அங்கு, கொள்ளு இடித்துச் சோறும் போடுவர்.

## கூரை மேல் சோறு போடுதல்

மஞ்சள் அரைத்துப் போட்ட பெண் சிறிய புது மண்பானையில் புறங்கையினால் மூன்று கை அரிசியும், உள்ளங்கையினால் மூன்று கை அரிசியும் போட்டு, அவ்வீட்டினுள்ளேயே பொங்கல் வைப்பாள். இப்பொங்கலில் கரும்புச்சர்க்கரை போட்டு, நடுவீட்டில் வைப்பாள். இதனருகில் ஒரு முக்காலியில் இறந்தவரின் வேட்டி, துண்டு, அரைஞாண் கொடி, வெற்றிலை, பாக்கு ஆகியனவும் வைக்கப்படும். ஊதுபத்தி ஏற்றி, திருநீற்றின் மீது சூடம் ஏற்றி, சாம்பிராணிப்புகை காட்டுவர். இறந்தவர் பெண்ணாக இருந்தால் புடவை, மாங்கல்யம் வைத்து வழிபடுவர். செடிமேல் தண்ணீர் ஊற்றச் சென்றவர்கள் வந்தவுடன் அனைவரும் அதனை வழிபட்டுத் திருநீறு இட்டுக் கொள்வர்.

பங்காளிப் பெண், அப்பொங்கலை ஒரு தட்டத்தில் கொட்டி, வாசலுக்குக் கொண்டு வருவாள். அங்கு இறந்தவரின் மனைவி, மக்கள், மருமக்கள், பேரன், பேத்திகள், பங்காளிகள், உடன் பிறந்தோர் மற்றும் விருப்பமுள்ளவர்கள் என ஒவ்வொருவராகக் கூரையின் மீது மூன்று கை நீரைத் தெளித்து சோற்றைப் போட்ட பின்னர், மூன்று கை நீரைத் தெளிப்பார்கள். இதற்குக் 'கூரைமேல் சோறு போடுதல்' என்று பெயர்.

கூரைமேல் போட்ட சோற்றைக் காகம் உண்ண வேண்டும். காகம் சோறு எடுத்தால் இறந்தவர் ஆன்மா சாந்தியடைந்ததாகக் கருதுவர். காகம் சோறு எடுக்கவில்லை எனில் இச்சடங்கு வேறு ஒரு நாளில் திரும்பவும் செய்யப்படும்.

இரட்டிப்பு மாதத்தில் இறந்திருந்தால், அனைத்துச் சடங்குகளையும் இறந்த அன்றே செய்து விடுவர்.[18]

கொள்ளி வைத்தவனுக்கும், பின்னப்பூப் போட்டவனுக்கும் மொட்டை அடிக்கப்படும். இவர்கள் குளித்துத் திருநீறு அணிந்து விநாயகர் கோவிலுக்கு வருவார்கள். கோவிலின் முன்பு வண்ணான் மாத்து (வெள்ளைத் துணி) விரிக்கப்பட்டிருக்கும். இவர்கள் இருவரும் விநாயகனை வழிபட்டு, அம்மாத்தில் கிழக்கு நோக்கி அமர்வர். மாமன் வீட்டார், இவர்களுக்குப் புதுத்துணிகளையும், பணத்தையும் கொண்டு வந்து கொடுப்பார்கள். மற்ற உறவினர்களும் பணம் வைத்துக் கொடுப்பார்கள். அப்போது நாவிதன், இன்னார் துணிமணி கொடுத்தார்கள், இன்னார் இவ்வளவு பணம் கொடுத்தார்கள் என உரக்கக் கூறுவான். உடன்பிறந்தோர், மாமன்மச்சினர் முறையுள்ளோர் அரிசி, பருப்பு, வறுகடலை, சர்க்கரை, பழம், புதுத்துணிகள் போன்றவற்றை விருந்தாகக் கொண்டு வந்து வைப்பார்கள். ஐந்தாம் நாளன்று விதவைப் பெண்ணின் சகோதரன் விருந்திடுவான். உறவினர்களும் விருந்திடுவர்.

முப்பதாம் நாள், சகோதரன், விதவைப்பெண்ணைத் தன் வீட்டிற்கு அழைத்துச் செல்வான். அங்கு விருந்து இடப்படும். பிறகு அவளது வீட்டில் கொண்டு போய் விட்டு வருவான். இதன்பிறகுதான் அப்பெண் வீட்டைவிட்டு வெளியில் செல்வாள்.

இறந்தவரின் வீட்டார் துயரத்தோடு இருப்பதால் வருவோரைக் கவனிக்க இயலாது. இறந்த வீட்டில் உணவு சமைக்க இயலாது என்பதால், உறவினர்களும், பக்கத்து வீட்டு நண்பர்களும் வருவோருக்கு உணவு செய்து (காபி, தேநீர் உட்பட) அளிப்பார்கள். இறந்தாரின் குடும்பத்தினர்க்குப் பொருளாதாரச் சுமை ஏற்படக் கூடாது என்பதற்காக இம்முறை பழங்காலந்தொட்டு வழக்கத்தில் இருந்தது. ஆனால் நாகரிகம் கருதி இன்று இவ்வழக்கம் மறைந்து விட்டது.

## மோட்சதீபம் ஏற்றுதல்

பேச்சு வழக்கில், 'கல்லெடுத்துக் கருமாதி செய்யப்போகிறேன்' என்பர். இறந்தவரின் நினைவாக ஒரு கல்லை நட்டு, அதனருகில் தீபமேற்றி வழிபடுவர். இதனை 'மோட்ச தீபம் ஏற்றுதல்' என்று சொல்லுவர்.

இச்சடங்கு ஊருக்கு ஊர் வேறுபடும். வேறுசிலர் எருக்கிலையை வட்டமாகக் கோர்த்து அதில் தீபத்தை ஏற்றி வைத்து கிணற்றிலோ, ஆற்றிலோ கொண்டுபோய் விடுவார்கள். தீபம் கீழே விழாமல் அப்படியே மிதந்தால் இறந்தவர் மோட்சத்துக்குச் சென்று விட்டதாக எண்ணி வழிபட்டு வந்துவிடுவர்.

## கருவுற்றபெண் இறந்தால் செய்யும் சடங்கு

ஏழு மாதத்திற்குக் குறைவாகவுள்ள கருவுற்ற பெண் இறந்து விட்டால், அப்பெண்ணை அப்படியே புதைத்து விடுவார்கள். முன்போல் சடங்குகள் முடித்து, ஒருநாள், சாலையின் ஓரத்தில் சுமைதாங்கிக்கல் ஒன்றை நட்டு வைப்பர். சாலையில் போவோர்,

வருவோர் சிலர், சுமைகளுடன் செல்வார்கள். புல்கட்டு, விறகுக் கட்டு, மூட்டை முடிச்சு போன்ற சுமைகளை எடுத்துச் செல்வோர், இக்கல்லின் மீது சுமைகளை வைத்துவிட்டு, சிறிது ஓய்வெடுத்து, மறுபடி சுமையைத் தூக்கிச் செல்வர். இக்கல்லின் மீது சிலர், பெயர்களையும் நினைவுக்காகப் பொறித்து வைக்கின்றனர். இறந்த பெண் சுமையோடு இறந்து விட்டாள் என்பதற்காக இப்படிச் செய்கின்றனர்.

ஏழு மாதத்திற்கு மேலாகிய கருவுற்ற பெண் இறந்தாள் எனில் அப்படியே புதைக்க மாட்டார்கள். வயிற்றைக் கீறி, குழந்தையை வெளியே எடுத்துத்தான் புதைப்பர்.

கொங்கு நாவிதனுடைய கண்களைத் துணியால் கட்டி விடுவர். அவனிடத்து ஒரு நீண்ட குச்சியில் கத்தியைக் கட்டிக்கொடுத்து விடுவர். குழிக்குள் வைத்த அப்பெண் சவத்தைச் சுற்றி பெண்கள் நின்று மறைத்துக்கொண்டு, நாவிதனிடத்து இருக்கக்கூடிய கத்தியைத் தொப்புளுக்குக் கீழே படுமாறு வைப்பார்கள். பிறகு நாவிதன் வயிற்றைக் கீறிவிடுவான். பிறகு குழந்தையை வெளியில் எடுத்து இறந்த தாயின் அருகில் படுக்க வைத்துவிடுவர். கணவன் முதலில் மண்ணைத் தள்ளுவான். பிறகு உறவினர்கள் மண்ணைத் தள்ளுவார்கள். குழியைப் பறையன் மூடிவிடுவான். [பெண்கள், கருவுற்ற பெண் இறந்து இவ்வாறு செய்ய நேரும்போது மட்டுமே இடுகாட்டுக்கு வருவார்கள்]

## குழந்தை இறந்தால் செய்யும் சடங்கு

குழந்தையின் அம்மத்தா [அம்மாவின் தாய்] இடுகாட்டிற்கு எடுத்துச் செல்வாள். அங்கு கரி உரைத்துப் பொட்டிட்டு, காரை முள்ளில் காது குத்தி, அரைஞாணையும் கழற்றி விடுவர். இச்செயல்,

"குழவி யிறப்பினு மூன்றடி பிறப்பினும்
ஆளன் றென்று வாளிற் றப்பார்"[19]

என்று புறநானூற்றுப் பாடலை நினைவு படுத்துகிறது.

## கருவாட்டுச்சோறு

தலைச்சன் குழந்தை இறந்தால் மட்டுமே இந்தச் சடங்கு செய்யப்படும். மூன்றாம் நாள் கருமாதி அன்று குழந்தையின் தாய்க்குத் தலைக்குக் குளிப்பாட்டி, வீடுகளைத் தூய்மைப்படுத்துவர். இறந்த குழந்தையின் பெற்றோர்களுக்குப் புதுத்துணிகள், தாய்வழிப் பெற்றோரினால் எடுத்துக் கொடுக்கப்படும். அதை அவர்கள் அணிந்து கொள்வர். இறந்த குழந்தையின் தகப்பன், உறவினர்கள், முன்னர்ச் சொன்ன செடிமேல் தண்ணீர் ஊற்றும் சடங்கைச் செய்வர். அவர்கள் அங்கு சென்று வருவதற்குள் வீட்டில் சில சடங்குகளைச் செய்து முடிப்பார்கள். புதுப்பானையில் வைத்த சோற்றை, வேக வைத்த கருவாட்டுடன் பிசைந்து மூன்று உருண்டைகளாகச் செய்வர். இறந்த குழந்தையின்தாய், வீட்டினுள் பேழைமூடியில் மண்டியிட்டு உட்காருவாள். இச்சோற்று உருண்டைகள் நிலைப்படிமீது வைக்கப்பட்டிருக்கும். அப்பெண் கைகளைப் பின்னால் கட்டிக் கொண்டு, அவ்வுருண்டைகளை ஒவ்வொன்றாக மூக்கினால் தள்ளிவிடுவாள். இதனையே 'கருவாட்டுச்சோறு தள்ளுதல்' என்று சொல்லுவர்.

நிலையாமை பற்றிய எண்ணம் மக்களிடத்து என்றும் உண்டு. திருமணத்தைச் சிறப்பாக நடத்துதல் போலவே, இறப்புச் சடங்குகளையும் குறைவின்றி நிறைவேற்றுகின்றனர். இறந்த வருத்தம் இருப்பினும் அதையே எண்ணி நாளை வீணே கடத்தாமல் ஒருசில நாட்களிலேயே நடைமுறை வாழ்க்கைக்குத் திரும்பி விடுகின்றனர்.

கொங்குவேளாளக் கவுண்டர் இனத்தில் வைதீக முறைப்படி, இறந்த ஓராண்டு கழித்து திதி கொடுக்கும் வழக்கம் பண்டில்லை.

# பிறப்புத்தொடர்பின அடிக்குறிப்புகள்

1. புறநானூறு, 188
2. செ. காளியாத்தாள் அவர்கள் அளித்த பேட்டி நாள்:18.5.'98
3. சிலப்பதிகாரம், அடைக்கலக்காதை, 22-24
4. ச. பழனியம்மாள் அவர்கள் அளித்த பேட்டி நாள்:20.3.'99
5. கந்த புராணம், வள்ளியம்மை திருமணப்படலம், 166 - 168
6. மு.கூ.நூ, அடைக்கலக்காதை, 37-39
7. துவலை : ஆவாரங் கொழுந்து, மாசிப்பத்திரி, அப்பக்கோவைத்தளை, அருகம்புல், அவரைக் கொழுந்து, மஞ்சள் போன்றவற்றை அரைத்த விழுது. இது மூலிகையாக இருப்பதனால், உடம்பிற்குக் குளிர்ச்சி ஊட்டுவதாகவும், தோலில் ஒவ்வாமை ஏற்படாமலும் இருக்கச் செய்யப்படுகிறது.
8. பின்னிணைப்பு எண், 5
9. புறநானூறு, பாடல்கள், 19, 319, 322, 334, 373
10. திருத்தொண்டர் புராணம் (திருநாவுக்கரசு நாயனார் புராணம்) பாடல், 1285
11. டாக்டர் ஆறு. இராமநாதன், நாட்டுப்புறப்பாடல்கள் காட்டும் தமிழர் வாழ்வியல், ப.195

# திருமணத்தொடர்பின அடிக்குறிப்புகள்

1. பாரதிதாசன், குடும்பவிளக்கு, ப.65
2. திருக்குறள், 50
3. தொல்காப்பியம், நூற்பாக்கள், 1088 - 1091
4. சி. சுப்பிரமணியன், கொங்கு நாட்டு மங்கல வாழ்த்துப்பாடல், ப.55
5. தொல்காப்பியம், நூற்பா, 1219
6. P.V. Jagadish Ayyar, South Indian Customs, P.44
7. அகநானூறு, 86 : 6,7
8. சிலப்பதிகாரம், மங்கல வாழ்த்துப் பாடல், 50, 51
9. நற்றிணை, 393
10. P.V. Jagadish Ayyar, Op. Cit, P.165
11. Ibid, P.164
12. சிலப்பதிகாரம், கொலைக்களக்காதை, 55
13. நம்மாழ்வார், நாலாயிரத் திவ்யப்பிரபந்தம்,

    (6ம் திருவாய்மொழி - 7உண்ணுஞ்சோறு), 1
14. தே.ப.சின்னச்சாமி, கொங்கு வேளாளர் சடங்குகளில் பண்பாடு, ப.54
15. கு. அருணாச்சலக்கவுண்டர், கம்பர் இயற்றிய மங்கல வாழ்த்தும்

    இதை அவர் பாடிய சரித சமுதாயப் பின்னணியும், ப.2
16. புறநானூறு, 218 : 1 - 4
17. குறிஞ்சிப்பாட்டு, 232

18. எசு.ஏ.ஆர். சின்னச்சாமிக் கவுண்டர்,

கொங்கு வேளாளர் புராண வரலாறு, ப.277

19. மு.கூ.நூ, களிற்றியானை நிரை, 86 : 8 - 14

20. பெருங்கதை, இலாவண காண்டம், கடிக்கம்பலை, 209 - 235

மண்ணு நீராட்டியது, 44 - 50

21. தே.ப.சின்னச்சாமி, மு.கூ.நூ, ப.93

22. மேலது, ப.94

23. புலவர் செ. இராசு, கம்பர் தமிழ், ப.90

24. மேலது,

25. ஊர்க்கவுண்டர் வீடு, ஓடைப்பட்டி

26. பின்னிணைப்பு எண், 4

27. தொல்காப்பியம், நூற்பா, 1088

28. குறிஞ்சிப்பாட்டு, 231, 232

29. ஆண்டாள், நாலாயிரத் திவ்யப் பிரபந்தம், நாச்சியார்

திருமொழி, (6-ஆந் திருமொழி) பாடல், 6

30. பின்னிணைப்பு எண், 4

# இறப்புத்தொடர்பின அடிக்குறிப்புகள்

1. புறநானூறு, 76 : 1,2
2. திருக்குறள், 336
3. பின்னிணைப்பு எண், 6
4. தொல்காப்பியம், நூற்பா, 1025
5. புறநானூறு, 194 : 1
6. நாலடியார், 25
7. திருமந்திரம், 197
8. பொ.வே.சோமசுந்தரனார், பட்டினத்துப் பிள்ளையார் திருப்பாடல்கள், பொது, 27
9. புறநானூறு, 9 : 3,4
10. மேலது, 312
11. டாக்டர் அ. விசுவநாதன், சமுதாயச் சிந்தனைகள், பக்.95,96
12. திருமந்திரம், மேலது,
13. புறநானூறு, 286 : 4
14. மணிமேகலை, சக்கரவாளக்கோட்டமுரைத்த காதை, 66
15. கணவன் இறந்துபட்டதால், மனைவி தனிமைப்படுத்தப்படுவாள். அதனால், அவளுக்குப் பிழைப்பதற்கு ஒரு வழியும், தனிமையைப் போக்க உதவும் ஒரு கருவியாகவும், இராட்டையை வாங்கிக் கொடுத்துள்ளனர். இதுவே, 'இராட்டைநூற்றல் சீர்' என்று சொல்லப்படும்.
16. புறநானூறு, 125 : 1, 326 : 5

17. இறையனார் களவியல், ப. 14

18. இரட்டிப்பு மாதம் என்பது, எடுத்துக்காட்டாக பங்குனி கடைசிநாள் இறந்தால், மறுநாள் சித்திரை பிறந்து விடுகிறது. அதனால் மறுநாள் எதுவும் செய்யக்கூடாது. இதனையே இரட்டிப்பு மாதம் என்பர். ஆதலால் இறந்த அன்றைக்கே அனைத்துக் காரியங்களும் செய்யப்பட்டு விடும்.

19. புறநானூறு, 74 : 1,2

## அ. பிறப்புச்சடங்குகளில் ஏற்பட்டுள்ள மாற்றங்கள்

வளைகாப்பு

பிறப்புச் சடங்கு

பெயர் வைத்தல் சீர்

குளியூட்டுச்சீர்

குழந்தைச்சடங்குகள்

பச்சை குத்துதல்

பூப்புச்சடங்கு

## ஆ. திருமணச் சடங்குகளில் ஏற்பட்டுள்ள மாற்றங்கள்

பட்டினிச்சோறு

உருமால் கட்டுதல்

நாட்டுக்கல் வழிபாடு

துணை மாப்பிள்ளை, துணைப்பெண்

மணமகன் வருகை

திருமணம்

கலப்புத் திருமணம்

மறுமணம்

கைகோர்வை

மங்கல வாழ்த்து

புலவர் வாழ்த்து

## இ. இறப்புச் சடங்குகளில் ஏற்பட்டுள்ள மாற்றங்கள்

ஒப்பாரி

பின்னப்பூப் போடுதல்

தேர் கட்டுதல்

கொள்ளி வைத்தல், மண் தள்ளுதல்

கருமாதி

மொட்டை போடுதல்

விருந்து போடுதல்

இரட்டை நூற்றல்

கைம்பெண்கள்

# இற்றை நாள் மாற்றங்கள்

கொங்கு வேளாளக் கவுண்டர்களின் பழக்க வழக்கங்கள் முன் உள்ள இயலில் ஆராயப்பட்டுள. இன்றைய கால நிலையில் பழக்க வழக்கங்களில் நிறைய மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன. இவ்வியலில் இன்றியமையாத ஒரு சில 'இற்றைநாள் மாற்றங்கள்' மட்டும் சுட்டப்பெறுகின்றன. [அடிக்குறிப்பு எண்கள் தகவல் வழங்கியவர்களைக் குறிப்பன]

## அ. பிறப்புச் சடங்குகளில் ஏற்பட்டுள்ள மாற்றங்கள்

### வளைகாப்பு

ஒரு பெண்ணுக்குக் கருத்தரித்தல் தொடங்கிக் குழந்தை பிறக்கும் வரை, கொங்கு வேளாளக் கவுண்டர்களின் சமூகத்தில் மூன்று சடங்குகள் 1. ஐந்திற்கு இடுதல், 2. வளைகாப்பு, 3. கட்டுச் சோற்று விருந்து என்பவை முன்னர் வழக்கத்தில் இருந்தன. ஆனால், இன்றைய நிலையில் காலச்சூழல், போக்குவரத்து நிலை, பணச்செலவு போன்ற காரணங்களால் முன்னர்ச் செய்த மூன்று சடங்குகளையும் ஒன்றாகச் சேர்த்து ஏழாம் மாதம் மட்டும் வளைகாப்பு அல்லது கட்டுச்சோற்று விருந்து என்ற பெயரில் சடங்கினை நடத்தி வருகின்றனர்.

### பிறப்புச்சடங்கு

பிறப்புச் சடங்கில், முன்னர், கொங்கு நாவிதனின் மனைவியே மருத்துவச்சியாக இருந்து மகப்பேறு பார்க்கும் நிலை இருந்தது. இன்றைக்கு இந்நிலை மாறிவிட்டது. ஏனெனில் நல்ல பயிற்சி பெற்ற மருத்துவச்சிகள் கிடையாது. எங்கோ ஒரு சில கிராமங்களில் மட்டுமே உள்ளனர்.

மருத்துவ அறிவியல் வளர்ந்துவிட்ட நிலையில் மாற்றம் ஏற்பட்டது. அதனால் மருத்துவமனைக்குச் செல்லும் பழக்கம் வந்துவிட்டது.

குழந்தை பிறந்த செய்தியைக் கொங்கு வண்ணான் மூலமே கணவன் வீட்டாருக்குத் தெரியப்படுத்துவர். இந்த நிலையும் மாறிவிட்டது. காரணம் என்னவெனில் தொலைபேசி, தந்தி போன்ற வசதிகள் ஏற்பட்டு விட்டன.

தாயையும், சேயையும் தனித்த அறையினுள் இருக்கச் செய்வர். இன்றைக்கு இப்பழக்கமும் மறைந்து விட்டது. மருத்துவ மனையிலிருந்து வந்தவுடன் தனித்த அறையினுள் தங்கவைக்காமல் நேரே வீட்டினுள்ளே அனுமதிக்கின்றனர். குழந்தை பிறந்த பதினாறாம் நாளன்று வீட்டைத் தூய்மைப்படுத்துகின்றனர். குழந்தை பிறந்தவுடன் செய்யும் சடங்குகள் மறைந்து விட்டன.[1]

### பெயர் வைத்தல் சீர்

பெயரிடும் சடங்கில் மாற்றமில்லை. எனினும் இன்றைக்கு இச்சடங்கு அருகி வருகின்றது. குழந்தைகளின் நட்சத்திரம் பார்த்துப் பெயர் வைக்கும் முறை ஏற்பட்டுள்ளது.[2] நாகரிகம் கருதி திரைப்பட நடிகர், நடிகர்களின் பெயர்களை இடுகின்றனர். வீட்டில் ஒரு பெயரும், பள்ளியில் ஒரு பெயரும் வைக்கும் நிலையும் ஏற்பட்டுள்ளது.[3]

### குளிப்பூட்டுச்சீர்

இச்சீர் முற்றிலுமாக மறைந்துவிட்டது.

### குழந்தைச்சடங்குகள்

இன்றைக்குக் காதுகுத்தும் சடங்கு முன் காலத்தில் நடைபெற்றதுபோல விரிவாக நடத்தப் பெறுவதில்லை.

கல்வித்தொடக்கம் என்று சொல்லக்கூடிய எழுத்தாணிப்பால் வைக்கும் மரபு முற்றிலுமாக மறைந்துவிட்டது.

### பச்சைகுத்துதல்

இன்றைய நிலையில் எவரும் பச்சை குத்திக் கொள்வதில்லை. இப்பழக்கம் மறைந்து விட்டது.

### பூப்புச்சடங்கு

நாகரிகம் கருதி வண்ணான் மூலமாகச் செய்தி அனுப்பும் பழக்கம் பெரும்பாலும் நகர்ப்புறங்களில் இல்லாமல் போய்விட்டது.

இன்றைக்குப் பெண்கள் இளம் பருவத்திலேயே [பத்து வயது முதல்] உரிய வயது வரும் முன்னரே பருவமடைந்து விடுவதனாலும், பெண் குழந்தைகளை முந்தைய காலம் போல் இல்லாமல், கல்வி வளர்ச்சி வேண்டிப் படிக்க அனுப்புவதினாலும் திரட்டிச் சீரைப் பிரபலமாகச் செய்வதில்லை.

ஆனால் சிலர், திருமணத்திற்கு முந்தின இரவு 'திரட்டிச் சீர்' என்று பெயரளவில் செய்கின்றனர்.[4] அச்சீரில் செய்யப்படும் 'குடிசை கட்டுதல்' சடங்கு செய்யப்படுவதில்லை. மணையில் வைக்கப்படும் தட்டச்சீரை விநாயகர் கோவிலுக்கு எடுத்துச் செல்வதில்லை.

இன்றைக்குப் பெரும்பாலும் வீட்டளவில் 'தாய்மணை' மட்டும் வைத்துச் சீர் செய்கின்றனர்.

## ஆ. திருமணச் சடங்குகளில் ஏற்பட்டுள்ள மாற்றங்கள்

திருமணங்கள் தொண்ணூறு விழுக்காடு மண்டபங்களில்தான் நடைபெறுகின்றன. கிராமங்களில் பழமை விரும்பிகள், மண்டபங்களில் திருமணத்தை வைத்தாலும் கூட எல்லாச் சீர்களையும் முறையாகச் செய்வதில் ஈடுபாடு காட்டி வருகின்றனர். ஆனால் நகரத்தில் உள்ளோர் எல்லாச் சீர்களையும் செய்வதில் அவ்வளவாக நாட்டம் செலுத்துவதில்லை. திருமணத்திற்குப் பங்காளிகள், உறவினர்கள் மட்டுமின்றி நண்பர்களையும் அழைக்கும்முறை ஏற்பட்டுள்ளது.

முற்காலத்தில் திருமணங்கள் மூன்று நாட்கள் நடைபெற்றன. முதல்நாள் விருந்து. இது 'மாமன் விருந்து' என்று சொல்லப்படும். அன்றைய செலவு முழுவதும் தாய் மாமனையே சார்ந்தது. இவ்விருந்து மணமகன், மணமகள் அவரவர் வீட்டில் தனித்தனியே நடைபெறும்.

இரண்டாம் நாள் விருந்து 'ஊர்ப் பொது விருந்து' என்று சொல்லப்படும். அன்றைய தினத்தைக் 'கல்யாணம்' என்றும் சொல்லுவர். இவ்விருந்தில் பெரும்பாலும் ஊரிலுள்ள அனைவரும் கலந்து கொள்வர். திருமணத்தன்று வராமல் இருந்தால்கூட, இவ்விருந்தில் கண்டிப்பாகக் கலந்து கொள்வர். இதுவும் மணமகன், மணமகள் இருவர் வீட்டிலும் தனித்தனியே நடக்கும்.

மூன்றாம்நாள் நிகழ்ச்சி 'திருப்பூட்டல்' ஆகும்.

இன்றைக்குத் திருமணம் என்பது ஒருநாள் அளவில் சுருங்கிவிட்டது. கோவிலில் மிக நெருங்கிய உறவினர்களை மட்டும் வைத்துத் திருமணம் செய்து விடுகின்றனர். பின்னர் ஒரு நாளில் வரவேற்பு விழாவை மண்டபத்தில் வைத்துக் கொள்கின்றனர்.[5]

திருமணமண்டபங்களிலும், கோவில்களிலும் திருமணங்களை நடத்துவதால் சீர்கள் பெருமளவில் குறைக்கப்பட்டு விட்டன. தாங்கள் இருக்கும் இடத்தை விட்டுத் திருமண மண்டபங்கள் தொலைவில் இருப்பதால் சில சடங்குகளைச் செய்ய முடியாமல் விட்டுவிட்டனர். இதனால் நாளடைவில் சடங்குகள் மேலும் குறைந்து தெரிய வாய்ப்பில்லாமலேயே போய்விட்டது. சடங்குகளைத் தெரிந்து கொள்ளும் ஆர்வமின்மை காரணமாகவும் சடங்குகள் மறைந்து விட்டன.[6]

தாய்மாமனுக்கு அளிக்கும் சிறப்புரிமை, மரியாதை போன்றவை இன்றளவும் அப்படியே உள்ளன. ஏனெனில் மாமன்சீர் மூலமாக வரும் வருவாயை யாரும் இழக்க விரும்பவில்லை. இதுவும் ஒரு காரணம்.

விறகு வெட்டுதல், நெல் போட்டு வைத்தல், மடைக்கலம் வைத்தல், சீர்த் தண்ணீருக்குப் போதல், கோயில்மாலை, நாழி அரிசிச்சாடு, குப்பாரி கொட்டுதல், கட்டிலேற்றி வருதல், விடுதிவீடு, பொன்பூட்டல், புதுக்கலச் சோறு, மாமன் பெண்ணெடுத்தல், சட்டுவச்சோறு, பாத அணி அணிதல், பெண்ணெடுத்த சோறு முதலிய சடங்குகள் இன்றைக்கு மறைந்து கொண்டு வருகின்றன. சில சீர்கள் மட்டும் பழைய வழக்கப்படி நடைபெறுகின்றன.[7]

முன்னர் நிச்சயதாம்பூலத்தன்றே வெற்றிலை பாக்குச்சீர், தாலிக்குப் பொன் தருதல், உப்பு வாங்குதல் சீர்கள் நடைபெற்றன. தற்சமயம் நிச்சய தாம்பூலத்தைத் திருமண மண்டபத்திலே திருமணத்திற்கு முந்திய இரவே நடத்துகின்றனர். அதனால் உப்பு வாங்குதல் சீர் அப்பொழுதே செய்யப்படுகின்றது. நிச்சய தாம்பூலம்

முன்னரே செய்யப்பட்டு விட்டாலும், உப்பு வாங்குதல் சீர் மட்டும் திருமணத்திற்கு முந்திய இரவே செய்யப்படுகின்றது. உப்பு வாங்கிய பிறகு எந்த அமங்கலக் காரியங்களுக்கும் [நெருங்கிய உறவினர்] செல்லக்கூடாது என்பதற்காக இவ்வாறு செய்கின்றனர்.[8]

சீர் செய்து நடைபெறும் திருமணங்களிலும் சீரே இல்லாமல் நடைபெறும் திருமணங்களிலும் முகூர்த்தக்கால் போடுதல், தாய் மாமன் மணப்பெண்ணுக்கு மாலை இடுதல், பொட்டிடுதல், மங்கல வாழ்த்துப் பாடுதல் ஆகியன மட்டும் எல்லாத் திருமணங்களிலும் இன்றளவும் நடைபெற்று வருகின்றன.[9]

### பட்டினிச்சோறு

சீர் செய்து நடைபெறும் திருமணங்களில் 'பட்டினிச்சோறு' என்பது கடைப்பிடிக்கப்படுகிறது. பெரும்பாலும் இன்று திருமணங்கள் மண்டபங்களில் நடைபெறுவதினால் இம்முறை கடைப்பிடிக்கப் படுவதில்லை.

### உருமால் கட்டுதல்

திருமணத்திற்கு முந்திய இரவு இச்சீர் செய்யப்படுகின்றது. முற்காலத்தில் சேலை போல் உள்ள நீளமான பட்டுத்துணியை வாங்கி உருமால் கட்டுவர். இன்றைக்குக் கடைகளில் 'டர்பன்' என்ற பெயரில் முன்னரே செய்து வைக்கப்பட்ட உருமால் வாங்கி அணிவித்து விடுகின்றனர்.

### நாட்டுக்கல் வழிபாடு

கிராமங்களில் சீர் செய்து நடைபெறும் திருமணங்களில் இன்றும் நாட்டுக்கல் வழிபாடு உள்ளது. திருமண மண்டபங்களில்

நடைபெறும் திருமணங்களில் நாட்டுக்கல் வழிபாடு இல்லை. விநாயகர் வழிபாடு மட்டும் உண்டு.

## துணை மாப்பிள்ளை, துணைப்பெண்

அக்காலத்தில் மூன்று நாட்கள் திருமணம் நடைபெற்றபோது நிறைய சடங்குகள் இருந்தன. அதனால் துணை மாப்பிள்ளை, துணைப்பெண் [பெண்ணுக்குத் தோழி] தேவை நிறைய இருந்தது. அன்றைக்கு நிச்சய தாம்பூலம் முடிந்த பிறகு மணப்பெண் வெளியில் எங்கும் செல்ல மாட்டாள்.

இன்றைக்குத் திருமணம், திருமண மண்டபங்களில் நடைபெறுவதனாலும், ஒரு நாள் அளவில் சுருங்கி விட்டதானாலும் துணை மாப்பிள்ளை, துணைப்பெண் இவர்களின் தேவை அவசியமில்லாமல் போய்விட்டது. மணவறையில் திருமணத்தின்போது மட்டும் நண்பர்களையோ, உறவினர்களையோ துணை மாப்பிள்ளை, துணைப் பெண்ணாக அழைத்துக் கொள்ளும் நிலை ஏற்பட்டுள்ளது.

இவர்களின் துணை இல்லாமல் போனதால் விபரீதங்கள் ஏற்பட வாய்ப்புண்டாகிறது. உதாரணமாக சமீபத்தில் நடந்த ஒரு திருமணத்தில் மணப்பெண் அலங்காரம் செய்து கொள்ள அழகு நிலையத்திற்குச் சென்றார். அங்கு முகம் கழுவும்போது முகத்திற்குச் சோப்புப் போட்டு விட்டு, அருகில் இருப்பது சுடு தண்ணீர் என்பது தெரியாமல் அச்சுடுதண்ணீரை அப்படியே எடுத்து முகத்தில் ஊற்றிக் கொண்டார். முகம் வெந்து விட்டது. அதனால் திருமணத்தைச் சில நாட்கள் தள்ளிப் போடவேண்டிய நிலை ஏற்பட்டது. இதுபோன்ற விபரீதங்களைத் தடுக்கும் பொருட்டே பெரியவர்கள் அக்காலத்தில்

துணை மாப்பிள்ளை, துணைப்பெண் என்ற பழக்கத்தை வைத்துள்ளனர் என்பது தெரிய வருகிறது.

### மணமகன் வருகை

முற்காலத்தில் மணமகனைக் குதிரை மீது அமர்த்தி மணமகன் வீட்டிலிருந்து மணமகள் வீட்டிற்கு அழைத்து வந்தனர். இன்று மணமகன் வருகையிலும் மாற்றம் ஏற்பட்டுள்ளது. மணமகன் ஊரிலிருந்து மண்டபத்திற்கு மகிழ்வுந்தில் அழைத்து வரப்படுவார். பின் மண்டபத்திலிருந்து அருகிலிருக்கும் விநாயகர் கோவிலுக்கு மணமகன் சென்ற பின், அவ்விடத்திலிருந்து மணமகனை அழைத்து வருவதையே 'மணமகன் வருகை' என்று சொல்லுகின்றனர்.[10]

### திருமணம்

கொங்கு வேளாளர் திருமணங்கள் மணமகள் இல்லத்திலேயே நடந்து வந்தன. இன்றைக்குத் திருமண மண்டபங்களில் நடைபெறுகின்றன.

சிலர் கோவிலில் திருமணத்தை எளிமையாக முடித்துவிட்டு, திருமண வரவேற்பு விழாவைத் திருமண மண்டபத்தில் சிறப்பாக நடத்துகின்றனர்.

அரசியல் கட்சியினர் வீட்டுத் திருமணமாகில் அரசியல் தலைவர் முன்னிலையில் திருமணம் நடத்தப்படுகிறது.

கிராமங்களில் நடைபெறும் திருமணங்களில் அருமைக்காரருக்குப் பதில் ஊர்ப்பெரியவர் அல்லது பங்காளியை வைத்துத் திருமணம் நடத்துகின்றனர். சீர் செய்யும் திருமணங்களில் மட்டும் அருமைக்காரர் பங்கேற்கிறார்.

நிச்சயதார்த்தத்தன்று இந்நாளில் இந்நேரத்தில் இந்த இடத்தில் திருப்பூட்டு நிகழும் என்று மூன்று முறை உரக்கச் சொல்லுவான் கொங்கு நாவிதன். திருமண அழைப்பை உற்றார் உறவினர்களுக்குக் கொங்கு நாவிதனே வாய்மொழியாக அழைப்புச் சொல்லி வருவான். இன்று அந்நிலை மாறி திருமண அழைப்பிதழ் அச்சடித்துக் கொடுத்து, கொங்கு நாவிதன் மூலமே அழைப்பு விடுக்கின்றனர். இவ்வழக்கம் ஒருபுறம் இருந்தாலும் திருமண வீட்டார் அந்தஸ்து கருதி முக்கியமான நபர்களுக்கு நேரில் சென்று அழைக்கும் பழக்கம் தற்பொழுது ஏற்பட்டுள்ளது.

அவரவர் வசதிக்கேற்பத் திருமண அழைப்பிதழ் அச்சடிப்பதும் நடைமுறையில் உள்ளது. நிச்சயம், திருமணம், வரவேற்பு என ஒவ்வொன்றுக்கும் தனித்தனியே அழைப்பிதழ் அச்சடிக்கும் நிலை ஏற்பட்டுள்ளது.

நவீன காலமாகிய இன்றைக்குத் திருமணத்தில் நிழற்படம் எடுத்தல், ஒளிப்பதிவு செய்தல் ஆகியன இடம்பெறுகின்றன.

### கலப்புத்திருமணம்

இன்றைக்குக் கொங்கு வேளாளரிடையே ஆங்காங்கே கலப்புத்திருமணம் நடைபெறுகிறது.

ஆண், பெண் இருபாலரிடையே கல்வியில் ஏற்பட்டுள்ள மாற்றம், தொழில் வளர்ச்சி, பொருளாதார முன்னேற்றம், பணிபுரியும் இடங்களில் ஏற்படும் நட்பு, பதவி ஆகியவைகளும், தொலைத் தொடர்பில் ஏற்பட்டிருக்கும் முன்னேற்றம், சினிமா, தொலைக்காட்சி, பத்திரிக்கைகளின் தாக்கங்களாலும், பெற்றோர் மணமகன்,

மணப்பெண் தேர்வு செய்வதற்குப் பதிலாக, அவரவர்களே தேர்வு செய்யும் நிலை உருவாகியுள்ளது.

கொங்கு ஆடவர் பிற இனத்தில் மணம் புரிகின்றனர். ஆனால் பெரும்பாலும் பெண்கள் பிற இனத்தாரை மணம் புரிவதில்லை.

கொங்கு வேளாளர்களிடையே பிறமாற்றங்கள் நிகழ்ந்திருந்தாலும் மதமாற்றம் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது.[11]

## மறுமணம்

கொங்கு வேளாளரிடத்து மறுமணம் என்பது கிடையாது. இன்றைக்கு இவர்களிடத்து மிக அரிதாக ஆங்காங்கே ஓரிரு மறுமணங்கள் நடைபெறுகின்றன.[12]

## கைகோர்வை

மணமகனுக்கும், மச்சினனுக்கும் (மைத்துனர்) நெருக்கத்தை ஏற்படுத்தும் உறவே கைகோர்வை. இருவரின் கை விரல்களும் ஒன்றோடொன்று கோர்க்கப்பட்டிருக்கும். இது திருமணமான நாழி முதல் இருவரின் உறவும் விட்டுப் போகாமல் இருப்பதைக் காட்டுகிறது.

பங்காளிகளைக் கொண்டு நடைபெறும் திருமணங்களில் மட்டும் இச்சடங்கு செய்யப்படுவதில்லை.

## மங்கல வாழ்த்து

சீர் செய்து நடைபெறும் திருமணங்களில் இன்றும் கொங்கு நாவிதனால் மங்கல வாழ்த்துப் பாடப்படுகின்றது.

சீர் செய்யாத திருமணங்களிலும் ஒரு சிலர் மங்கல வாழ்த்தை மட்டும் கடைப்பிடிக்கின்றனர்.

## புலவர் வாழ்த்து

பெருமளவில் மறைந்து கொண்டு வருகிறது.

## இ. இறப்புச் சடங்குகளில் ஏற்பட்டுள்ள மாற்றங்கள்

ஒருவர் இறந்த செய்தியை மாதாரி மூலமாகத் தெரியப்படுத்தும் பழக்கம் கிராமங்களில் மட்டுமே காணப்படுகின்றது. நகர்ப்புறங்களில் தொலைபேசி மூலமாகவும், தந்தி மூலமாகவும் தெரியப்படுத்துகின்றனர். இந்நிலை அறிவியல் வளர்ச்சியால் ஏற்பட்ட மாற்றம் ஆகும்.

### ஒப்பாரி

முதுமையான பெண்கள் மட்டுமே ஒப்பாரி பாடுகின்றனர். ஒப்பாரிப்பாட்டு இன்றைக்கு மெல்ல மெல்ல அழிந்து கொண்டு வருகின்றது. பெண்களுக்கு ஒப்பாரிப் பாடல்கள் தெரிய வாய்ப்பில்லாமல் போய்விட்டது. தெரிந்தாலும் இசைத் தன்மையோடு பாடத் தெரிவதில்லை.

ஆண்கள், துக்கம் விசாரிக்க வருவோரிடத்துக் கை நீட்டுவது போல், பெண்கள் கைகளை மட்டும் நீட்டுகின்றனர்.[13]

### பின்னப்பூப் போடுதல்

கிராமங்களில் பழைய முறையைப் பின்பற்ற வேண்டும் என்று நினைக்கின்றவர்கள் இதனைச் செய்கின்றனர். சிலர் அவசர நிலை கருதியும் காலச்சூழல் கருதியும் விட்டு விடுகின்றனர். முற்காலத்தில் பின்னப்பூப் போடுபவருக்கு மாடு வாங்கிக் கொடுத்தல் வழக்கம். தற்போது தங்க ஆபரணம் வாங்கிக் கொடுக்கும் பழக்கம் ஏற்பட்டுள்ளது.

## தேர் கட்டுதல்

பெரும்பாலும் தேர் கட்டுவதில்லை. இன்றைக்குச் சவ வண்டி கிடைப்பதனால், அதனையே தேர் போல அலங்கரித்து, தேர் கட்டினால் செய்யும் சடங்குகளைச் செய்கின்றனர்.

## கொள்ளிவைத்தல், மண்தள்ளுதல்

தாய்க்குத் தலைமகன், தகப்பனுக்கு இளைய மகன் என்ற நிலை மாறிவிட்டது. ஆண்வாரிசுகள் இல்லாவிட்டால், பெண்வாரிசுகள் மண் தள்ளுகின்றனர்; கொள்ளி வைக்கின்றனர். இதனால் பெண்கள் சுடுகாட்டுக்குப் போகும் நிலையும் ஏற்பட்டுள்ளது.[14]

## கருமாதி

குழி வெட்டுதல் முதற்கொண்டு 'தொழில் உரிமை' விட்டுக் கொடுக்காமல் பார்க்கப்பட்டு வந்த நிலை மாறி இன்றைக்குச் சம்பளத்துக்கு ஆள் அனுப்பும் நிலை ஏற்பட்டுள்ளது. கருமாதி பதினாறாம் நாள் மட்டுமே நடைபெறும். இன்றைக்கு அகால மரணம், உறவினர்கள் வெளியூரில் இருத்தல், காலச்சூழல் ஆகியவற்றின் காரணமாகக் கருமாதியை இறந்த அன்றைக்கே சிலர் செய்து விடுகின்றனர்.[15]

முற்காலத்தில் உறவினர்களும் நண்பர்களும் உணவு தயார் செய்து துக்கம் கேட்க [இரங்கல் கேட்க] வருவோருக்கு அளிக்கும் பழக்கம் இருந்தது. இன்றைக்கு இந்நிலை மாறி இறந்தவர் வீட்டிலேயே உணவு தயார் செய்து அளிக்கின்றனர். பங்காளிகள் உடன் இருந்து செய்யும் பழக்கமும் குறைந்து வருகிறது.[16]

### மொட்டை போடுதல்

இறந்தவரின் மகன் மொட்டைபோடாமல் முகச்சவரம் மட்டும் செய்து கொள்ளும் நிலை ஏற்பட்டுள்ளது.

### விருந்து போடுதல்

உறவினர்கள், பங்காளிகள், மகள்கள் எல்லோரும் ஐந்தாம் நாள், ஏழாம் நாள் எனத் தனித்தனியாக விருந்திடுவர். ஆனால் இன்றைக்கு சவம் எடுத்த மறுநாள் அனைவரும் செலவைப் பகிர்ந்து கொண்டு ஒரே நாளில் விருந்தை முடித்துக் கொள்கின்றனர்.[17]

### இராட்டை நூற்றல்

இச்சடங்கு முற்றிலுமாக மறைந்து விட்டது.

### கைம்பெண்கள்

கிராமங்களில் இன்றும் கைம்பெண்கள் வெள்ளைப்புடவை அணிகின்றனர். ஆனால் சில இடங்களில் முதுமையான பெண்ணாக இருப்பின் வெள்ளைப்புடவை அல்லது காவிப்புடவை உடுத்துகின்றாள். இளவயதுப் பெண்ணாக இருந்தால் வண்ணச் சேலை உடுத்துகின்றாள். இப்பெண்கள் தோடு, சங்கிலி போன்ற சில நகைகளையும் அணிந்து கொள்கின்றனர்.[18]

ஆரியத்தாக்கம், நாகரிகத் தாக்கம், காலச்சூழல், இடமாற்றம், அரசியல், தொழில், பதவி, சினிமா, தொலைக்காட்சி, கல்வி வளர்ச்சி முதலிய பல்வேறு காரணங்களால் இம்மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன.

# அடிக்குறிப்புகள்

## தகவலாளர்கள் அளித்த பேட்டி

| | பெயர் | வயது | பேட்டி கண்ட நாள் |
|---|---|---|---|
| 1. | சண்முகவடிவேல் | 54 | 5.9.1999 |
| 2. | கருப்புச்சாமி | 48 | 7.9.1999 |
| 3. | கோதண்டராமன் | 52 | 10.9.1999 |
| 4. | காளியம்மாள் | 70 | 15.10.1999 |
| 5. | கவிதா. கு | 34 | 20.11.1999 |
| 6. | செல்லமுத்து. கே | 49 | 24.11.1999 |
| 7. | செல்வம். ஆ | 47 | 27.11.1999 |
| 8. | சக்திவேல். பெ | 50 | 30.11.1999 |
| 9. | லோகேஸ்வரி. கி | 42 | 4.12.1999 |
| 10. | தங்கம். ஆ | 35 | 4.12.1999 |
| 11. | காந்திமதி | 48 | 6.12.1999 |
| 12. | சிவசாமி. க | 50 | 8.12.1999 |
| 13. | லோகேஸ்வரி. கி | 42 | 4.12.1999 |
| 14. | இராமாத்தாள் | 60 | 4.1.2000 |
| 15. | லிங்கசாமி | 50 | 7.1.2000 |
| 16. | சிவசாமி. க | 50 | 8.12.1999 |
| 17. | சண்முகவடிவேல் | 54 | 5.9.1999 |
| 18. | சாந்தகுமாரி. செ | 40 | 9.2.2000 |

அருமைக்காரர்

அருமைக்காரி

மங்கல வாழ்த்துப்பாடல்

கூட்டம் அல்லது குலம்

காணியாட்சி

காணித்தெய்வங்கள் – பெண் தெய்வ வழிபாடு

நாட்டுக்கல்

மொடவாண்டி

கொங்குக்குடிமகன்கள்

# தனித்தன்மைகள்

கொங்கு வேளாளர்களுடைய பழக்க வழக்கங்களை ஆராயும் போது, அவர்தம் தனித்தன்மைகள் புலனாகின்றன. பொதுவாகவே ஓவ்வொரு இனத்துக்கும் ஒரு சில தனித்தன்மைகள் காணப்பெறுதல் இயல்பே. கொங்கு வேளாளர்களிடையே காணப்படும் தனித்தன்மைகள் சிறப்புடையனவாயும், பாராட்டத்தக்கனவாயும் அமைந்துள்ளன.

## அருமைக்காரர்

தமிழகத்தில் ஆரியர்களின் பண்பாட்டுக் கலப்பு, தொல்காப்பியர் காலந்தொட்டே காணப்பெறுகின்றது. தொல்காப்பியர் அந்தணர், பார்ப்பனர் என்ற சொற்களைக் கையாண்டுள்ளார். வடசொற்கலப்பு நிகழ்ந்துள்ளது. இது,

"வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ"

[தொல்.நூ.884]

என்ற நூற்பாவான் உறுதிப்படுகின்றது.

திருவள்ளுவர் இல்லறவியலில் பல செய்திகள் குறித்துப் பேசினாலும், திருமண முறை பற்றிக் குறிப்பிடவில்லை. தமிழகத்தில் ஆரிய நாகரிகம் கலந்த பின்னர் நிகழ்ந்த திருமணமுறையைச் சிலப்பதிகாரத்தால் அறியமுடிகின்றது.

"சாலி யொருமீன் தகையாளைக் கோவலன்
மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிடத்
தீவலம் செய்வது" [சிலம்பு 1:1:51–53]

பார்ப்பான் நடத்திவைக்கக் கோவலன் திருமணம் நடந்தது. தீ வலம் செய்து மணம் புரிந்து கொண்டனர்.

இதன் வளர்ச்சி இன்று பெரும்பாலான சமுதாயத்தாரிடையே காணப்பெறுகின்றது. ஆனால் கொங்கு வேளாளர் இல்லத் திருமணங்களில் ஆரியப் புரோகிதருக்கு வேலையே இல்லை. திருமண நிகழ்ச்சிகளை அருமைக்காரர் என்று அழைக்கப்பெறும் பெரியவர் ஒருவர் நடத்தி வைக்கின்றார்.

"பல சாதிகளில் திருமணச் சடங்கு பிராமணக் குருக்களால் நடத்தப்படுகின்றது. நாடார்களும் கொங்கு வேளாளர்களும் தங்களுக்குள்ளேயே வயதான சான்றோர்களைக் கொண்டு இந்தப் பணிகளை நிறைவேற்றிக் கொள்கின்றனர்."[1] என்று சோமலெ குறிப்பிட்டுள்ளார்.

## அருமைக்காரர் - தகுதிப்பாடு

வேளாளர் சமுதாயத்தில் உள்ள வயதான சான்றோர்கள் எல்லோரும் அருமைக்காரர் ஆகிவிடமுடியாது. அருமைக்காரர் ஆவதற்குச் சில நடைமுறைகளைப் பின்பற்றி அத்தகுதியைப் பெற வேண்டும்.

ஒருவர் அருமைக்காரர் ஆக விரும்பினால் அவருடைய மகன் அல்லது மகள் திருமணம் நடைபெறும்பொழுது அதற்குரிய சடங்கைச் செய்து கொள்ள வேண்டும். அருமை செய்து கொள்ள விரும்புபவர், முதலில் தன் உறவினர்கட்கு இச்செய்தியை அறிவிக்க வேண்டும். முன்னரே அருமைக்காரர்களாக இருக்கும் மூன்று பெரியவர்களை அணுகி இன்ன நாளில் என் வீட்டில் திருமணம் நடைபெற இருக்கின்றது, நீங்கள் மூவரும் வந்து எனக்கு அருமை செய்து வைக்க வேண்டும் என்று வேண்டிக் கொள்வர். குறிப்பிட்ட நாளில்

முகூர்த்தக்கால் நட்ட பிறகு, மேளதாளத்துடன் விருந்தினர்கள் சூழ, மூன்று அருமைப் பெரியவர்களும் புற்றுமண் இருக்கும் இடத்திற்குச் செல்வர். அப்புற்றுக்குப் பெரியவர்கள் பூசை செய்து, மண்ணெடுத்து மூன்று கூடைகளில் அவற்றைப் போட்டு, மண வீட்டுக்குக் கொண்டு வந்து வைப்பர். மணப்பந்தலின் அருகில் புற்று மண்ணை, கொங்கு நாவிதன், பிசைந்து வைத்து, அதன் மீது பேய்க்கரும்பை நட்டு வைப்பான். அருமை செய்து கொள்ள இருப்பவர், அவருடைய மனைவியுடன் மணப்பலகையில் அமர்ந்திருப்பார். மூன்று அருமைக்காரர்களும் அவ்விருவரையும் நீராட்டுவர். அன்று இருவரையும் விரதம் இருக்கச் செய்வர். திருமணம் முடிந்தபிறகு, மூன்று அருமைக்காரர்களும் அருகுமணம் எடுப்பர். இதன்பிறகுதான் அவர் அருமைப் பெரியவர் / அருமைக்காரர் என்னும் பதவிக்குத் தகுதியானவர் என்று ஏற்றுக்கொள்ளப்படுவர்.[2] அருமைக்காரர் என்பவர் பெரும்பாலும் முழுக்காதன் குலத்தைச் சார்ந்தவராகவே இருப்பார்.

ஒவ்வொரு சமுதாயத்திலும் சில குறிப்பிட்ட சடங்குகளை அதற்குரிய தகுதிபடைத்தவர்கள் தாம் செய்ய இயலும். வேளாளக் கவுண்டர்களிடையே திருமணச் சடங்கினை நிகழ்த்தும் பொறுப்பு, அருமைக்காரரைச் சார்ந்ததாகும். தகுதியுடைய மூவர் சேர்ந்து, ஒருவரைத் தகுதிப்படுத்துகின்றனர். திருமண நிகழ்ச்சி வாழையடி வாழையாக வரக்கூடிய ஒன்று. அதனை நடத்தும் அருமைக்காரர் அவ்வப்போது உருவாகிவருதல் குறிப்பிடத்தக்கது. திருமணம் ஒருவர் வாழ்வில் நடக்கும் அரிய நிகழ்ச்சியாகும். அத்தகைய அரிய நிகழ்ச்சியை நடத்துபவர் அருமைக்காரர் என்றழைக்கப் படுகின்றார். இது பொருத்தமான சொல்லாட்சியாகும்.

ஆரியப் புரோகிதர் திருமணம் நடத்தி முடித்தபிறகு தனக்குரிய தொகைகளைப் பெற்றுச் செல்வார். திருமணத்தின் போது வைக்கப்பெறும் அரிசி, தேங்காய், பழம் முதலிய அனைத்தையும் அவரே எடுத்துக் கொள்வார். வசதி படைத்தவர்கள் புதிய ஆடைகளையும் தானமாகக் கொடுப்பர். ஆனால் கொங்கு வேளாள அருமைக்காரர் எதனையும் கேட்கவும் மாட்டார், பெற்றுக் கொள்ளவும் மாட்டார். திருமணம் நடத்தி வைப்பதைத் தனது கடமையாகக் கருதுவர். இத்தகைய போக்கு, பாராட்டத்தக்கது.

## அருமைக்காரி

திருமணத்தில் அருமைக்காரருக்கு எவ்வளவு முக்கியத்துவம் கொடுக்கப்படுகிறதோ, அந்தளவு அருமைக்காரிக்கும் கொடுக்கப்படும். அருமைக்காரி எனும் தகுதியைப் பெற எழுதிங்கள் சீர் என்று சொல்லப்படும் ஒரு சடங்கைச் செய்து கொள்ள வேண்டும். ஒரு பெண் அருமை செய்து கொள்ள வேண்டுமெனில், அவளுடைய தங்கையின் திருமணத்தின் போதோ, மகள் அல்லது மகன் திருமணத்தின் போதோ அதற்குரிய சடங்கைச் செய்து கொள்ள வேண்டும். திருமணம் நடைபெறும் தினத்தின் முன் தினம் இச்சீரை இணைச்சீர் போன்றே செய்வர். முன்காலத்தில் எல்லாக் கூட்டத்தினரும் [குலம்] இச்சீரைச் செய்து வந்தனர். தற்சமயம் விருப்பப்பட்டவர்கள் மட்டுமே இச்சீரைச் செய்து கொள்கின்றனர்.

பழங்காலந் தொட்டு கொங்கு வேளாளரிடையே மகளிருக்குரிய சிறப்பும், பங்குப் பணியும் பகிர்ந்தளிக்கப்பட்டுள்ளதை உணர முடிகின்றது. பிறப்பிலிருந்து இறப்பு வரை நடைபெறும் பல்வேறு

சடங்குகளிலும் மகளிரின் பங்களிப்பு பெருமைக்கும், பாராட்டுக்கும் உரியதாக அமைந்துள்ளது தனிச்சிறப்பாகும். இதனை உற்றுநோக்கும்போது ஆணாதிக்கச் சமுதாயம் என்று இன்றுவரை பேசப்படும் நிலையிலிருந்து கொங்கு வேளாளர் இனம் மாறுபட்டுள்ளது கவனிக்கத்தக்கது.

## மங்கலவாழ்த்துப்பாடல்

மங்கலம் என்ற சொல் பல பொருளுடையது. சுபம், ஆக்கம், பொலிவு, நன்மை, திருமணம், தாலி, வாழ்த்து என்ற பல பொருள்களைக் கழகத் தமிழ்க்கையகராதி சுட்டுகின்றது.[3]

தொல்காப்பியத்தில் ஐந்து இடங்களில் மங்கலம் என்ற சொல்லாட்சி காணப்பெறும்.

"இகன்மதிற் குடுமி கொண்ட மண்ணு மங்கலம்"

[தொல்.நூ.1014-10]

"பிறந்த நாள்வயிற் பெருமங்கலமும்
சிறந்த சீர்த்தி மண்ணு மங்கலமும்
மாணார்ச் சுட்டிய வாள்மங்கலமும்
மன்எயில் அழித்த மண்ணுமங்கலமும்"

[தொல்.நூ. 1037]

மேலும் 'மங்கலமொழி' [தொல்.நூ. 1190] என்ற சொல்லாட்சியும் உண்டு. தொல்காப்பியத்தில் இச்சொல் பயின்று வருதலால், தூய தமிழ்ச் சொல்லே என்பதில் ஐயமில்லை.

"மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன்
நன்கலம் நன்மக்கட் பேறு"[4]

என்று வள்ளுவம் கூறும்.

சிலப்பதிகாரத்தின் முதற்காதை 'மங்கல வாழ்த்துப்பாடல்' என்றே அமைந்துள்ளது. திருமணத்தில் மணமக்களை வாழ்த்துதல், மங்கல வாழ்த்துப் பாடுதல் இயல்பான, தொன்று தொட்டு வரும், ஒரு வழக்கம் ஆகும்.

கோவலன், கண்ணகி இருவரையும் திருமண நாளில்,

"காதலற் பிரியாமல் கவவுக்கை நெகிழாமல்
தீதறு கெனவேத்திச் சின்மலர் கொடுதூவி"

என வாழ்த்தியமையைச் சிலப்பதிகாரத்தான் அறிகின்றோம்.

"கொங்கு வேளாளர்களின் திருமணங்களிலே பாடப்படும் மங்கல வாழ்த்து கொங்கு வேளாளர் மங்கலவாழ்த்து என்று வழங்கப்படுகிறது."[5]

நீண்ட நாள்வரை வாய்மொழி இலக்கியமாக வழங்கி வந்த இப்பாடல் அண்மைக்காலத்தே நூல் வடிவு பெற்று, ஆய்வுக்குரிய களமாகவும் திகழ்கின்றது.

## மங்கல வாழ்த்துப்பாடல் பாடுவோர்

"ஒவ்வொரு இனத்திற்கும் வாழ்த்துப்பாடல் வேறுபடுவது போன்றே இதனைப் பாடுவோரும் வேறுபடுகின்றனர்."[6]

"மதுரை மாவட்டத்தில் மணமக்களுக்கு முதிய மங்கலப் பெண்டிரே வாழ்த்துப் பாடுகின்றனர்."[7]

"கொங்கு வேளாளர் திருமணங்களில் பாடப்படும் மங்கல வாழ்த்துப்பாடலை முன்பு புலவர்கள் பாடினர். இப்பொழுது நாவிதர்களே பாடுகின்றனர்."[8]

## வாழ்த்தும் முறை

மணக்கோலத்தில் திருப்பூட்டு நடைபெற்ற பிறகு, மணமகனும், மணமகளும் மேடையில் அமர்ந்திருப்பர். மணமகனின் எதிரே மணப்பெண்ணின் சகோதரன் அமர்ந்திருப்பான். அவனுக்கு மணமகனின் கழுத்திலிருந்து சிறுமாலையை எடுத்து அணிவிப்பர். இவர்கள் நடுவே முக்காலியின் மீது ஒரு தட்டில் அரிசி வைக்கப்பட்டிருக்கும். மணமகனும், மணமகள் சகோதரனும் ஆகிய இருவரின் கைகளும் அரிசியில் கோர்த்து வைக்கப்படும். நாவிதர் தட்டிலுள்ள அரிசியில் சிறிது எடுத்து, வெற்றிலையில் வைத்துக் கொண்டு மங்கல வாழ்த்துப்பாடலைப் பாடுவார். ஒவ்வொரு கருத்தின் முடிவிலும் மலர் தூவுதல் போலத் தட்டில் அரிசியைப் போடுவார். அச்சமயம் மேளத்தை ஒற்றைத் தட்டுத் தட்டுவர். பாடல் பாடி முடிக்கும் வரை இருவரின் கைகளும் கோர்த்தபடியே இருக்கும். திருமணத்தை ஒட்டி நடைபெறும் இணைச்சீரின் போதும் இம்மங்கல வாழ்த்து பாடப்படுகின்றது. அப்பொழுதும் நாவிதரே இதனைப் பாடுவார்.

“இப்பாடல் வேளாளர் திருமணத்தில் துவக்கத்திலிருந்து இறுதி வரையில் நடைபெறும் சடங்குகளை வரிசைப்படுத்திக் கூறுகிறது.”[9]

## மங்கல வாழ்த்துப் பாடலின் அமைப்பு

மங்கல வாழ்த்துப் பாடல், இடத்திற்குத்தக, சிறிது வேறுபட்டுக் காணப்படுகிறது. எந்த வட்டத்தைச் சார்ந்த பாடலாக இருந்தாலும் முதலில் விநாயகர் வணக்கத்தையே கொண்டுள்ளது.

"நல்ல கணபதியை நாம் காலமே தொழுதால்" என்று தொடங்குகிறது. இதனையடுத்துப் பிற தெய்வ வாழ்த்து அமைந்துள்ளது.

"................. ஆறுமுக மேனியார்
திங்கள் மும்மாரி செல்வம் பொருந்திட
கந்தன் இந்திரன் கரியமால் மூத்தோர்
முந்திய தேவரும் மூவருங் காத்திட
நற்கல்யாணம் நடந்திடும் சீர்தனில்
தப்புகள் வராமல் சரஸ்வதியே காப்பாய்"

இதன் பின்னரே திருமண நடைமுறைகள் சுட்டப் பெறுகின்றன.

"ஆல்போல் கிளைகிளைத்து அருகுபோல் வேரூன்றி
மூங்கில் போல் கிளைகிளைத்து முசியாமல் வாழ்ந்திருக்க
கேட்டிருந்த பெரியோர்கள் கிளைகோத்திரமாய் வாழ்ந்திருக்க
வாழியோர் வாழி"

என்ற முறையில், இறுதியில் வாழ்த்து இடம் பெற்றுள்ளது.

## வரலாற்று ஆவணம்

மங்கல வாழ்த்துப் பாடல், வாழ்த்துப் பாடல் மட்டுமன்று. கொங்கு நாட்டில் வேளாளர் இனத்தில் திருமணம் இம்முறையில் தான் நடத்தப்பெற வேண்டும் என்று கூறும் விதிமுறை நூலாகும். வேளாளரின் வாழ்வியல் நடைமுறைகள் சுட்டப்பெறுதலின் வரலாற்று ஆவணம் என்று கூறின் அது முற்றிலும் பொருந்தும்.

மங்கல வாழ்த்துப் பாடலின் கட்டமைப்பு, இலக்கியக்கூறுகள், நாட்டுப்புறப்பாடல் அமைப்பு, பண்பாட்டுக் கருவூலம், இப்பாடலைப்

பாடியவர் யார், கம்பருக்கும் இப்பாடலுக்கும் என்ன தொடர்பு என்றினைய செய்திகள் இவ்வாய்வுக்குப் புறம்பானவையாதலின் அவை பற்றிய ஆய்வு மேற்கொள்ளப்பெறவில்லை. மேற்கொள்ளின் மற்றொன்று விரித்தலாகும் என்று கருதி விடுக்கப்பட்டன.

## கூட்டம் அல்லது குலம்

தொடக்க நிலையில் மனிதன் தனித்தே வாழ்க்கையைத் தொடங்கி இருக்கக்கூடும். காலப்போக்கில் கருத்தொருமித்த சிலர் ஒன்று சேர்ந்து கூட்டமாக வாழ்ந்தனர். "கூட்டம் என்பது ஒரு சமூகத்தின் அல்லது இனத்தின் உட்பிரிவாகும். இந்தப் பிரிவினர்/ கூட்டத்தினர் ஒரே இரத்தக்கலப்புடையவர்களாக ஒரு வழி மரபுடையவர்களாகக் கருதப்படுவர். ஒரு கூட்டத்தின் பெயர் குலதெய்வங்களின் பெயராகவும், செய்யும் தொழிலின் அடிப்படையில் எழுந்த பெயராகவும், தங்கள் முன்னோர்களின் பெயராகவும், இடம் பெயர்ந்த பொழுது தாம் வாழ்ந்த பழைய ஊர்ப் பெயராகவும் அமைவதுண்டு. இதுவே குலப்பெயர் அல்லது குடிப்பெயராகப் பின்பு நிலைபேறடைகிறது."[10]

கூடி வாழ்ந்தது குடி; குழுமி இருந்தது குழு, இரண்டும் தமிழ்ச் சொற்கள். குலம் என்பதை வடமொழிச் சொல் என்பர் நாகரத்தினம்.[11]

குடி, குழு, கூட்டம், குலம் என்பன ஒரு பொருள் தருவன. குலம் என்பதைவிடக் கூட்டம் என்பதே இன்று வழக்கில் அதிகமாகக் காணப்பெறுகின்றது. ஓர் இனத்தின் உட்பிரிவு குலம் அல்லது கூட்டம் என்று பெயர் பெறும்.

குறிப்பிட்ட ஒரு கூட்டத்தைச் சேர்ந்தவர்கள் பங்காளி உறவுடையோர் ஆவர். உடன் பிறந்தார்களாகக் கருதப்படுகின்றனர். இவர்களுக்குள் திருமண உறவு வைத்துக் கொள்வதில்லை. உறவுகளைப் பாதுகாத்துக் கொள்வதற்குக் கூட்டங்கள் இன்றியமை யாதனவாக உள்ளன. கொங்கு வேளாளரிடையே இத்தகு கூட்ட அமைப்புக் காணப்படுகின்றது.

"கொங்கு வேளாளரின் கூட்டங்கள் அவ்வக் கூட்டத்திற்குரிய சின்னங்களால் பெயர் பெற்றவை. பிராமணர்களின் கோத்திரங்களுக்குச் சின்னங்கள் கிடையாது."[12]

"வட அமெரிக்க இந்தியர்களிடமும், கொங்கு வேளாளர்களிடம் உள்ள கூட்டச் சின்னங்கள் போன்ற அமைப்பு உள்ளது. இதை அவர்கள் டோடைம் (Dodaim) என்று அழைக்கின்றனர்."[13]

**ஆ.கூட்டச் சின்னங்கள்**

ஒவ்வொரு குலமும் ஒவ்வொரு வகையான பறவை, விலங்கு அல்லது தாவரத்தோடு தொடர்பு கொண்டிருந்தது. அந்த விலங்கு அல்லது தாவரம் அந்தக் குலமரபின் சின்னமாகக் கருதப்பட்டது என்பர்.[14]

'பொதுவாக ஒரு விலங்கு ஏதாவதொரு ஆற்றலைக் கொண்டிருந்தால் அந்த ஆற்றல் தங்களுக்கு வேண்டும் என்ற ஆசையால், அதனைக் குலக்குறியாகக் கொண்டார்கள். ஆற்றல், விருப்பம், குலக்குறி நம்பிக்கையின் ஓர் அம்சம். மற்றோர் தன்மை குலத்தினுள் ஒற்றுமை உணர்வை ஏற்படுத்துவது.'[15]

ஒரு பறவை அல்லது விலங்கு அல்லது தாவரத்தோடு தன்னைத் தொடர்புபடுத்திய மனிதன், அவற்றின் ஆற்றல்கள் எல்லாம் தனக்கும் வரவேண்டும் என்று கருதினான். உலகம் முழுவதிலும் இக் குலக்குறி நம்பிக்கை குழு மக்களிடையே உள்ளது.

கூட்டம் என்ற பெயரமைப்பு கோவைப் பகுதிவாழ் அகமுடையார்களிடம் காணப்படுகின்றது. "இவ்வாறு காணப்படும் கூட்டச்சின்னம் அகமுடையாரிடம் காணப்படவில்லை எனினும் ஆரம்ப காலத்தில் இருந்து பின்னர் அழிந்துபோய் இருக்க வேண்டும் என்று கருதலாம்"[16] என்பர் நாகரத்தினம்.

கொங்கு வேளாளர்களிடம் காணப்பெறும் குலப் பிரிவுகள் 96 என்றும் 146 என்றும் விரித்துரைப்பர். தே.ப.சின்னச்சாமி, 60 குலப்பிரிவுகளைச் சுட்டியுள்ளார்.[17]

"கொங்கு வேளாளர்களிடையே உள்ள சின்னங்களின் எண்ணிக்கையைக் கணக்கிடும் பணியே முடிவடையவில்லை. தேடுவதும், சொற்களைப் பிரித்து வாதப் பிரதிவாதம் செய்வதுமே நடைபெற்று வருகின்றன"[18] என்பர் க.கிருட்டிணசாமி.

க.கிருட்டிணசாமி அவர்கள், கொங்கு வேளாளரிடைக் காணப்பெறும் கூட்டம் அல்லது குலப்பெயர்களை, "கூட்டமும் திருமணமும்" என்ற நூலில் சுட்டி விளக்கம் தந்துள்ளார். வேறு பிறரும் இவற்றைக் குறிப்பிட்டுள்ளனர்.

கூட்டப்பிரிவுகளின் பெயர்கள் வருமாறு

## ஆ.கூட்டப்பெயர்கள்

1. அக்கினி
2. அந்துவன்
3. அவுரியன்
4. அழகன்
5. அனகன்
6. ஆடை
7. ஆதி
8. ஆதிரை
9. ஆத்திரேயகும்பன்
10. ஆந்தை
11. ஆவன் (ஆதன்)
12. இந்திரன்
13. ஈஞ்சன்
14. உவணன்
15. உழவன் (உழுவை)
16. எண்ணெய்
17. ஒழுக்கர்
18. ஓதாளர்
19. கடுந்துளி
20. கணக்கன்
21. கண்ணந்தை

22. கண்ணன்

23. கம்பகுலத்தான்

24. கருங்கண்ணன்

25. கவளன் [கவலன்]

26. கவுரி [கவுளி]

27. களிஞ்சி

28. கனவாளன்

29. கன்னிவாடியார்

30. காடான் [காடன்]

31. காடை

32. காரி

33. காவலர் [காவலியர்]

34. கிளியன்

35. கீரன்

36. குங்குலி

37. குணிலன்

38. குணுக்கன்

39. குண்டெலி

40. குமரந்தை

41. குயிலன்

42. குழாயன்

43. குழையன்

44. கூரை [கூறை]

45. கூறுபன் [கூர்மம்]

46. கொட்டாரர் [கோட்டாரி]

47. கொற்றந்தை

48. கோடருங்கி

49. கோவர்

50. கோவேந்தர்

51. சவுரியன் [சவரி, சௌரி]

52. சனகன்

53. சாகாடை

54. சாத்தந்தை

55. சாத்துவராயன் [சாத்தராயன்]

56. சிலம்பன் [சிலம்பி]

57. சுரபி

58. சூரியன்

59. சூலன்

60. செங்கண்ணன்

61. செங்குண்ணி

62. செம்பன்

63. செம்பூதன்

64. செவ்வாயன்

65. செவந்தி

66. செல்லன்

67. சேடன்

68. சேரன்

69. சேரலன்

70. சேவடி

71. சோதி

72. சோமன்

73. தக்கவன் [தக்கன்]

74. தவலையன்

75. தழிஞ்சி [தழிஞ்சி]

76. தனஞ்செயன்

77. தனவந்தன்

78. துந்துமன் [துந்துமம்]

79. தூரன்

80. தேமான்

81. தேவேந்திரன்

82. தோடை

83. தோரக்கன்

84. நந்த[ன்]ம்

85. நாரை

86. நீருண்ணியர்

87. நீலன்

88. நெய்தலி

89. நேரியன்

90. பஞ்சன்

91. படுகுண்ணி

92. பண்ணை

93. பதரி

94. பதுமன்

95. பயிரன்

96. பரமன்

97. பருத்தியூரான்

98. பவளன்

99. பனையன்

100. பனங்காடை

101. பன்னன்

102. பாணன்

103. பாண்டியன்

104. பாம்பன்

105. பாலியன்

106. பிரமன்

107. பில்லை [பில்ல]

108. பிறழந்தை

109. புத்தன்

110. புன்னை

111. பூசன்

112. பூச்சந்தை [பூச்சந்தி]

113. பூதியன்

114. பூந்தன் [பூந்தை]

115. பெரியன்

116. பெருங்குடி

117. பேரிழந்தான்

118. பைதலி

119. பொடியன்

120. பொருளந்தை

121. பொன்னன்

122. மணியன்

123. மயிலன்

124. மழு அழகர் (மழுவ)

125. மாடை

126. மாதங்கன்

127. மாதுலி (மாதுளன்)

128. மாவலர்

129. மானியன்

130. மீனவன்

131. முக்கண்ணன்

132. முத்தன்

133. முழுக்காதன்

134. முனைவீரன்

135. மூரியன்

136. மூலன்

137. மேதி

138. மொய்ப்பன்

139. வண்ணக்கன்

140. வானன்

141. விரதன்

142. விரைவுளன்

143. விலையன்

144. விலோசன்

145. வில்லி

146. விளியன்

147. வெண்டுவன்

148. வெளியன்

149. வெண்டு உழவர்

150. வெண்ண

151. வெள்ளம்பன்

152. வேந்தன்

முன்னர் ஆய்வாளர்கள் குறிப்பிட்ட எண்ணிற்கும் மேலாகக் கூட்டப் பெயர்கள் இன்று நிலவி வருகின்றன. இக்கூட்டத்திற்குரியாரும் வாழ்ந்து வருகின்றனர்.

## காணியாட்சி

காணியாட்சி என்பதற்குத் தமிழ்ப் பேரகராதி, 'நிலத்தில் மரபுரிமை, பதவி உரிமை, காணிக்கை, பண்ணையின் ஆட்சி உரிமை, ஆதிபத்தியம்'[19] முதலான பொருள்களைத் தருகின்றது.

நாட்டுப்புறங்களில் [ஊர்களில்] நிலையாக வாழ்பவர்களுக்கு மட்டுமே காணியாட்சி அளிக்கப்பெற்றுள்ளது. காணியாட்சி உரிமையை வேளாளர்களும், அவர்களைச் சார்ந்த சார்சாதியாரும் மட்டுமே பெற்றுள்ளனர். இடம்பெயர்ந்து செல்பவர்களுக்கும், ஒவ்வொரு இடத்திலும் சுற்றித் தொழில் செய்வோருக்கும் அளிக்கப்பெறவில்லை. வணிகர், கம்மாளர், பொற்கொல்லர் முதலானோருக்குக் காணியாட்சி தரப்படவில்லை.

காணியாட்சி பற்றிப் பலவகை விளக்கம் பெற,

"இவனுக்கு நாம் குடுத்த காணியாவது வீர சோழ வளநாட்டு முகந்தனும் உடையார் குரக்குத்தளிஆளுடைய நாயினார் கோயிலும் தென்னூர் ஆளுடைய நாயினார் கோயிலும் இக்கோயில்கள் காணியாகக் குடுத்தோம். இக்கோயில் காணி முப்பது வட்டமும் அனுபவிப்பானாகவும் இக்கோயில்கள் பூசை ...................... எழுவன முளைப்பன எப்பேர்பட்டனவுந்தானே அனுபவிப்பானாகவும், இன்னாயந்மார்க்குத் திருமடை விளகமுந்தான் வேண்டின குடியும் ஏற்றிக் கொண்டு மன்றாட்டு முதன்மை பெறும் வண்ணான் மாற்றுப் படிக்கறியும் பெற்றுப் போதுவானாகவும் இன்னா யன்மார் தேவதான முதலுள்ளமை இவன் எழுதினபடி செலவழிவதாகவும் இன்னாயன்மார் தேவதானங்களில் இவனும் ஓர் நன்செய் புன்செய் பட்டியுந் தோட்டங் களும் இன்னிலங்களுக்கு இறையிலி யாவதாகவும் மற்றும் உள்ள இன்னாயன்மார் தேவதானங்களால் [எப்பேர்பட்ட] சுவந்திரங்களும்வும் பெற்று அனுபவிப்பானாகவும் மோலை குடுத்தோம்."[19]

என சர்க்கார் பெரியபாளையம் கல்வெட்டு கூறுகின்றது.

### அ. காணி உரிமை

கொங்கு நாட்டில் கொங்கு வேளாளரில் ஒரு குறிப்பிட்ட குலத்தைச் சேர்ந்தவர்களுக்கு ஒரு குறிப்பிட்ட நிலப்பகுதி மட்டுமே உரிமை உடையதாக இருந்துள்ளது. அப்பகுதியில் அமைந்த

குலதெய்வக் கோயில்களின் வழிபாட்டுரிமை மூலம் கிடைக்கும் முற்பாடு, திருநீறுபெறும் உரிமை, பச்சடம் பெறும் உரிமை ஆகிய அனைத்திலும் அவர்களுக்கே உரிமை கொடுக்கப்பட்டது. இவ்வாறு அமைந்த காணி உரிமை பலவாறு கைமாறியுள்ளது. வேறு இனத்தாரிடம் இருந்த காணி உரிமை கொங்கு வேளாளர் கைக்கு வந்துள்ளது. ஒரே குலத்தைச் சேர்ந்தவர்களுக்கு இருந்த காணி உரிமை பல குலத்தவர்களுக்கு உரிமை உடையதாக மாற்றம் பெற்றுள்ளது. இதனால் ஒரு குலத்தவர்கள் மட்டும் வழிபட்டு வந்த குலதெய்வம் பல குலத்தவர்களுக்கும் உரிய குலதெய்வமாக மாற்றம் பெறுகிறது. இந்நிலை செவிவழிக் கதைகள் மூலமாகவும், ஆவணங்களின் மூலமாகவும் அறியமுடிகிறது.

ஆ.முற்பாடு

கோவில்களில் உரிமைதாரர்களுக்குக் கொடுக்கப்படும் முதல் மரியாதையே 'முற்பாடு' என்று சொல்லப்படும். கொங்கு நாட்டுப் பெருந்தெய்வக் கோவில்களிலும் சிறு தெய்வக் கோவில்களிலும் முற்பாடு என்பது சமூக முக்கியத்துவம் உள்ளதாக இருக்கின்றது. குலதெய்வ வழிபாட்டில் முற்பாட்டுரிமை என்பது கொங்கு வேளாளரிடையில் மட்டும் நிலைபெற்றிருந்தது. கொங்கு வேளாளரில் முற்பாட்டுரிமை பற்றி இரண்டு குலத்தாரிடையில் முரண்பாடு வருவதும், இரண்டு பங்காளிகளிடையில் முரண்பாடு வருவதும் காணப்பெறுகின்றது. ஆனால் கொங்கு வேளாளருக்கும் பிற சாதியினருக்கும் இடையில் முற்பாட்டுரிமை பற்றிய முரண்பாடு வரவில்லை.

குலதெய்வ வழிபாட்டில் அளிக்கப்பெறும் முற்பாடு, தெய்வத்தினிடத்து முற்பாட்டுக்காரருக்கு சிறந்த உரிமையை ஏற்படுத்திக்கொள்ளக் காரணமாக அமைகின்றது. முற்பாட்டில் பங்குபெறும் மனிதர்கள் பங்காளிகள் என்று அழைக்கப்பெறுகின்றனர். முற்பாடு, அதனைப் பெறும் மனிதனுக்குப் புனிதத் தன்மையையும், சமூக மதிப்பினையும் தருவதால் அதற்காகத் தங்கள் உயிரையும் இழக்கத் தலைப்பட்டனர். கடவுளுக்கும் முற்பாட்டுக்காரருக்கும் இடையில் பூசாரி செயல்படுவது குறிப்பிடத்தக்கது. முற்பாட்டுக் காரருக்கு முற்பாட்டை அளிக்கும்போது பூசாரியின் பங்கு பெருமைப்படுத்தப் படுகின்றது. குலதெய்வ வழிபாடு கொங்கு வேளாளரிடையில் சிறப்பிடம் பெறுவதால் முற்பாடு பெறுபவன் குறிப்பிட்ட குலத்தில் வணக்கத்திற்குரியவனாக ஆகின்றான்.

இ.காணியாட்சியும்—முற்பாடும்

கொங்கு நாட்டுக் கல்வெட்டுகளில் கூறப்படும் காணியாட்சியின் தொடர்ச்சியான மறுவடிவமே முற்பாடு எனலாம். மேற்கூறிய சர்க்கார் பெரியபாளையம் கல்வெட்டு இந்தக் கருத்தினை வலியுறுத்துகின்றது. அக்கல்வெட்டில் காணியாட்சி என்பது சிவப்பிராமணன் பூசை செய்யும் உரிமையை மட்டுமன்றி ஊரில் இறையிலிநிலம் பெறும் உரிமையையும், வேண்டிய குடிகளைக் குடியேற்றிக் கொள்ளும் உரிமையையும், ஊர் வருவாயைச் செலவழிப்பதில் முறைப்படுத்தும் உரிமையையும் பெறுகின்றான் என்கின்றது. பின்னாளில் எழுதப்பெற்ற பட்டயங்களிலும் காணியாட்சி என்பது முற்பாட்டுரிமையுடன் தொடர்புடையதாகவே இருக்கின்றது. மற்றும் வேட்டுவர்களிடமிருந்து வேளாளர்கள்

காணியாட்சி வாங்கிய செய்தியை வேட்டுவர் பூர்வ பட்டயம் கூறுகின்றது.[21] அப்பட்டயத்தில் காணியாட்சி முற்பாட்டு உரிமையைத் தொடர்புபடுத்திக் கூறுவதாக அமைந்துள்ளது. இது போன்ற பட்டயங்கள் கொங்குநாடு முழுவதும் கிடைத்த வண்ணம் உள்ளன.

கொங்கு வேளாளர்கள் பெண் கேட்கச் செல்லும்போது மணமகனின் குலம் எது என்று கேட்பர். குலம் எது என்று சொல்ல முடியாத போது, காணித்தெய்வம் எது என்று கேட்பார்கள். காணித் தெய்வம் வேறாக இருந்தால் வேறு குலம் என்று முடிவு செய்து பெண் தரச் சம்மதிக்கின்றனர். காணித்தெய்வம் ஒன்றாக இருந்தால் மணமகனும், மணமகளும் ஒரே குலம் என்று கருதிப் பெண்தர மறுத்துவிடுவர். காணித்தெய்வம் கொங்கு வேளாளர் வாழ்க்கையில் பெற்றிருந்த சிறப்பிற்கு மணவினை உறவு பெரும் பங்காற்றுகிறது. இது வரலாற்று முறையில் தேவையாக அமைந்துவிட்டது.

ஈ.சீதனக்காணி

ஒரே குலத்தைச் சேர்ந்தவர்கள் மட்டும் ஒரு குலதெய்வத்தை வழிபட்டு வருவர். அப்படியிருக்கையில் முதன்மை உரிமையுடைய தலைமையானவர் வீட்டில் ஆண்வாரிசு இல்லாமல் பெண் மட்டும் பிறந்திருந்தால், அந்தப்பெண்ணை வேறு குலத்தைச் சேர்ந்தவருக்குத் திருமணம் செய்து கொடுப்பர். அப்படித் திருமணம் செய்து கொடுக்கும் போது மணமகனுக்கு, மனைவியின் வழியாகச் 'சீதனக்காணி' கிடைக்கிறது. அக்காணி உரிமையின் மூலம், குலதெய்வக்கோயிலில் வழிபடும் உரிமையும் கிட்டுகிறது. வழிபடும் உரிமையோடு மட்டுமல்லாமல் தலைமையானவராகிய மாமனாரின் முற்பாடு அவருக்குப் பின் மருமகனுக்குக் கிடைக்கின்றது. அதன் மூலம்

அவனுக்குக் குலதெய்வக் கோவிலில் எல்லா உரிமையும் கிட்டுகிறது. இப்படி உரிமை கிடைத்து வழிபட்டு வருபவர்களின் வாரிசுகள் பெருகும்போது அவர்களின் கூட்டத்தவர்களின் எண்ணிக்கையும் கூடுகின்றது. அவர்களும் நாளடைவில் பல்கிப் பெருகுகின்றனர். இவ்வாறு 'சீதனக்காணி' மூலமும் ஒன்றுக்கு மேற்பட்ட குலத்தவர்கள் ஒரே கோவிலில் வழிபடும் உரிமை பெறுகின்றனர். ஒரு கோவிலில் ஆரம்பத்தில் ஒரு குலத்தினர் மட்டும் வழிபடும்போது பங்காளிகளாக உள்ளனர். சீதனக்காணி பெற்றதன் மூலம் மாமன், மைத்துனரும் வழிபட வரும்போது ஒரே குலதெய்வத்தைப் பங்காளிகள் மட்டுமல்லாமல் மாமன், மைத்துனரும் வழிபடுகின்றனர். இப்படி ஏற்படும் மாற்றமே ஒன்றுக்கு மேற்பட்ட குலத்தவர்கள் ஒரே தெய்வத்தைக் குலதெய்வமாக வழிபடும் நிலையை ஏற்படுத்துகின்றது.[22]

## காணித்தெய்வங்கள்-பெண் தெய்வ வழிபாடு

கொங்கு நாட்டுக் காணித்தெய்வங்களில் 75 விழுக்காடு பெண்தெய்வங்கள். 25 விழுக்காடு ஆண்தெய்வங்களாக இருக்கின்றன. தொல்பழங்காலத்தில் ஆண்கள் வேட்டையாடுதலில் இருந்தபோது, பெண்கள் இருப்பிடத்தைச் சுற்றியுள்ள நிலத்தைக் கொத்தி வேளாண்மை செய்தனர். அதனால் வேளாண்மைத் தொழில் தொடக்கத்தில் பெண்களின் கையில் இருந்தது. இதனால் சமூகத்தில் பெண்களின் நிலை மேலோங்கி நின்றது. இந்த வேளாண்மை ஒவ்வொரு பகுதியில் ஒவ்வொரு காலத்தில் நிலை பெற்றிருந்தது. எல்லாக் காலத்திலும் எல்லா இடங்களிலும் நிலைபெற்றிருக்கவில்லை. சில இடங்களில் தொல்பழங்கால வேளாண்மை எந்தவிதமான

மாற்றமுமின்றி நிலைபெற்றிருந்தது. கொங்குநாட்டிலும் இந்த நிலை அண்மைக்காலம் வரை நிலைபெற்றிருந்தது. இத் தொல்பழங்கால வேளாண்மை, பெண்ணின் செல்வாக்கு சமூக வாழ்வில் தொடர்ந்து நிலை பெற்றிருக்க வழி வகுத்தது. அதனால் இப்போக்கு, தாய்த்தெய்வ வழிபாடாக, பெண் தெய்வ வழிபாடு தொடர்ந்து செல்வாக்குப் பெறக் காரணமாயிற்று.

உலகம் முழுவதும் தொடக்கத்தில் வேளாண்மையைக் கண்டுபிடித்த பெருமை பெண் இனத்தைச் சேரும். பிரிபௌல்ட் என்ற அறிஞர் தாய் உரிமை என்ற பெருநூலில் இவ்வுண்மையைத் துவக்கிக் காட்டியுள்ளார். வேளாண்மையில் பெண்கள் ஈடுபாட்டுடன், அத்தொழிலைச் செய்கின்றவர்கள், அதனால் வாழ்க்கையில் பெண்ணே முழுமுதல் கடவுளாகக் கருதப்பட்டாள். உலகத்தில் சிறப்படைந்த ஆற்றங்கரை நாகரிகங்களில் மிகுதியும் கிடைப்பன பெண் உருவங்களும், இலிங்க வடிவங்களும் ஆகும். எகிப்து, மெசபடோமியா, பாபிலோன், சிந்துசமவெளி ஆகிய பகுதிகளில் வாழ்ந்து முடிந்த நகரங்களை அகழ்ந்தபோது கிடைத்த உருவங்களில் பெண் தெய்வங்களே மிகுதியும் கிடைத்தன. சிந்துவெளியில் கிடைத்த ஒரு முத்திரையில் ஒரு பெண்ணின் வயிற்றிலிருந்து செடி ஒன்று முளைத்து வருவது சித்திரிக்கப்பட்டுள்ளது.[23] மேற்கூறிய நகரங்களில் காணப்படும் தனிச்சிறப்பு வாய்ந்த பெண் வழிபாட்டினைப் பற்றிச் சந்தா என்பவர் கூறுவது எடுத்துக்காட்டத் தக்கது.

"சிரியாவிலே அசுத்தாத் என்னும் தத்துவமும், சின்னாசியாவிலே கிபிலேயும், எகிப்திலே சிகஸ் கோட்பாடும் தோன்றிய அதே சமுதாய

நிலையிலேதான் இந்தியாவில் சக்தி வழிபாடு தோன்றியிருத்தல் வேண்டும்."[24]

சந்தா அவர்கள் குறிப்பிடும் சமுதாய நிலையைக் காட்டிலும் பொருளாதார நிலையே பெண் வழிபாட்டுச் சிறப்புக்குக் காரணமாய் அமைந்தது.

சிந்துவெளி நாகரிகத்தினை ஆராய்ந்த சர்ஜான் மார்சல், அங்கு கிடைத்த பெண் உருவங்களைப் பற்றி ஆய்ந்து முடிவுகளைக் கூறியுள்ளார். அவர் கருத்துப்படி, சிந்து நதி தீரத்தில் சக்தி வழிபாடே மகோன்னத நிலையை எட்டி நின்றது. மேலும் இந்தியக் கிராமங்களில் நிலை பெற்றிருக்கும் பெண் தெய்வங்கள் கூட, சிந்துவெளி தாய்த் தெய்வத்தின் பிரதிநிதிகளே என்று கூறுவார். அவர் கூறியிருப்பது கவனிக்கத்தக்கது.

'அன்னை அல்லது பேரன்னை' பிற்காலத்திலே தோன்றிய சக்தியைத் தோற்றுவித்த மூலப் பொருளின் முதலுருவாகும். அவளுடைய பிரதிநிதிகளே கிராம தேவதைகள் அல்லது கிராமச் சிறுபெண் தெய்வங்கள். அவற்றின் பெயர்களும், தல சரிதைகளும் கணக்கிலடங்கா எனினும் அவையாவும் ஒரே பொருளையே குறிக்கின்றன. அந்த மூல சக்தியே வளத்தின் தெய்வம். இப்பெண் தெய்வங்கள் யாவும் ஆரியருக்கு முற்பட்ட ஆரியரல்லாத இன மக்களிடையே செல்வாக்கு உடையனவாயிருந்தன என்பதில் ஐயமில்லை. அத்தகைய மக்களிடையே பெண்தெய்வ [அன்னை, தாய்] வழிபாடு நிலைத்துள்ளது.[25] மார்சல் அவர்களின் இக்கூற்று சிந்துவெளி நாகரிகத்துடன் பெண்தெய்வ வழிபாடு மறைந்து விடவில்லை என்பதனைப் புலப்படுத்துகின்றது.

இத்தகு வரலாற்றுச் சான்றுகளால் பெண் தெய்வத்திற்கும், வேளாண்மைக்குமிடையில் நிலை பெற்றிருந்த தொடர்பு புலப்படும். இந்தத் தொடர்பின் எச்சமாகவே இன்றைய வேளாளரிடையிலும் பெண் தெய்வங்கள் மிக்கிருப்பதைக் காணமுடிகிறது.

நாட்டுக்கல்

ஆவணங்களில் நாட்டார்கல் என்று கூறப்பெறுவது நாட்டுக்கல்லையே குறிப்பது ஆகும். நாட்டுக்கல் வழிபாடு எனும் சடங்கு கொங்கு வேளாளர் திருமணங்களில் நடைபெறுகிறது.[26] நாட்டுக்கல் வழிபாடு முச்சந்தியில் நடைபெறும். அதனால் இவ்வழிபாடு பண்டையநாளைய சந்தி வழிபாட்டின் எச்சமாகக் கொள்ளலாம். சங்க இலக்கியத்தில் கவர்த்த [கவலை] வழிகளில் தெய்வங்களும் நடுகல்லும் நிற்கும் என்று கூறப்பெறுகின்றது.[27] இதுவும் சந்தி வழிபாட்டினையே குறிக்கின்றது.

சந்தி வழிபாடு உலகந்தழுவிய ஒன்று. சந்தியில் சடங்கு செய்தால் நம்முடைய பாவங்களும் துயரங்களும் வழிகளில் சென்றுவிடும், நம்மிடம் தங்காது என்று கருதும் கோட்பாட்டின் அடிப்படையாக சந்தி வழிபாடு தோன்றியது. சேலம் மாவட்டத்தில் சந்தியப்பன் என்ற பெயரில் சந்தி வழிபாடு செய்யப்பெறுகின்றது.[28] மிருச்ச கடிகம் என்ற வடமொழிக் காவியத்தில் சந்தி வழிபாடு பற்றிப் பேசப்பட்டுள்ளது.[29] வடமேற்கிந்தியாவில் இன்றுவரை சந்தி வழிபாடு நிலைபெற்றுள்ள தன்மையை டி.டி. கோசாம்பி அவர்கள் சான்றுகளுடன் நிறுவியுள்ளார்.[30] ஆந்திரத்தில் காப்பு என்ற

சாதியாரிடையில் சந்தி வழிபாடு நிலைபெற்றுள்ளது.[31] இந்தப் பின்னணியில் நாட்டுக்கல் வழிபாட்டினை நோக்க வேண்டும்.

நாட்டுக்கல் வழிபாடு நாட்டார் வழிபாட்டினைக் குறிக்கும் என்பர். நாட்டார் சபையின் முன்னிலையில் திருமணம் நடைபெற்றது என்று எடுத்துக்காட்டவே நாட்டுக்கல் வழிபாடு செய்யப் பெறுவதாகக் கூறப்பெறுகின்றது. முச்சந்தியில் நடத்தப் பெறுவதற்குக் காரணம் சடங்கு முக்கியத்துவம் வாய்ந்தது என்பதையே காட்டுகின்றது. மேலும் சடங்கின்போது படைக்கப்பெறும் பொருட்களும் அக்கருத்தினை வலியுறுத்துகின்றன. பண்டை நாளைய சந்தி வழிபாட்டின் எச்சமே நாட்டுக்கல் வழிபாடு என்பதுதான் உண்மையாக இருக்கக் கூடும்.

முற்காலத்தில் கொங்கு 24 நாட்டில் உள்ள பெரியவர்கள் அனைவரும் வந்து திருமணத்தை முன்னின்று நடத்தி வைக்க வேண்டும் என்ற மரபு இருந்தது. காலப்போக்கில் மக்கள் தொகைப்பெருக்கமும் ஓரே நேரத்தில் ஓரே ஊரில் பல திருமணங்கள் நடைபெறுவதாலும் 24 நாட்டுப் பெரியவர்களும் வரமுடியாத சூழ்நிலை காரணமாக இந்நிலை மாறிவிட்டது. ஒவ்வொரு ஊரிலும், ஊரின் தலைவாசலில் நாட்டுக்கல் நடப்பட்டு இருக்கும். அந்நாட்டுக்கல்லைச் சுற்றிவந்து வணங்கி அதற்குரிய சடங்குகள் செய்தாலே 24 நாட்டுப் பெரியவர்களும் வந்திருந்து திருமணத்தை வாழ்த்தியதாகப் பொருள்படுகிறது. இதனால் தான் 'நாட்டுக்கல் வழிபாடு' என்பதே வந்தது.[32]

இன்றளவும் சீர்செய்து நடைபெறும் திருமணங்களில் இந்நாட்டுக்கல் வழிபாட்டினைக் காணமுடிகிறது.

## மொடவாண்டி

கொங்கு வேளாளர்கள் முடமான குழந்தைகளைப் பாதுகாக்க வேண்டும் என்ற மனிதாபிமான அடிப்படையிலே மொடவாண்டி என்ற பிரிவினை ஏற்படுத்தினர். கி.பி.பதினெட்டாம் நூற்றாண்டில் விசய நகர அரசன் ஆட்சிக்காலத்தில் துளுவ நாயக்கர் படைத்தலைவன், காவிரி ஆற்றில் பெட்டி ஒன்று மிதந்து வரக் கண்டான். அதைப் பார்த்து அருகில் இருந்த அரசனிடம் கூறியபோது அரசன் பெட்டியை எடுத்து வந்தால் பெட்டி எனக்கு, பெட்டிக்குள் இருக்கும் பொருள் உனக்கு என்று கூறினான். அதன்படி அந்தப்பெட்டியை எடுத்துப் பார்த்துபோது அதில் அழகான குழந்தை ஒன்று இருந்தது. ஆனால் அந்தக் குழந்தை முடமாக இருந்தது. அந்தக் குழந்தையைத் துளுவ நாயக்கன் வளர்க்க நினைத்தான். அப்போது இருபத்து நான்கு நாட்டைச் சேர்ந்த கொங்கு வேளாளர்களும் அந்தப் பொறுப்பைத் தாங்கள் ஏற்றுக் கொள்வதாகக் கூறினர். அதற்கேற்பக் கொங்கு வேளாளர்கள் தண்டிகை என்ற ஊரில் முடமான குழந்தைகளைக் காக்க, சத்திரம் ஒன்றை ஏற்படுத்தினர். உம்பழத்தம், செம்பத்தொழுவு, புண்ணைமேடு, சொழமூர், கோட்டூர், தண்டிகை, சத்தியமங்கலம் ஆகிய ஊரைச் சேர்ந்தவர்கள் எண்ணாயிரம் பொற்காசுகளை அந்தச் சத்திரத்திற்கு வழங்கி முடக் குழந்தைகளைக் காக்க ஏற்பாடு செய்தனர். இச்செய்தி 'மொடவாண்டிப் பட்டயத்தின்' மூலம் அறியப்படுகின்றது.[33]

மொடவாண்டி பற்றி, சத்தியமங்கலம் [கஸ்பா பேட்டை] என்ற ஊரில் விசயநகர அரசர் ஆட்சிக்காலத்துக் கல்வெட்டு இருந்தது. அது தற்போது ஈரோடு கலைமகள் கல்விக் கூடத்தில் வைக்கப்பட்டுள்ளது.

அக்கல்வெட்டில் ஓலைச்சுவடியில் கூறப்பெற்றுள்ள செய்திகள் முழுமையும் கூறப்பெற்றுள்ளன. மொடவாண்டிகள் இன்று பாடிவரும் பாடல்களில் இந்தக் கல்வெட்டினைப் பற்றியும் குறிப்பிடுகின்றனர்.[34]

கொங்கில் வாழ்ந்த வேட்டுவர்கள், சமுதாயத்தில் ஒரு நல்ல நிலையை அடையாமல் இருந்தனர். அவர்கள் வேட்டைக்காகப் பல இடங்களுக்குச் செல்ல வேண்டியிருந்தது. அவ்வாறு இருந்த காலகட்டத்தில் முடமாகப் பிறந்த குழந்தைகளைக் கொன்றனர். இதேபோல் தோடர்களும் பெண்குழந்தை பிறந்தால் அவற்றைக் கொன்றனர்.[35] தோடர்கள் பெண்களை வலிமைமிக்க ஆண் குழந்தைகளைப் பெற்றுத்தரும் இயந்திரமாக மட்டுமே கருதினர். இந்தச் சூழ்நிலையை மாற்றுவதற்குக் கொங்குவேளாளர்கள் கொங்கு நாட்டில் மொடவாண்டிகள் என்ற அமைப்பை உருவாக்கினர்.

மொடவாண்டிப் பட்டயம் இரண்டு செய்திகளைக் குறிப்பிடுகின்றது. ஒன்று ஊனமுற்ற குழந்தைகள் அழிக்கப்பட்டனர். இரண்டு – அதனால் மொடவாண்டிகள் என்ற பிரிவினர் உருவாயினர்.

முடமாகப் பிறந்த குழந்தைகளை வளர்க்கும் மொடவாண்டிகள் கொங்கு வேளாளர்கள் வசிக்கும் கிராமங்களுக்குச் செல்லும்போது, அவர்களுக்குக் கிராம மக்கள் தானியங்களையும், பணத்தையும் வழங்கினர். மொடவாண்டிகளின் பழக்க வழக்கங்கள், சமூக அமைப்பு முதலானவை கொங்கு வேளாளர்களைப் போலவே அமைந்தன. அதற்குக் காரணம் கொங்கு வேளாளர்களால் உருவாக்கப்பட்ட மொடவாண்டிகளின் வாழ்க்கையும், கொங்கு வேளாளர்களைச்

சார்ந்து வாழ்ந்ததால் அவர்களைப் போலவே அமைந்தது. எனவே மொடவாண்டிகள் தங்களைக் கொங்கு வேளாளர்கள் என்று அழைத்துக் கொண்டனர்.

ஆற்றில் பேழை ஒன்று மிதந்து வந்தது. அண்ணன், தம்பி இருவரும் அதை எடுத்துப் பார்த்தபோது அதில் முடமான குழந்தை ஒன்று இருந்துள்ளது. அதை அண்ணன் வளர்ப்பதாக முடிவு செய்யப்பட்டது. அதிலிருந்து முடமான குழந்தைகளை வளர்ப்பதற்குக் காணியும், தானியமும் கொடுத்ததாகக் கூறப்படுகிறது. அதிலிருந்தே முடமான குழந்தைகளை வளர்ப்பதற்கென ஒவ்வொரு ஊரிலும் மொடவாண்டி என்ற பிரிவு ஏற்படுத்தப்பட்டது. முடமான குழந்தைகளை வளர்ப்பதால் 'முடம்' என்ற பெயரும் ஆண்டிகளைப்போல் வீடு வீடாகச் சென்று தானியங்களை வாங்கியதால் 'ஆண்டி' என்ற பெயரும் சேர்ந்து 'மொடவாண்டி' என்ற பெயர் வந்தது. மற்றபடி கொங்கு வேளாளர்களுக்கும் இவர்களுக்கும் வேறுபாடு இல்லை.[36]

## கொங்குக் குடிமகன்கள்

கொங்கு வேளாளக் கவுண்டர்களோடு எல்லா வகையாலும் நெருங்கிய தொடர்புடைய கொங்கு நாவிதன், கொங்கு வண்ணான், கொங்குக் குயவன், கொங்குப் பண்டாரம், கொங்குப் பறையன், கொங்கு மாதாரி – இவர்கள் 'கொங்குக் குடிமகன்கள்' என்று அழைக்கப்பெறுகின்றனர்.

### அ. கொங்கு நாவிதன்

கொங்கு வேளாளரின் திருமணங்களில் கொங்கு நாவிதனின் பங்கு மிக இன்றியமையாததாகும். இந்நிலை வேறு எந்த சமூகத்திலும்

காணப்படாத ஒரு சிறப்பாகும். கொங்கு வேளாளரின் திருமணங்களிலும், கொங்கு வேளாளரின் வீடுகளில் நடைபெறும் விழாக்களிலும் இந்நாவிதனே முக்கியப்பங்கு வகிக்கிறான். முடி இறக்குதல், திருமணம், விழாக்கள் போன்ற மங்கல நிகழ்ச்சிகளை உறவினருக்குத் தெரிவிக்கும் பொருட்டு, நாவிதன் மூலமே அழைப்பு அனுப்பப்படும். திருமணங்களில் மங்கல வாழ்த்துப் பாடுவது, கொங்கு நாவிதனுக்கு மட்டுமே உரிய ஒரு சிறப்பு உரிமையாகும். இது மட்டுமல்லாது அவர்களுக்கு முடி வெட்டும் தொழில், முகச் சவரம் செய்யும் தொழில் முதலானவைகளையும் கொங்கு நாவிதனே செய்கின்றான். பிறப்பு முதல் இறப்பு வரையுள்ள அனைத்துச் சடங்குகளிலும் பங்கேற்கிறான். கொங்கு வேளாளரைத் தவிர பிற இனத்தாருக்கு இந்நாவிதன் எக்காரணம் கொண்டும் எந்த ஒரு பணியும் செய்யமாட்டான். இதற்கு ஒரு காரணம் சொல்லப்படுகிறது. முன்னாளில் கொங்கு வேளாளர் குடும்பத்தில் ஒருவர், தன் மூத்த மகனையே நாவிதனாக நியமிக்க வேண்டிய ஒரு சூழ்நிலை ஏற்பட்டதால், அவனை எவரும் இழிவாகக் கருதிவிடக் கூடாது என எண்ணி, அவனையே நாவிதனாகக் கருதி, நாவிதன் இல்லாமல் எந்த ஒரு சீரும் நடைபெறக்கூடாது எனும் கட்டாயத்தை ஏற்படுத்தினார்.[37] மங்கல வாழ்த்துப்பாடல் நாவிதனைக் குடிமகன், மங்கலன் எனக் குறிப்பிடுகிறது. தங்கள் குடியிலே பிறந்த ஒருவர் என்ற அடிப்படையிலேயே கொங்கு நாவிதனைக் குடிமகன் என்று அழைக்கும் பழக்கம் வந்திருக்க வேண்டும் என சி.சுப்பிரமணியம் குறிப்பிடுவார்.[38]

பழங்காலந்தொட்டு நோய் நொடிகளைத் தீர்க்கும் மருத்துவனாக இருந்துள்ளான். நோயாளியின் கையைப் பிடித்து நாடி பார்த்து

நோயின் தன்மையைக் கூறுவதிலிருந்து, அந்நோயைக் குணமாக்கும் வரை [ரண சிகிச்சையும் கூட] அனைத்தும் கொங்கு நாவிதனே செய்வான். அதனால், இவனுக்கு மருத்துவன் என்ற பெயர் ஏற்பட்டது.

ஒரு கொங்கு நாவிதன் மற்றொரு கொங்கு நாவிதன் வீட்டில்தான் பெண்ணெடுப்பான். வேட்டுவ நாவிதர்கள் வீட்டிலோ அல்லது வேறு நாவிதர்கள் வீட்டிலோ பெண்ணெடுக்க மாட்டான்.

கொங்கு நாவிதன் வீட்டில் நடைபெறும் அனைத்துச் சடங்குகளும் கொங்குவேளாளர் வீட்டில் நடைபெறுவதைப் போல் நடைபெறும்.

## ஆ. கொங்கு நாசுவத்தி

கொங்கு நாவிதனின் மனைவியே கொங்கு நாசுவத்தி எனப்படுவாள். நாவிதன் எவ்வாறு மருத்துவத்தில் கை தேர்ந்தவனாக உள்ளானோ, அது போன்று இவளும் மருத்துவச்சியாகச் செயல்பட்டிருக்கிறாள். கொங்கு வேளாளப் பெண்களுக்கு மகப்பேறு பார்க்கும் மருத்துவச்சியாக இருந்துள்ளாள். மகப்பேற்று நேரத்தில், அப்பெண்ணுடன் இருந்து மகப்பேறு பார்க்கும் பொறுப்பையும் ஏற்று, தாயையும், சேயையும் கவனிக்கும் பொறுப்பையும் ஏற்கிறாள். முன்காலத்தில் ஸ்கந்தபுரம் எனும் இன்றுள்ள தாராபுரத்தை ஆண்ட வேந்தனின் மகள், கர்ப்ப வேதனையில் இறக்கும் நிலைக்கு ஆளாகிறாள். அப்போது கொங்கு நாசுவத்தியே, அப்பெண்ணின் வயிற்றைக் கீறித் தாயையும், சேயையும் காத்து மருத்துவம் செய்த செய்தியைக் கொங்கு மண்டல சதகம் குறிப்பிட்டுள்ளது.[39]

கொங்கு வேளாளரைப் போன்ற கூட்டமுறைகளும் இவர்களிடத்துக் காணப்படுகின்றன.[40] கொங்கு வேளாள இனத்தைச் சார்ந்த அருமைப் பெரியவர்களே கொங்கு நாவிதனுடைய இல்லத் திருமணங்களில் அருகுமணம் எடுக்கிறார்கள்.[41] இறப்புச் சடங்கின் போது கோடியும் போடுகிறார்கள். கொங்கு வேளாளப் பெண்கள் அணியும் தாலியின் அமைப்பும், கொங்கு நாவிதப் பெண்கள் அணியும் தாலியின் அமைப்பும் ஒன்று போலவே காணப்படுகின்றன. இது போன்றே கணவனை இழந்து விடில் வெள்ளைப் புடவையையே உடுத்துகின்றனர், மறுமணமும் செய்து கொள்வதில்லை.

இ. கொங்குக்குயவர்(குலாலர்)

கொங்கு நாட்டில் மண்பாண்டம் [நவபாண்டம்] செய்பவர்கள் குயவர் [குலாலர்] என்று அழைக்கப்படுகின்றனர். கொங்கு நாட்டில் மண்பாண்டம் செய்வதற்கு ஆட்கள் தேவைப்பட்டபோது கொங்கு இருபத்துநான்கு நாட்டைச் சேர்ந்தவர்களும், பாண்டிய நாட்டிலிருந்து வேட்கோவரை அழைத்து வந்தனர். அவர்களிடம் தங்கள் நாட்டில் நவபாண்டம் செய்ய ஒப்பந்தம் செய்து கொள்ள வேண்டுமென்றனர். அதற்கு அவர்கள், தங்கள் உறவினரைப் பிரிந்து வந்து கொங்கு நாட்டில் வாழ்வதால் என்ன பயன் என்று கேட்டனர். அதற்குக் கொங்கு இருபத்துநான்கு நாட்டைச் சேர்ந்தவர்களும் ‘கொள்வது கொடுப்பது’ தவிர பிற எல்லாம் எங்களைப் போலவே செய்து கொள்ளுங்கள் என்றனர். அவர்கள் சம்மதித்த பின், கொங்கு இருபத்துநான்கு நாட்டிற்கும், இருபத்தி நான்கு குலாலர்களை நியமித்தனர். நியமிக்கும் போது அவர்கள் கொங்கு வேளாளரின்

திருமணம் மற்ற விசேடங்களுக்கு இன்னின்ன நவபாண்டம் செய்து தரவேண்டும் என்றும், அதற்காகக் கொங்கு வேளாளர்கள் இவ்வளவு தானியங்களை வழங்குவார்கள் என்றும் குறிப்பிட்டுள்ளனர்.[42]

குலாலர்கள் கொங்கு வேளாளரின் வீடுகளில் நடைபெறும் திருமணத்தில் மடைக்கலப்பானை, கரகப்பானைகள் போன்றவைகளையும் செய்து தருவர். இவை தவிர, பொங்கல் சமயத்தில் பொங்கற் பானையும், கார்த்திகைத் தீபத்தின்போது விளக்குச் சுட்டிகளையும் செய்து தருகின்றனர். மற்றும் கோவில்களுக்கு உருவாரம் செய்யும் பணியையும் செய்கின்றனர். குல தெய்வக்கோவில்களிலும், பிற கோவில்களிலும் வேண்டுதலுக்காக வேண்டிக் கொண்டவர்கள் நாய், காளை, குதிரை, மனிதர் போன்ற உருவங்களை இவர்கள் மூலமாகவே செய்து வைக்கின்றனர். ஆரம்பக் காலங்களில் குலதெய்வக் கோவில்களில் சுடுமண்குதிரைகள் அதிக அளவில் செய்து வைக்கப்பட்டன. ஆனால் தற்போது சிமெண்டினாலேயே செய்து வைக்கப்படுகின்றன.

கரிகாற் சோழன் மகளுக்கு வலிப்பு நோய் ஏற்பட்டதாகவும், அதனைப் போக்கும் பொருட்டுக் கொங்குக் குயவனே மட்பாவை செய்து குறிபார்த்துச் சுட நோய் தீர்ந்ததாகவும் கொங்கு மண்டல சதகம் குறிப்பிடுகின்றது.[43] கோவில்களில் வாஸ்து சாத்திரத்திற்கு முதலிடம் கொடுத்துக் கோவில்கள் அமைவதற்கு அக்காலத்தில் குயவர்களும் ஒரு காரணமாக இருந்துள்ளார்கள்.[44]

ஈ. கொங்கு வண்ணான்

வண்ணானின் தொழில், துணிகளைச் சலவை செய்தல் ஆகும். நாவிதனுக்கு அடுத்தபடியாகக் கொங்கு வேளாளர் வீட்டுச் சிறப்பு

நிகழ்ச்சிகளில் வண்ணானின் பங்கு குறிப்பிடத்தக்கது. நிகழ்ச்சி நடைபெறும் வீடுகளில் விரிப்பதற்குத் தேவையான துணிகளை வண்ணானே கொண்டு வருகின்றான். திருமணம் போன்ற நற்காலங்களில் வீட்டுப் பந்தல்களில் வெள்ளை நிறத்துணிகள் வண்ணானாலேயே கட்டப்படுகின்றன. திருமணத்தில் பெண்ணுக்கும், மாப்பிள்ளைக்கும், அவர்கள் நடந்து செல்லும் இடங்களில் எல்லாம் 'மாத்து விரித்தல்' துணியை விரித்துப் போடுவான்.

பெண் பூப்பெய்திய செய்தியைப் பெண்ணின் தாய்மாமன் வீட்டில் முதன் முதலில் தெரிவிக்கும் பணியை வண்ணானே செய்வான். பூப்புச் சடங்கின்போது பிள்ளையார் கோவிலுக்குத் தட்டச்சீர்களை எடுத்துச் செல்லும்போது தீப்பந்தம் பிடித்துச் செல்வான். கோவில் திருவிழாக்களின் போதும் பந்தம் பிடித்துச் செல்வான்.

இறந்தவரை இடுகாட்டிற்கு எடுத்துச் செல்லும்போதும் வண்ணானே தீப்பந்தம் பிடித்துச் செல்கிறான். முன்காலத்தில் மின்விளக்கு வசதி இல்லாமல் இருந்ததால், தீப்பந்தங்களின் உதவியுடன் நிகழ்வுகள் நடந்தன. தற்போது மின்விளக்கு வசதி இருப்பதாலும் "பெட்ரோமாஸ்" விளக்கு இருப்பதாலும் தீப்பந்தம் தேவையில்லை. ஆனால், மரபு கருதியும், அவரவர் செய்து வந்த தொழில் உரிமை விட்டுப் போகாமல் இருக்கும் வண்ணமும் இன்றும் தீப்பந்தம் பிடித்துச் செல்லுதல் நடைபெற்று வருகின்றது.

### உ. கொங்குப் பண்டாரம்

கொங்கு நாட்டில், கோவில்களுக்குப் பூசை செய்வதற்கென்றே நியமிக்கப்பட்டவர்கள் கொங்குப் பண்டாரங்கள். குலதெய்வக்

கோவில்களில் பெரும்பான்மையும் பண்டாரங்களே பூசை செய்கின்றனர். கொங்கு வேளாளர் வீடுகளில் நடைபெறும், சிறப்பு நிகழ்ச்சிகள் நடக்கும் தினத்தன்று தேவையான இலைகளைக் [உணவு உண்பதற்கு – வாழை இலை அல்லது பாக்கு மட்டை அல்லது பூவரச இலைகளை வட்டமாகக் கோர்த்து வைத்திருப்பர்] கொண்டு வந்து கொடுப்பார்கள். கிராமப்புறங்களில் இன்றைக்கும் இவ்வழக்கத்தைக் காணமுடிகிறது.[45]

திருமண நிகழ்ச்சிகளின்போது தேவைப்படும் மலர்களையும், பெண், மாப்பிள்ளைக்கு வேண்டிய பூமாலைகளையும் கொண்டு வந்து தருவான். இறப்புச் சடங்கின்போது இவனுக்குள்ள பங்கு பற்றி முன்னரே விளக்கப்பட்டுள்ளது.

ஊ. கொங்குக் கம்மாளன்(ஆசாரி)

கொங்கு வேளாளர்களின் முக்கியத்தொழில் வேளாண்மை என்பதால், வேளாண்மைக்குத் தேவையான கருவிகளைக் கொங்குக் கம்மாளர்களே [ஆசாரிகள்] செய்து தருகின்றனர். அதுமட்டுமல்லாது வீட்டில் சமையல் செய்ய உதவும் கருவிகளையும் [அரிவாள்மணை, தேங்காய் துருவி, சட்டுவம் மற்றும் இரும்பினாலான கருவிகளும்] செய்து தருகின்றனர். கோவில்களுக்குத் தேவையான தேர், சப்பரம் முதலானவைகளையும் இவர்களே செய்கின்றனர்.

எ. கொங்குப் பறையர்கள்

கொங்கு வேளாளரின் இல்லத் திருமணங்களில் கொம்பை ஊதுவதும், பறையை முழக்குவதும் இவர்களே. அண்ணன்மார்சாமி கதையில் இடம்பெறும் சாம்புவன் ஒரு வீரமுள்ள பறையனே.

போரிலும், குடும்பப் பணிகளிலும் அவர்களுக்கு உறுதுணையாக இருந்துள்ளான். வேட்டுவ வேளாளர் சண்டையில் இறந்துவிடுகிறான் சாம்புவன். இவனுடைய உருவச்சிலையை அண்ணன்மார்சாமி கோவிலில் அமைத்துள்ளனர். கொங்கு வேளாளர்கள் இவன் நினைவாக அச்சிலையை வழிபடுகின்றனர்.[46]

கொங்கு வேளாளர்களின் வீடுகளில் நடைபெறும் சடங்குகளிலும், விழாக்களிலும் இசை வாத்தியங்களை [கொட்டு, மேளம், நாதஸ்வரம்] இசைக்கின்றனர்.

கொங்குப் பறையர்கள் ஒரு ஊரில் வாழும் கொங்கு வேளாளர் தவிர, மற்ற இன மக்களுக்குத் தொழில் செய்வது இல்லை.

### ஏ. கொங்கு மாதாரி

கொங்கு வேளாளர்களின் விவசாயத்திற்கு மிகவும் உறுதுணையாக இருப்பவர்கள் கொங்கு மாதாரிகள். இன்றைய நாளைப்போல் மின்சாரத்தின் உதவியினால் பயிர்களுக்கு நீர் பாய்ச்சும் வசதி அன்றைக்கு இல்லை. மாடுகளின் உதவியினால் கிணற்றிலிருந்து கமலை [கபிலை] ஏற்றம் பொருந்திய கிணறுகளில் நீர் இறைக்கப் பயன்படும் தோலால் ஆன தும்பிகளையும் இவர்களே தைத்துக் கொடுத்து வந்தனர். ஒவ்வொரு விவசாயக் குடும்பத்திற் கென்று, தனி மாதாரிக் குடும்பம் இருக்கும். இக்குடும்பத்திலுள்ள ஆண்கள் மாடுகளைக் கவனித்தல், சாணம் எடுத்தல், மாடுகளைக் குளிப்பாட்டல், அவைகளுக்குத் தீவனமிடுதல் போன்றவைகளைக் கவனித்துக் கொள்வார்கள். நிலத்தில் பாத்தி கட்டுதல், தோட்டத்திற்கு நீர்ப் பாய்ச்சுதல் முதலியவற்றையும் செய்வார்கள். பெண்கள் களை எடுத்தல், காய்கறி பறித்தல், வீட்டு வாசலில் சாணநீர் தெளித்தல்

[வாசல் தெளித்தல்] முதலிய பணிகளைச் செய்வார்கள். இதற்கென அவர்களுக்கு அன்றாடம் கூலி கொடுப்பது இல்லை. அறுவடைக் காலங்களில் அவர்கள் குடும்பத்திற்குத் தேவையான தானியங்களைக் கொங்கு வேளாளர்களே கொடுத்து வந்துள்ளனர். விழாக்காலங்களில் உணவும் உடையும் கொடுத்துத் தனது குடும்ப உறுப்பினர்களைப் போல ஆதரித்தும் வந்தனர். அதுபோல் கொங்கு மாதாரிகளின் பங்கு கொங்கு வேளாளர் குடும்ப நிகழ்ச்சிகளிலும் காணப்படுகிறது. எடுத்துக் காட்டாக, கொங்கு வேளாளர் குடும்பத்திலுள்ள அனைவருக்கும் காலணிகள் தைத்துக் கொடுப்பதோடு, புதுமணத் தம்பதியருக்கும், தான் தைத்த காலணிகளை முதன்முதலில் அவனே அணிவிப்பான். அதற்கு அவனைச் சிறப்பிக்கும் பொருட்டு அரிசி, பருப்பு, தேங்காய், பழம், வெற்றிலை, பாக்கு, கருப்பட்டி, வேட்டி, துண்டு, சேலை முதலியவைகளைக் கொடுத்துச் சிறப்புச் செய்வர்.

இறப்பு நிகழ்ச்சியின்போது, இறப்புச் செய்தியை உறவினர்களுக்குத் தெரியப்படுத்துவது கொங்கு மாதாரியின் கடமையாகும்.

கொங்கு வேளாளர்களின் வாழ்வில் கொங்குக்குடிமக்களின் பங்களிப்பு பாராட்டுக்குரியதாகும்.

இன்றும் கொங்கு வேளாளர்கள் பல்வேறு தனித்தன்மைகள் கொண்டு வாழ்ந்து வருதல் பாராட்டுக்கும் சிறப்புக்கும் உரியதாகும்.

அருமைக்காரர், அருமைக்காரியின் பங்கு வைதீகத்திற்கு இடங்கொடுக்காமல், பண்டைய முறையிலே சிறப்புக் கொடுத்துத் திருமணம் நடத்தி வருவது சிறப்புக்குரிய ஒன்றாகும்.

மங்கல வாழ்த்துப் பாடலைத் திருமணங்களில் பாடிவரும் மரபு ஒரு குறிப்பிடத்தக்க நிகழ்ச்சியாகும்.

ஊர் நாட்டார்களுக்குக் கட்டுப்பட்டுத் திருமணம் நடைபெறு கின்றது என்பதை நாட்டுக்கல் வழிபாடு உணர்த்துகின்றது.

கொங்குக் குடிமக்களாகிய கொங்கு நாவிதன், கொங்கு வண்ணான், கொங்குப் பண்டாரம், கொங்குக் குயவன், கொங்கு மாதாரி, கொங்குப் பறையன் இவர்களைப் பஞ்ச சாதியினர் என்றும், கொங்குப் பதினெண் குடிகள் என்றும் குறிப்பிடுகின்றனர். இவர்களெல்லாம் இன்றைய நிலையில் தாழ்ந்தவர்களாகக் கருதப் பெற்றாலும், இவர்களை விடுத்து இன்ப துன்ப நிகழ்ச்சிகள் நடைபெறா. இவர்களுடைய பழக்க வழக்கங்கள் முற்றிலும், கொங்கு வேளாளர் திருமணச் சடங்குகள், மறுமணம் இல்லாதநிலை, விதவை வெள்ளை ஆடை அணிதல் முதலானவற்றோடு ஒத்துள்ளன. இவர்களின் பழக்க வழக்கங்களை நோக்கும்பொழுது நெடுநாட்களாக சுமார் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் இவர்கள் ஒன்றாக இருந்திருக்க வேண்டும் என்ற கருத்துத் தோன்றுகிறது. தொழில்முறை கருதி, ஒவ்வொரு தொழிலையும் செய்ய வேண்டிய கட்டாயத்தினால் இவர்கள் தொடர்புள்ள அத்தொழில்களை மேற்கொள்ள, அதனால் உயர்வு தாழ்வு ஏற்பட்டது. மற்ற நிலையில் எவ்வகையிலும் குறைவுடையவர் அல்லர்.

இன்றும் கொங்குப் பறையர்கள் தாங்கள் தனி இனத்தவர் அல்லர், கொங்கு வேளாளரின் ஒரு பிரிவினர்தான் எனக் கூறுகின்றனர். இது மேற்கூறிய கருத்தை அரண் செய்வதாக உள்ளது.

கொங்குப் பதினெண் குடிகளிடத்தும் கொங்கு வேளாளரிடத்தும் இதனால் எந்தவித சமுதாயக் கருத்து வேறுபாடுகளோ, சமுதாயச் சண்டைகளோ, ஏற்றத் தாழ்வுகளோ இருந்ததில்லை.

# அடிக்குறிப்புகள்

1. சோமலெ, தமிழ்நாட்டு மக்களின் மரபும் பண்பாடும், ப.106
2. எஸ்.ஏ.ஆர். சின்னச்சாமி கவுண்டர்,
   கொங்கு வேளாளர் புராண வரலாறு, ப.298
3. கழகத் தமிழ்க் கையகராதி, ப.263
4. திருக்குறள், 60
5. சி.சுப்பிரமணியன், கொங்கு நாட்டு மங்கல வாழ்த்துப் பாடல், ப.21
6. க.கிருட்டிணசாமி, கொங்கு நாட்டுப் புறப்பாடல்கள், ப.32
7. வி. சரசுவதி வேணுகோபால், தமிழக நாட்டுப்புறவியல், ப.77
8. சி.சுப்பிரமணியன், மு.கூ.நூ, ப.26
9. க.கிருட்டிணசாமி, மு.கூ.நூ, ப.33
10. வெ.அ.நாகரத்தினம், கோவை மாவட்ட அகமுடையர்
    குலமரபும் பண்பாடும், ப.53
11. மேலது,
12. J.C.Frazerï Totemism and Exogamy, 1910, Vol. IV, PP. 10 - 13
13. John V. Ferreira, Totemism in India, 1965, P.224
14. தே. ஞானசேகரன், நாட்டார் சமயத் தோற்றமும் வளர்ச்சியும், ப. 76
15. நா. வானமாமலை, தமிழர் பண்பாடும் தத்துவமும், ப.65
16. வெ.அ.நாகரத்தினம், மு.கூ.நூ, ப.57
17. தே.ப.சின்னச்சாமி, கொங்கு வேளாளர் சடங்குகளில் பண்பாடு, ப.25
18. க.கிருட்டிணசாமி, கூட்டமும் திருமணமும், ப.6
19. A. Appadurai, Economic Conditions in Sothern India, Vol-I, P.120

20. பெரியார் மாவட்டம், பெருந்துறை வட்டம், சர்க்கார் பெரிய பாளையம் கல்வெட்டுக்கள், தொல்பொருள் ஆய்வுத்துறை, கோவை - 9.

21. வேட்டுவர் பூர்வ பட்டயம், கொங்கு திங்கள் இதழ், தொகுதி - 1973, பக். 90,91, 129, 130, 145, 157

22. வேலம்மாள், நேர்காணல் நாள், 11.5.2000

23. Debiprasad Chattopadyaya, Lokayata a study in Ancient Indian Materialism, P.293

24. Ibid (Quoted from chanda, Indo, Aryan Races), P.150

25. John Marshall, Mohenjodara and the Indus civilization, Vol-I, P.51

26. புலவர் செ. இராசு, கம்பர் தமிழ், ப.69

27. அகநானூறு, 53

28. ஆர்.பூங்குன்றன், நேர்காணல் நாள் 15.5.2000

29. Dhamodar Dhanmand Kosambi, Myth and Reality, P.82

30. Ibid,

31. Edgar Thurston, Castes and Tribes of South India, Vol. III, P. 244

32. P.சடையப்பன், நேர்காணல் நாள் 24.5.2000

33. S.P.Kandasamy, History of Kongu Vellalas, PP. 223 - 225

34. Ibid, Apendex, PP. 95,96

35. Epigraphica India, Vol. XII, P. 354

36. P.சடையப்பன் (மொடவாண்டிக் கவுண்டர்) நேர்காணல் நாள் 24.5.2000

37. க.சென்னியப்பன், நேர்காணல் நாள் 20.4.2000

38. சி.சுப்பிரமணியன், மு.கூ.நூ, ப.49

39. கொங்கு மண்டல சதகம், பக்.125, 126

40. வீயாரெம் (வி.இராமமூர்த்தி) கொங்கு நாட்டுக் கவுண்டர்கள், ப.332

41. எஸ்.ஏ.ஆர். சின்னச்சாமி கவுண்டர், மு.கூ.நூ, ப.302

42. மதுக்கரைப் பட்டயம், தொல்பொருள் ஆய்வுத்துறை, கோவை.

43. கொங்கு மண்டல சதகம், ப.123

44. ப.ச.பழனிச்சாமி, நேர்காணல் நாள் 10.3.2000

45. ஆய்வாளர் இல்லத்திலேயே இவ்வாறு நடந்து வருகின்றது.

46. அண்ணன்மார்சாமி கதை, பக்.205, 206

## கொங்கு வேளாளரிடத்துப் பிற இனத்தாரின் பண்பாட்டுத் தாக்கம்

பேச்சு வழக்கு

திருமண மண்டபம்

பிராமணரைக் கொண்டு திருமணம் நடத்துதல்

திருமணத்தில் மெல்லிசைக் கச்சேரி

உருமால்கட்டும் சீர்

குழந்தைகளுக்குப் பெயர் வைத்தல்

இறப்புச் சடங்குகள்

## பிற இனத்தாரிடத்துக் கொங்கு வேளாளக் கவுண்டர்களின் பண்பாட்டுத் தாக்கம்

வேட்டுவக் கவுண்டர்

செங்குந்த முதலியார்

செட்டியார்

பதினேழாம் செட்டியார்

ஒக்கலியர்

மறவர்

# இருவகைத் தாக்கங்கள்

திண்டுக்கல் மாவட்டத்தில் கொங்கு வேளாளக் கவுண்டர்கள் வாழ்ந்து வந்தாலும், பல காலகட்டங்களில் வந்த பல இனத்தாரும் வாழ்ந்து வருகின்றனர். பல ஆண்டுகள் இவர்கள் கலந்து வாழ்ந்து வருவதினால், ஒருவரின் தாக்கம் மற்றவருக்கு ஏற்படும் சூழல் உருவாயிற்று; தாக்கம் ஏற்படுவது இயல்பே.

சமுதாயம், மொழி, பண்பாடு, பழக்க வழக்கங்கள், சடங்கு, நடை, உடை, உணவு முதலியவற்றில் வேற்றினத்தாரோடு நெருங்கிப் பழகுவதால் பலவித மாற்றங்கள் ஏற்படுகின்றன. அவ்வகையில் திண்டுக்கல் மாவட்டக் கொங்கு வேளாளர் பிற இனத்தாரோடு பழகியதால் பிற இனத்தாரின் தாக்கம் கொங்கு வேளாளரிடத்தும், கொங்கு வேளாளரின் தாக்கம் பிற இனத்தாரிடத்தும் ஏற்படலாயின. அத்தகு மாற்றங்கள் குறித்து இவ்வியலில் தொகுத்துச் சுட்டப்படுகின்றன. [அடிக்குறிப்பு எண்கள் தகவல் வழங்கியவர்களைக் குறிப்பன]

## கொங்கு வேளாளரிடத்துப் பிற இனத்தாரின் பண்பாட்டுத் தாக்கம்

### பேச்சு வழக்கு

கொங்கு நாட்டில் நாயக்கராட்சி நடைபெற்றதாலும், நாயக்கர் இனத்தவர் கொங்கு வேளாளருடன் சேர்ந்து வாழ்ந்து வருவதினாலும், நாயக்கரிடத்து, கொங்கு வேளாளர் பேசும் பொழுது மட்டும், அவ்வினத்தாரின் மொழியாகிய தெலுங்கு மொழியில் பேசும் நிலை ஏற்பட்டுள்ளது. கொங்கு வேளாளர்கள் தெலுங்கு மொழி பேசும் திறன் பெற்றுள்ளனர்.

'நாயக்கர்களைப் போல அவர்களிடத்து மட்டுமே தெலுங்கு பேசுகின்றோம்'[1]

எ.டு. மீறு எட்ட உண்டேரு?

[நீங்க எப்படி இருக்கீங்க]

பிடலன்னி பாகுண்டேரா?

குழந்தைகளெல்லாம் நல்லாயிருக்காங்களா?

தொழில் காரணமாகத் தங்கள் இருப்பிடத்தை விட்டு வெளியூர்களில் வாழும் சூழல் ஏற்படும்பொழுது பல தலைமுறை வரை அங்கேயே நிலையாக இருக்க வேண்டிய கட்டாயம் ஏற்படுகின்றது. அதனால் அவ்விடத்து இனத்தாரின் பேச்சு வழக்குத் தாக்கம் இவர்களிடத்தும் ஏற்பட்டு விடுகிறது.

"தேவர்களுடன் பல காலம் வாழ்ந்து வருவதினால், தேவரினத்தாரின், பேச்சுவழக்கு எங்களுக்கும் ஏற்பட்டுவிட்டது"[2]

எ.டு. எல வால

ஏப்பே எப்படியிருக்க

கொங்கு வேளாளர்கள், 'ஆமாங் என்னங், சரிங், சொல்லுங் என்று பேச்சுக்குப் பேச்சு 'ங்' போட்டுப் பேசுவர். தமிழில் உள்ள 'ங்' என்ற எழுத்தை மரியாதை எழுத்தாகக் கருதுகின்றனர். மூச்சுவிடக்கூட மறக்கலாம். ஆனால் பேச்சில் 'ங்' சேர்க்க மறக்கமாட்டார்கள்.

இவ்வாறிருந்த கொங்கு வேளாளர்கள் தேவர்களோடு பழகியதன் தாக்கத்தினால் பேச்சு வழக்கையே மாற்றிவிட்டார்கள்.

## திருமண மண்டபம்

கொங்கு வேளாளர் திருமணங்கள் மணமகள் இல்லத்திலேயே நடந்து வந்தன. நாகரிகம் கருதி, பணம் படைத்தோர், தொழில் வளர்ச்சியில் முன்னேற்றம் கண்டோர், பழக்க வழக்கத்தினால் உறவினர்கள் மட்டுமல்லாது பல இனத்தவரையும் அழைத்தல், தனக்குள்ள செல்வாக்கை வெளிப்படுத்தல், அடுத்தவருக்குச் சமமாக இல்லாது தாம் மேலாக இருப்பதாகக் காட்டிக் கொள்ளுதல் முதலானவை காரணமாக இன்றைக்குத் திருமணங்களைத் திருமண மண்டபங்களிலேயே நடத்துகின்றனர். இதனால் வசதி வாய்ப்புக் குறைந்தவர்களும் சமுதாய மதிப்புக்கருதி திருமண மண்டபங்களில் திருமணத்தை நடத்த வேண்டிய கட்டாயம் ஏற்பட்டுள்ளது.

பெரும் வசதி படைத்தவர்கள் மிகப்பெரிய அளவில் திருமணங்களை நடத்துகின்றனர். அதற்கென வசதியான திருமண இடங்களைத் தேர்ந்தெடுத்து அலங்கரித்து நடத்துகின்றனர்.

நடுத்தர வகுப்பினர் திருமண மண்டபங்களில் திருமணத்தை வசதிக்கேற்ப நடத்துகின்றனர்.

கிராமப்புறங்களில் ஏழை மக்கள் தங்களது வீடுகளில் திருமணத்தை நடத்திக் கொள்கின்றனர்.

"திருமணங்களை மண்டபங்களில் நடத்தும் வழக்கம், செட்டியார்களின் தாக்கத்தினால் வந்தது".[3]

## பிராமணரைக் கொண்டு திருமணம் நடத்துதல்

சங்கம் தழுவிய காலத்தில் சிலப்பதிகாரத்தில் 'மாமுது பார்ப்பான் மறை வழி காட்டிட' என்பதினால் அன்றைக்கே ஆரியத்

தாக்கம் நுழைந்து விட்டதை அறிய முடிகிறது. இதுபற்றிப் பல இலக்கியங்களிலும் சொல்லப்பட்டுள்ளன. ஆனால், கொங்கு வேளாளரிடத்து ஆரியத்தாக்கம் ஏற்படாமல் இருந்தது. மற்றைய இனத்தாரிடத்து ஏற்பட்டிருந்தாலும் இவர்களிடத்து மட்டும் இத்தாக்கம் ஏற்படாமல் இருந்தது குறிப்பிடத்தக்கது.

"ஐயர் ஓமம் வளர்த்தி, மந்திரம் சொல்லி திருமணத்தை நடத்தி வைத்தால் மங்களகரமாகவும் ஆச்சாரமாகவும் இருக்கும் என்று நம்புவதால் வசதியானவர்கள் கௌரவத்திற்காகவும், அந்தஸ்து கருதியும் ஐயரை வைத்துத் திருமணம் நடத்துகின்றனர்".[4] இது ஆரியத்தினால் ஏற்பட்ட மாற்றமாகும்.

## திருமணத்தில் மெல்லிசைக்கச்சேரி

கொங்கு வேளாளர் திருமணங்களில் முன்பு நாட்டுப்புற இசைக் கருவிகளான கொம்பூதுதல், தாரை, தப்பட்டை, நாதஸ்வரம் முதலியன இசைக்கப்பட்டன. தற்போது இந்நிலை மாறிக் கொண்டு வருகின்றது.

பிறபகுதி மக்களின் திருமணங்களில் இசைக்கச்சேரிகள் நடத்தப்பட்டன. அப்பகுதி மக்கள் கொங்கு மக்களுடன் வாழ நேர்ந்தாலும், அவ்விடங்களிலும் இசைக்கச்சேரிகளை நடத்தலாயினர். இதைக் கண்ட கொங்கு வேளாளக் கவுண்டர்கள், தங்கள் இல்லத் திருமணங்களிலும் மெல்லிசைக்கச்சேரிகளை நடத்தலாயினர்.

"திருமணத்திற்கு முந்திய இரவு வாத்தியங்களைத்தான் முழக்குவர்–ஆனால் தற்போது மெல்லிசைக்கச்சேரியும் நடத்து கின்றனர்".[5]

தற்போது திரைப்படத் தாக்கத்தினால் மெல்லிசைக் கச்சேரிகளும், திரைப்படப் பாடல்களும் பெரும்பாலும் இடம் பெறுகின்றன.

### உருமால்கட்டும் சீர்

"உருமால்கட்டும் சீர் இன்றளவும் நடைபெறுகின்றது. ஆனால் உருமாலுக்கென்று தனியே துணி எடுக்காமல், 'டர்பன்' எனும் ஆயத்த உருமால் ஆடையை அணிவித்து விடுகின்றனர். இந்நிலை நாயக்கர்களினால் ஏற்பட்ட தாக்கம் ஆகும்"[6]

### குழந்தைகளுக்குப் பெயர் வைத்தல்

குழந்தைகளுக்குக் குலதெய்வப் பெயர்களையும், முன்னோர்களின் பெயர்களையும் இடுதலை மரபாகக் கொண்டிருந்தனர் கொங்கு வேளாளர். ஆனால் இதிலும் நாளடைவில் மாற்றம் ஏற்படலாயிற்று.

"பிராமணர்களின் தாக்கத்தினால் வடமொழிப் பெயர்களையும் நாயக்கர்களின் தாக்கத்தினால் அவர்கள் இடும் பெயர்களையும், [எ.டு. ரேணுகாதேவி, பாப்பு, பேபி], திரைப்படத் தாக்கத்தினால் நடிக, நடிகையர்களின் பெயர்களையும் வைக்கலாயினர்.[7]

### இறப்புச்சடங்குகள்

கொங்கு வேளாளர் இறந்தவரை பாடை அல்லது தேரில் வைத்து உறவினர்களே காடு வரை தோளில் சுமந்து செல்லும் நிலை அண்மைக்காலம் வரை இருந்தது. தற்சமயம் இந்நிலை மாறி சவ வண்டியில் எடுத்துச் செல்கின்றனர். இந்நிலை பிற இனத்தாரின் தாக்கத்தினால் ஏற்பட்டதாகும்.

‘பாடையானாலும், தேரானாலும் ஆட்களே தூக்கிச் செல்வார்கள். தற்போது நாடார்கள், செட்டியார்கள் முதலானோர் சவத்தைச் சவ வண்டியில் எடுத்துச் செல்வதைப் பார்த்துக் கொங்கினத்தவரும் அந்நிலைக்கு மாறிவிட்டனர்’.[8]

கொங்குக் கைம்பெண்கள் எவ்வயதினை உடையவராய் இருந்தாலும் வெள்ளைப் புடவையையே உடுத்துவர். தவிர வேறு புடவை உடுத்தமாட்டார்கள்.

‘அன்றுகட்டி அன்றுஅறுத்தாலும் வெள்ளச்சேலை’ என்பது கொங்குப் பழமொழி, அதாவது திருமணம் நிகழ்ந்த அன்றே கணவன் இறந்துவிடினும் வெள்ளைப் புடவையைத்தான் கணவனை இழந்த பெண் கட்டவேண்டும் என்பதையே இப்பழமொழி சுட்டுகிறது. இன்றைக்குப் பிறரின் தாக்கத்தினால் இந்நிலை மாறிவிட்டது.

‘கைம்பெண்களில் வயதானோர் காவிச் சேலை உடுத்துவதும், இளம் பெண்கள் வண்ணச்சேலை உடுத்துவதும், சில நகைகள் அணிந்து கொள்வதும் நாயக்கர், செட்டியார் முதலான பிற இனத்தாரின் தாக்கமே ஆகும்’[9]

‘கைம்பெண்கள் வெள்ளைப் புடவை உடுத்தாமல், வண்ணப்புடவை அணிவதற்குக் காரணம் பிற இனத்தாரின் தாக்கம் மட்டுமல்லாது கல்வி வளர்ச்சி, திரைப்படம், தொலைக்காட்சி போன்றவைகளின் தாக்கத்தினாலும் ஏற்பட்டது’.[10]

# பிற இனத்தாரிடத்துக் கொங்கு வேளாளர்களின் பண்பாட்டுத் தாக்கம்

பிற இனத்தாரிடத்துக் கொங்கு வேளாளக் கவுண்டர்களின் தாக்கங்கள் நிறைய ஏற்பட்டுள்ளன. பிற இனத்தாரும் கொங்கு வேளாளர்களும் ஒவ்வொரு பகுதியிலும் கலந்து வாழ்கின்றனர். இதனால் கொங்கு வேளாளர்களோடு நெருங்கிப் பழகும் வாய்ப்பு ஏற்படுகின்றது. ஆதலாலும் இவர்களின் அன்னியோன்யத்தினாலும் தாக்கங்கள் ஏற்படலாயின.

## வேட்டுவக்கவுண்டர்

"நாங்கள் கொங்கு வேளாளக் கவுண்டர்களைப் போன்றே அனைத்துச் சடங்குகளும் செய்தோம். தற்போது திருமணச் சடங்கில் புரோகிதரை வைத்துத் திருமணம் செய்கின்றோம். மங்கல வாழ்த்து என்பது இல்லை.

கணவனை இழந்த பெண்கள் வெள்ளைப் புடவையையே அணிந்தனர். தற்போது வண்ணப் புடவைக்கு மாறிக்கொண்டு வருகின்றனர். ஆனால், கொங்கு வேளாளரைப் போன்று எங்களிடத்தும் மறுமணம் என்பது கிடையாது."[11]

## செங்குந்த முதலியார்

### பேசும் மொழி

கொங்கு வேளாளக் கவுண்டர்களும், முதலியார் குடும்பங்களும் இணைந்து வாழ்வதினால் பேச்சு மொழியும் ஒரே மாதிரியாக இருப்பதால் தென் மாவட்டங்களில் உள்ளவர்கள் ஒரே சாதி என்று எண்ணுமளவிற்குக் கொங்கு வேளாளரின் பேச்சுமொழித் தாக்கம்

முதலியாருக்கும் ஏற்பட்டது. [எ.டு] வாங்க, உட்காருங்க என்று சொற்களின் பின் 'ங்க' என்று போட்டுப் பேசும் வழக்கமுண்டு.

உறவுமுறை

கொங்கு வேளாளர்களும், முதலியார்களும் அண்ணன், தம்பி, மாமன், மாப்பிள்ளை எனும் உறவுமுறை வைத்துப் பழகுகின்றனர். ஆனால் பெண் எடுப்பது, பெண் கொடுப்பது [கொள்வினை, கொடுப்பினை] இல்லை.

பிறப்பு முதல் இறப்பு வரை செய்யப்படும் சடங்குகள் அனைத்தும் கொங்கு வேளாளரின் தாக்கத்தினால் ஒரே மாதிரியாக உள்ளன. [குழந்தைக்கு முடி எடுத்தல், காதணி விழா, பூப்புனித நீராட்டு விழா, திருமணச் சடங்கு, இறப்புச் சடங்கு]

கைம்மை

கொங்கு வேளாளரின் தாக்கத்தினால் முதலியார்ப் பெண்களும், அப்பெண்களைப் போன்றே கைம்மை ஏற்று வாழ்க்கை நடத்துகின்றனர். மறுமணம் செய்து கொள்வதில்லை. வெள்ளைப் புடவையையே அணிகின்றனர். தற்போது இளம் கைம்பெண்கள் இருபத்தைந்து வயதிற்குட்பட்டவர்கள் மட்டும் வண்ணப் புடவையையும், சில நகைகளையும் அணிந்து கொள்கின்றனர்.

திண்டுக்கல் மாவட்டத்தில் கொங்கு வேளாளர்களும், முதலியார்களும் இணைந்து வாழ்வதினால், கொங்கு வேளாளர்களின் தாக்கத்தினால் முதலியார் குடும்பங்கள் அனைத்தும் ஒரே மாதிரியாகக் கொங்கு வேளாளர் குடும்பத்தாரைப் போன்றே வாழ்கின்றனர். ஆனால் சென்னை, ஈரோடு, காஞ்சிபுரம் போன்ற நகரங்களில் உள்ள முதலியார் குடும்பங்களில் இந்தத் தாக்கம் இல்லை.[12]

செட்டியார்

1. கொங்கு வேளாளரைப் போன்றே சடங்குகள் செய்யப்படுகின்றன. சடங்குகளில் மாமன் வீட்டுச் சீருக்கே முதல் மரியாதை தரப்படுகிறது.

பெரும்பாலும் திருமணங்கள் பழைய முறைப்படிதான் நடைபெறுகிறது. கோவிலில் திருமணத்தை வைத்து, மறுநாள் வரவேற்பு விழாவை வைத்துக் கொள்கின்றனர்.

உயர்ந்த அந்தஸ்தில் இருப்போர் பொருளாதார அடிப்படையில் திருமணங்களை நடத்துகின்றனர்.

நடுத்தர வர்க்கத்தினர் மட்டும் பழைய பஞ்சாங்கமாகவே சடங்குகளை விடவும் முடியாமல், செய்யவும் முடியாமல் தவிக்கின்றனர்.[13]

2. கொங்கு வேளாளரைப் போன்றே சடங்குகள் செய்யப் படுகின்றன. ஆனால் இன்றைக்குப் பொருளாதார அடிப்படையிலேயே அனைத்துச் சடங்குகளும் விமரிசையாகவோ அல்லது குறைந்தோ நடைபெறுகின்றன. தற்போது திருமணங்கள் பதினைந்து அல்லது இருபது பேர்களுடன் கோவிலில் நடக்கிறது.

இன்றைய நாளில் திருமணத்தில் புரோகிதர் மந்திரம் ஓதுவார். சீர்க்காரர் உதவி புரிவார். வயதில் பெரியவர்கள் நன்றாக வாழ்ந்தவர்கள், மங்கல நாண் கொடுத்து மணமகனை மணமகள் கழுத்தில் கட்டச் சொல்லுவர்.[14]

3. கொங்கு வேளாளரைப் போன்றே சடங்குகள் பின்பற்றப் பட்டாலும் தற்போது மாற்றம் பெற்று வருகின்றன.

அ. திருமணங்கள் வரவேற்பு நிகழ்ச்சிகளாக மாறிவிட்டன.

ஆ. வளைகாப்புச்சீர் திருமண மண்டபங்களில் திருமணங்களைப் போன்றே நடைபெறுகிறது.

இ. பெரும்பாலும் பூப்புச் சடங்கு, வீட்டாரோடு மட்டும் எளிமையாகச் செய்யப்படுகிறது.[15]

## பதினேழாம் செட்டியார்

"நாங்கள் கொங்கு வேளாளக் கவுண்டர்களின் பழக்க வழக்கங்களைப் பின் பற்றுகிறோம். இந்த ஊரில் இருப்பதால், அவர்களின் பழக்க வழக்கங்களைக் கடைப்பித்து வருகிறோம். அவர்களைப் போலவே சீர் வரிசைகளைச் செய்கிறோம்" என்று ரத்தினசாமி கூறுவர்.[16]

## ஒக்கலியர்

ஒக்கலியர்கள் கன்னடத்தைத் தாய் மொழியாகக் கொண்டவர்கள். இவர்கள் கொங்கு வேளாளக் கவுண்டர்களிடத்துள்ள சமூக மதிப்பு, புகழ், செல்வாக்கு, சிறப்பு ஆகியவைகளைக் கண்டு தங்களுக்கும் சமூக மதிப்பு கிடைக்க வேண்டும் என்பதற்காகத் தங்களின் இனப்பெயராகிய 'கவுடா' என்பதை மாற்றி, 'கவுண்டர்கள்' என்றே வழங்கி வருகின்றனர்.

எ.டு. நஞ்சே கவுடா என்பதை நஞ்சே கவுண்டர் எனச் சொல்லுகின்றனர். திண்டுக்கல் மாவட்டத்தில் சில இடங்களில் ஒக்கலியர்களும் வேளாளர்கள் என்ற அடிப்படையில் ஒக்கலியர்களும் கொங்கு வேளாளரும் இணைந்து 'கவுண்டர்கள் நலச் சங்கம்' என்ற அமைப்பினை ஏற்படுத்தி இரு சமுதாய முன்னேற்றத்திற்காகவும் பாடுபட்டு வருகின்றனர்.

சமீப காலங்களில் இரு இனத்தாரிடையே திருமணங்களும் நடைபெறுகின்றன.[17]

மறவர்

"கொங்கு வேளாளரைப் போன்றே சடங்குகள் செய்கின்றோம். ஆனால் திருமணச் சடங்கில் புரோகிதரை வைத்துச் செய்கின்றோம். முன்னர் எல்லாச் சடங்குகளும் வீட்டில் நடைபெற்றன. இன்றைக்குத் திருமண மண்டபங்களில் நடைபெறுகின்றன.

இறந்தவர்களுக்குத் 'தேர் வண்டி' வந்து விட்டதனால், தேர் கட்டுவது இல்லை."[18]

மொழி, திருமணம், சடங்குகள் முதலியவற்றில் ஒருவருக்கு மற்றவரிடத்தில் ஏற்பட்ட பழக்கத்தினால் என்னென்ன மாற்றங்கள் ஏற்பட்டன என்பன இங்கு சுட்டப்பெற்றன.

எவ்வகைச் சமூகமாயிருந்தாலும் காலப்போக்கில் சூழ்நிலை காரணமாக இருவகைத் தாக்கங்கள் ஏற்படுவது இயல்பே ஆகும். இதற்குப் பெங்களூரில் வாழுகின்ற கன்னடியர்கள், தமிழர்கள் இவர்களிடையேயுள்ள தொடர்பினைச் சுட்டலாம். நாஞ்சில் நாட்டில் வாழக்கூடிய தமிழர்களின் பழக்க வழக்கங்கள் மலையாளம் தழுவியும், நாஞ்சில் நாட்டை ஒட்டிக் கேரளாவில் வாழக் கூடிய மலையாளிகள் இடத்தில், தமிழரின் பழக்க வழக்கங்களும் கலந்து நிற்றலையும் சான்றாகக் காட்டலாம்.

# அடிக்குறிப்புகள்

## தகவலாளர்கள் அளித்த பேட்டி

| | பெயர் | வயது | பேட்டி கண்ட நாள் |
|---|---|---|---|
| 1. | தங்கம். ஆ | 35 | 4.12.1999 |
| 2. | வளர்மதி. ர | 36 | 2.2.2000 |
| 3. | கோதண்டராமன் | 52 | 10.9.1999 |
| 4. | மலர்க்கொடி | 45 | 6.2.2000 |
| 5. | செல்லப்பன் | 55 | 15.2.2000 |
| 6. | இராமலிங்கம் | 42 | 6.3.2000 |
| 7. | செல்வம். ஆ | 47 | 27.11.1999 |
| 8. | லிங்கசாமி | 50 | 7.1.2000 |
| 9. | மலர்க்கொடி | 45 | 6.4.2000 |
| 10. | லோகேஸ்வரி. கி | 42 | 4.12.1999 |
| 11. | முருகேசன் | 35 | 25.10.1999 |
| 12. | அப்பன்ராசு | 63 | 14.3.2000 |
| 13. | பிரேமா | 40 | 25.3.2000 |
| 14. | ரத்தினசாமி | 40 | 2.4.2000 |
| 15. | செல்வராசு கண்ணன் | 30 | 6.4.2000 |
| 16. | ரத்தினசாமி | 40 | 2.4.1999 |
| 17. | நடராசன் | 49 | 10.4.2000 |
| 18. | கார்த்திகேயன் | 35 | 12.4.2000 |

# முடிவுரை

ஒவ்வொரு இயலிலும் கண்டறியப்பட்ட செய்திகளின் அடிப்படையில் குறிப்பிடத்தக்க ஆய்வு முடிவுகள் மட்டும் இங்கு எடுத்துரைக்கப்படுகின்றன. தகவலாளிகள் சிலரின் முற்போக்கு சிந்தனைகளும், எதிர்கால ஆய்விற்கான சிந்தனைகளும் சுட்டிக் காட்டப்படுகின்றன.

சங்க காலந்தொட்டு கொங்கு நாடு இருந்துள்ளமை அறியலாகின்றது. கொங்கு நாட்டை இதுவரை ஆண்ட மன்னர்கள், இன்றைக்குள்ள கொங்கு நாட்டின் நிலை ஆகியன இடம்பெற்றுள்ளன.

பழக்கம், வழக்கம், பழக்கவழக்கம், மரபு, சடங்குகள் என்பன ஒன்றோடொன்று தொடர்புடையன. இப்பழக்க வழக்கங்கள் மாறாமல் இருப்பனவும், மாறக் கூடியனவும் உள்ளன. இவை சமுதாயத்தின் பண்பாட்டை வெளிப்படுத்தும் வாயில்களாக இருப்பது குறிப்பிடத்தக்கது.

கொங்கு வேளாளர்களிடத்து இருந்த உடன்கட்டை ஏறல், நரபலி, கொங்கு வேளாளர்கள் நியமித்த குலகுரு–புலவர்–மாணிக்கி, பெண்ணுக்கு நிலம் வழங்குதல், ஆநிரை கவர்தல் – மீட்டல் போன்ற அரிய பழக்க வழக்கங்கள் ஆவணங்கள் வழி கண்டறியப்பட்டுள்ளன.

கொங்கு வேளாளர் வாழ்வியல் (பிறப்பு, திருமணம், இறப்பு) பழக்க வழக்கங்கள் தனித்துவம் மிக்கவையாக விளங்குகின்றன. பிறபகுதி வேளாளரிடம் காணப்படாத தனித்தன்மை மிக்க பழக்க வழக்கங்களாக அருமைக்காரன், அருமைக்காரி, கைகோர்வை, மங்கல வாழ்த்துப்பாடல், நாட்டுக்கல் வழிபாடு, மாமன் பெண்ணெடுத்தல், இணைச்சீர், எழுதிங்கள் சீர், முழுக்காதுச்சீர் ஆகியன விளங்குகின்றன.

திருமணச்சடங்கில் காணப்படும் இணைச்சீர் என்னும் சடங்கு பெண்ணுக்கு உரிய உரிமையை நிலைநாட்டுவதாக உள்ளது.

பிறப்பு, பூப்பு, திருமணம் முதலான சடங்குகளில் தாய்மாமனுக்கு உரிய சிறப்பும், உரிமையும் இன்றும் போற்றப்படுவனவாக உள்ளன.

இறந்த குழந்தைக்குக் காதுக்குத்திப் புதைக்கும் வீரமரபு இன்றும் இம்மக்களிடம் காணப்படுகிறது.

கொங்கு வேளாளரின் முந்தைய பழக்க வழக்கங்களை, இன்றைக்குள்ள பழக்க வழக்கங்களோடு ஒப்புமைப்படுத்தியும் அவற்றிலுள்ள மாற்றங்கள் பற்றியும் கள ஆய்வில் கண்டறியப்பட்டுள்ளன.

கொங்கு வேளாளரின் சமூக அமைப்பில் 'கூட்டம்' [குலம்] என்ற அமைப்பு முக்கிய இடம் வகிக்கின்றது. ஒரே கூட்டத்தைச் சேர்ந்தவர்கள் [பங்காளிகள்] திருமண உறவு வைத்துக் கொள்வதில்லை. கொங்கு வேளாளரின் கூட்டங்கள் கூட்டச்சின்ன அமைப்புக் கொண்டு விளங்குகின்றன.

கொங்கு மக்களிடத்து, காணித்தெய்வம் என்ற சொல் குலதெய்வத்தைக் குறிக்கப் பயன்படுகிறது. காணி உரிமையுடன் தொடர்புடையதாகக் குல தெய்வ வழிபாடு அமைந்துள்ளது. குலமும், குலதெய்வமும் இல்லாத கொங்கு வேளாளரே இல்லை.

கொங்கு வேளாளரைச் சார்ந்து வாழும் சாதியினர் கொங்குக் குடிமகன்கள் எனவும், கொங்குப் பதினென் சாதியினர் எனவும், பஞ்ச சாதியினர் எனவும் அழைக்கப்படுகின்றனர். அவர்களின் வாழ்க்கைமுறை,

பழக்க வழக்கங்கள் முதலானவை கொங்கு வேளாளரைப் போலவே அமைந்துள்ளன. இம்மக்கள் சமுதாய ஏற்றத்தாழ்வு இல்லாமல் கொங்கு இனத்தாரிடத்துத் தங்களது தொழில் உரிமைகளை விட்டுக் கொடுக்காமல் உடனிருந்து பணியாற்றி வரும் நிலைமை குறிப்பிடத்தக்கது. இக்கொங்குக் குடிமகன்கள் கொங்கு வேளாளரிடத்து சமுதாய ஒற்றுமையுடன் இருந்து வருவதை அறியமுடிகின்றது. இதுவே கொங்கு நாட்டில் சாதிச் சண்டைகள் இன்றளவும் இல்லாமல் இருப்பதற்குச் சான்றாகும்.

கொங்கு வேளாளர்கள் முடமான குழந்தைகளைக் காப்பதற்கு 'மொடவாண்டிகள்' என்ற தனிப்பிரிவினரை உருவாக்கியுள்ளனர் என்பது தெரியவருகிறது.

இன்றைய நிலையில் கொங்கு வேளாளர்கள் பிற இனத்தாரோடு வாழும் சூழல், பிற இனத்தார் கொங்கு வேளாளர்களோடு வாழும் சூழல் ஆகியவற்றால் இவர்களிடத்து இருவகைத் தாக்கங்கள் நிகழ்ந்துள்ளன. பிராமணரைக்கொண்டு திருமணம் நடத்துதல், பெயர் வைத்தலில் மாற்றங்கள், பெரும்பாலான சீர்கள் மறைந்து போன நிலை, பெரும்பாலும் கைம்மைப் பெண்கள் வெள்ளாடை உடுத்துவதில் ஏற்பட்ட மாற்றம் முதலான குறிப்பிடத்தக்க தாக்கங்கள் கொங்கு வேளாளர்களிடையே நிகழ்ந்துள்ளன.

## தகவலாளர் சிலரின் முற்போக்குச் சிந்தனைகள்

தரவுகள் சேகரிக்க முற்பட்ட பொழுது தகவலாளர்கள் பலரும் தங்களது கருத்துக்களை முன் வைத்தனர். அவர்களின் கருத்துக்கள் ஏற்புடையனவாகவே உள்ளன.

“காலச் சூழ்நிலைக்கேற்ப, பிற சமுதாயங்களைப்போல் வழங்கங்களை மாற்றிக் கொள்வது நல்லது.”[1]

“தற்சமயம் இளைஞர்கள் பழங்கால வழக்கப்படி, சீர்செய்து திருமணம் செய்து கொள்வதை விரும்புகின்றனர். இப்படிச் செய்தால் கொங்கு இனத்தவரின் பண்பாடும் கலாச்சாரமும் அழியாமல் காக்கப்படும்.”[2]

“சடங்குகள் மறைந்துவிட்ட நிலையில் தற்போது மீண்டும் புத்துயிர் பெற்றுள்ளன.”[3]

“எதிலும் சிக்கனம், அவசரம் என்ற நிலையில் அனைத்துச் சடங்குகளும் குறைந்துவிட்டன. வசதியான குடும்பங்களில் எல்லாச் சீர்களும் செய்யப்படுகின்றன. பொருளாதார மேம்பாடு ஏற்பட்டால் ஒழிய இனம் மேம்பாடு அடைய முடியாது.”[4]

“மனிதநேயம் குறைந்து வருவதாலும் தெரிந்து செய்ய வேண்டிய ஆர்வமின்மையாலும் தற்காலத்தில் சடங்குகள் குறைந்துவிட்டன. தற்கால நாகரிகம் என்ற பெயரில் சடங்குகள் மறைக்கப்பட்டன என்றே சொல்லலாம்.”[5]

“நமது கொங்கு வேளாளக் கவுண்டர்கள் இனத்தில் சிறு வயதில் கணவன் இறந்துவிட்டால் அப்பெண் [இளம் விதவை] மறுமணம் செய்யக்கூடாது என்ற முறையை மாற்றுவதற்குக் கொங்கு இனப் பெரியவர்கள் ஏற்பாடு செய்ய வேண்டும். அப்பெண்களுக்குப் புதுவாழ்வு கொடுக்க வேண்டும்.”[6]

“கணவனை இழந்த பெண்கள் மறுமணம் செய்வதில்லை. இந்தக் கருத்திலிருந்து சற்று நான் மாறுபடுகிறேன். விருப்பம் உள்ளவர்கள் மறுமணம் செய்து கொண்டு கணவன், மனைவியாக வாழ்வதில் தவறேதும் இல்லை.”[7]

இன்றைக்குள்ள சமுதாயத்தில் மாற்றங்களைப் பலரும் விரும்புகின்றனர். பிற சமுதாயத்தில் இருக்கும் பழக்க வழக்கங்களைப் பார்த்து, அதுபோல் இச்சமுதாயத்திலும் இருக்க விரும்புகின்றனர். பிற இனத்தாரின் தாக்கம் ஏற்பட்டுவிடும் என அஞ்ச வேண்டியதில்லை. அவைகளைக் கடைப்பிடிப்பதனால் தவறேதும் இல்லை.

நடைமுறையில் கணவனை இழந்த பெண்கள் மறுமணம் செய்து கொள்வதில்லை. ஆதலால் பலரும் மறுமணம் செய்வதற்குத் தங்களது கருத்துக்களைத் தெரிவித்துள்ளனர். இத்தகைய முற்போக்குச் சிந்தனைகள் வரவேற்கத்தக்கனவாகும்.

## எதிர்கால ஆய்வு

எதிர்கால ஆய்விற்குரியனவாகச் சில ஆய்வுக்களங்கள் முன்வைக்கபடுகின்றன.

1. திண்டுக்கல் மாவட்டத்தில் வாழும் கொங்கு வேளாளக் கவுண்டர்களின் கூட்ட (குல) அமைப்புக்களை மட்டும் ஆய்வுக்களமாகக் கொண்டு ஆராயலாம்.

2. கொங்கு வேளாளர்கள் வழிபடும் குலதெய்வங்களின் தோற்றம், வளர்ச்சி, வரலாறு குறித்து விரிவாக ஆய்வு மேற்கொள்வது பயனளிக்கும்.

3. கொங்கு வேளாளரிடத்து, காணி வழிபாடு மேலோங்கிக் காணப்படுவதனால் காணித்தெய்வங்கள் பற்றி ஆய்வு மேற்கொள்ளலாம்.

கொங்கு வேளாளக் கவுண்டர்களுடைய பழக்க வழக்கங்கள் திண்டுக்கல் மாவட்டத்தை அடிப்படையாகக் கொண்டு ஆராயப் பெற்றாலும், பிற பகுதிகளில் வாழக்கூடிய கொங்கு வேளாளக் கவுண்டர்களின் பழக்க வழக்கங்களில் நிறைய மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன. இத்தகைய மாற்றங்களை விரிவாக ஆராய்ந்தால் இவை மேலும் மாற்றமடையாமல் இருப்பதற்குரிய வழிமுறைகளை எண்ணிப்பார்த்துப் பழைய பண்பாட்டு மரபுகள், பழக்க வழக்கங்கள் காக்கப்படுவதற்கு வழி வகுக்கும்.

# துணை நூற்பட்டியல்


அரங்கசாமி. க., 1990 **பூந்துறை நாட்டுக் காட கூட்டக் கொங்கு வேளாளர் வரலாறு,** அறிவரசு பதிப்பகம், கோபி.

அரசஞ்சண்முகனார்., 1905 **தொல்காப்பியப்பாயிரவிருத்தி,** ஸ்ரீ வித்தியா விநோதினி அச்சுக்கூடம், தஞ்சை.

அருணாச்சலக்கவுண்டர். கு., 1982 **கம்பர் இயற்றிய மங்கல வாழ்த்தும் இதை அவர் பாடிய சரித சமுதாயப் பின்னணியும்,** கொங்கு வேளாளக் கவுண்டர் சமூக நலமன்றம், ஈரோடு.

ஆதி நாராயண், 1973 **மனித உள்ளம்,** பழனியப்பா பிரதர்ஸ், சென்னை.

இராசமாணிக்கனார். மா., 1959 **தமிழர் நாகரிகமும் பண்பாடும்,** பாரி நிலையம், சென்னை.

இராசு. செ. 1991 **கொங்கு நாட்டுச் சமுதாய ஆவணங்கள்,** தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்.

. . . . . 1995 **கம்பர் தமிழ்,** சக்தி டிரேடிங் கம்பெனி, ஈரோடு.

இராமசந்திரன் செட்டியார். கோ. ம., 1972 **கொங்கு நாட்டு வரலாறு,** தவத்திரு சாந்தலிங்க அடிகளார் தமிழ்க் கல்லூரி, பேரூர்.

இராமநாத பிள்ளை. ப., 1969 **திருமந்திரம்,** திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை.

இராமநாதன். ஆறு., 1982 **நாட்டுப்புறப்பாடல்கள் காட்டும் தமிழர் வாழ்வியல்,** மணிவாசகர் நூலகம், சிதம்பரம்.

இராமநாதன் செட்டியார். லெ.ப.கரு., 1965 **தொல்காப்பியச் செல்வம்,** நோபிள் பிரஸ், திருச்சி.

கச்சியப்ப முனிவர் 1953 **கந்த புராணம்,** ஸ்ரீ காசிமடம் வெளியீடு, திருப்பனந்தாள்.

காந்தி. க., 1980 **தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும்,** உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.

கார்மேகக்கவிஞர் 1986 **கொங்கு மண்டல சதகம்,** தவத்திரு சாந்தலிங்க அடிகளார் தமிழ்க் கல்லூரி, பேரூர்.

கிருட்டிணசாமி. க., 1980 **கொங்கு நாட்டுப்புறப்பாடல்கள்,** மக்கள் வெளியீடு, சென்னை.

மேலது, 1983 **கூட்டமும் திருமணமும்,** மக்கள் வெளியீடு, சென்னை.

குழந்தை புலவர் 1968 **கொங்கு நாடு,** வேலா பதிப்பகம், ஈரோடு.

கோவைகிழார் 1990 **எங்கள் நாட்டுப்புறம்,** கதிரவன் அச்சகம், சென்னை.

சக்திக்கனல் [ப.ஆ.] 1977 **அண்ணன்மார் சுவாமி கதை,** வெற்றிவேல் பதிப்பகம், கோவை.

சக்திதேவி. டி. கே., 1974 **கொங்கு வேளாளர் வரலாறு,** ஜீவன் அச்சகம், சென்னை.

சரசுவதி வேணுகோபால் 1981 **தமிழக நாட்டுப்புறவியல்,** தாமரை வெளியீடு, மதுரை.

சாமிநாதையர். உ.வே., [ப.ஆ] 1956 **புறநானூறு மூலமும் உரையும்,** கபீர் அச்சுக் கூடம், சென்னை.

மேலது, [உ.ஆ] 1955 **குறுந்தொகை,** கபீர் அச்சுக்கூடம், சென்னை.

| | | |
|---|---|---|
| சின்னச்சாமி. தே.ப., | 1994 | **கொங்கு வேளாளர் சடங்குகளில் பண்பாடு,** ருக்மணி ஆப்செட் பிரஸ், கோவை. |
| சின்னச்சாமிக்கவுண்டர். எசு.ஏ.ஆர்., | 1963 | **கொங்கு வேளாளர் புராண வரலாறு,** தமிழன் அச்சகம், ஈரோடு. |
| சுப்பிரமணிய முதலியார். சி.கே., | 1965 | **திருத்தொண்டர் புராணம்,** கோவை தமிழ்ச்சங்கம், கோயம்புத்தூர். |
| சுப்பிரமணியன்.சி., | 1997 | **கொங்கு நாட்டு மங்கல வாழ்த்துப்பாடல்,** தன்னானே பதிப்பகம், பெங்களூர். |
| சுப்பிரமணியன்.ச.வே., | 1978 | **இலக்கணத்தொகை யாப்புப் பாட்டியல்,** தமிழ்ப் பதிப்பகம், சென்னை. |
| . . . . . | 1968 | **பெருங்கதை இலாவண காண்டம்,** ஸ்ரீகாம் அச்சகம், சென்னை. |
| . . . . . | 1961 | **பத்துப்பாட்டு** கபீர் அச்சுக் கூடம், சென்னை. |

| | | |
|---|---|---|
| சோமசுந்தரனார். பொ.வே., | 1967 | **பட்டினத்துப் பிள்ளையார் திருப்பாடல்கள்,** திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சிந்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை. |
| . . . . . | 1966 | **ஐங்குறுநூறு,** அப்பர் அச்சகம், சென்னை. |
| சோமலெ | 1974 | **தமிழ்நாட்டு மக்களின் மரபும் பண்பாடும்,** நேசனல் புக் டிரஸ்ட், இந்தியா. |
| ஞானசேகரன். தே., | 1992 | **நாட்டார் சமயத் தோற்றமும் வளர்ச்சியும்,** கியூரி பப்ளிகேசன்ஸ், மதுரை. |
| தீனதயாளு நாயுடு. டி., | 1943 | **நாலடியார்,** வித்யா ரத்நாகரம் அச்சுக்கூடம், சென்னை. |
| துரைசாமிப்பிள்ளை. சு., ஔவை [உ.ஆ] | 1958 | **பதிற்றுப்பத்து,** திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சிந்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை. |
| . . . . . | 1964 | **இறையனார் அகப்பொருள், நக்கீரர் உரை,** திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சிந்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை. |

| | | |
|---|---|---|
| நச்சினார்க்கினியர், [உ.ஆ] | 1967 | **கலித்தொகை,**<br>திருநெல்வேலித் தென்னிந்திய<br>சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,<br>சென்னை. |
| பக்தவச்சல பாரதி. சீ., | 1990 | **பண்பாட்டு மானிடவியல்,**<br>மணிவாசகர் பதிப்பகம்,<br>சிதம்பரம். |
| பரிமேலழகர், [உ.ஆ] | 1956 | **திருக்குறள்,**<br>திருநெல்வேலித் தென்னிந்திய<br>சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,<br>சென்னை. |
| பழனிச்சாமிப்புலவர். க., | 1969 | **ஓதாளர் குறவஞ்சி எனும்<br>அழகு மலைக் குறவஞ்சி,**<br>காந்திதாசன் அச்சகம்,<br>கோவை. |
| பாஸ்கல் கில்பர்ட்<br>[நாராயணன். ஜெ.,]<br>தமிழாக்கம் | 1964 | **சமூகவியல் அடிப்படைக்<br>கோட்பாடுகள்,**<br>தமிழ் வெளியீட்டுக் கழகம்,<br>சென்னை. |
| பாரதிதாசன் | 1966 | **குடும்ப விளக்கு,**<br>பாரி நிலையம்,<br>59, பிராட்வே,<br>சென்னை. |
| பாலசுந்தரம் பிள்ளை. தி.சு.,<br>[ப.ஆ] | 1954 | **தொல்காப்பியம் மூலம்,**<br>திருநெல்வேலித் தென்னிந்திய<br>சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,<br>சென்னை. |

| | | |
|---|---|---|
| பின்னத்தூர் நாராயணசாமி அய்யர் .அ., [உ.ஆ] | 1967 | **நற்றிணை,** திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சிந்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை. |
| மாணிக்கம். வ.சுப., | 1958 | **இரட்டைக்காப்பியங்கள்,** செல்வி பதிப்பகம், காரைக்குடி. |
| ராமமூர்த்தி. வீ., [வீயாரெம்] | 1977 | **கொங்கு நாட்டுக் கவுண்டர்கள்,** லோட்டஸ் பப்ளிசிங் கம்பெனி [பி] லிமிடெட், திருச்சிராப்பள்ளி. |
| லூர்து. தே., | 1981 | **நாட்டார் வழக்காற்றியல் ஆய்வுகள்,** பாரிவேள் பதிப்பகம், திருநெல்வேலி. |
| வானமாமலை. நா., | 1973 | **தமிழர் பண்பாடும் தத்துவமும்,** நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை. |
| விசுவநாதன். அ., | 1996 | **சமுதாயச் சிந்தனைகள்,** மங்கை பதிப்பகம், காரைக்குடி. |
| வேங்கடசாமி நாட்டார். ந.மு., [உ.ஆ] | 1968 | **சிலப்பதிகாரம்,** திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை. |
| மேலது, | 1968 | **அகநானூறு,** திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி. |

வையாபுரிப் பிள்ளை. எஸ்., 1993 **தமிழர் பண்பாடு, கம்பன் காவியம்,** ஐந்தாம் தொகுதி, இராஜா அண்ணாமலை புரம், சென்னை.

மேலது, [ப.ஆ] 1967 **சங்க இலக்கியம்,** [பாட்டும், தொகையும்] பகுதி–1, பாரி நிலையம், சென்னை.

1968 **நாலாயிரத் திவ்யப் பிரபந்தம்,** இரத்தின நாயகன் சன்ஸ் பதிப்பு, சென்னை.


## இதழ்கள்


கொங்கு, திங்களிதழ், மார்ச் 1973

தினமணி, 26.9.2001


## மலர்


1982 **கொங்கு வேளாளக் கவுண்டர்கள் மாநில மாநாட்டுச் சிறப்பு மலர்,** கோவை.


## கட்டுரை


திருநாவுக்கரசு. க.த., 1973 Journal of Tamil Studies, 'வள்ளுவர் கண்ட மனிதன்' International Institute of Tamil Studies, Madras.

மணவாளன். அ.அ., **தமிழாய்வு II,** சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை.

## அகராதி

| | | |
|---|---|---|
| அனவரத விநாயகம் பிள்ளை. எஸ்.,(ப.ஆ) | 1962 | **கழகத்தமிழ்க் கையகராதி,** திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சிந்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி. |

## கலைக்களஞ்சியம்

| | | |
|---|---|---|
| | 1956 | **கலைக்களஞ்சியம்,** தொகுதி -IV, தமிழ் வளர்ச்சிக்கழகம், சென்னை. |

## ஆய்வேடுகள்

| | | |
|---|---|---|
| சரஸ்வதி. வி., | 1977 | **சாதி அடிப்படைத் தாலாட்டு ஒப்பாரிப் பாடல்களில் ஒற்றுமை வேற்றுமைகள்,** பிஎச்.டி.ஆய்வேடு, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை. |
| சாந்தகுமார். பெ.கு., | 1995 | **கொங்கு வரலாற்று ஆவணங்களில் சமுதாய வாழ்க்கை,** பிஎச்.டி.ஆய்வேடு, பாரதியார் பல்கலைக்கழகம், கோவை. |
| நாகரத்தினம். வெ.அ., | 1994 | **கோவை மாவட்ட அகமுடையர் (தேவர்) குலமரபும் பண்பாடும்,** பிஎச்.டி.ஆய்வேடு, பாரதியார் பல்கலைக்கழகம், கோவை. |

# ஆங்கில நூல்கள்


| | | |
|---|---|---|
| Appadurai. A., | 1936 | **Economic Conditions in South India** Vol. I, University of Madras, Madras. |
| Arokiasamy. M., | 1956 | **The Kongu Country,** University of Madras, Madras. |
| Beck E.F. Brenda | 1972 | **Peasant Society in Kongu,** University of British, Columbia, Vancouver. |
| Debiprasad Chattopadhyaya | 1981 | **Lokayata A Study in Indian Materialism,** People's Publishing house, New Delhi. |
| Edgar Thurston (Ed.,) | 1975 | **Castes and Tribes of Southern India,** Cosmo Publications, New Delhi. |
| Frazer. J.G., | 1910 | **Totomism and Exogamy Vol. IV,** Macmillan & Co., London. |
| Ferreira John. V., | 1965 | **Totomism in India,** Oxford University Press, London. |
| Jagadish Ayyar. P.V., | 1982 | **South Indian Customs,** Asian Educational Services, New Delhi. |

John Marshall 1931 **Mohenjodara and the Indus civilization Vol. I,**
London.

Kosambi. D.D., 1962 **Myth and Reality,**
Popular Prakasam,
Bombay.

Mahalingam. T.V., 1972 **Mackenzie Manuscripts,**
Historical Manuscripts in the
Mackenzie Collection,
Manorama Press,
Madras.

Ramamurthy. V., 1986 **History of Kongu,**
International Society for the
Investigation of Ancient civilization,
Madras.

## Thesis

Kandasamy. S.P., 1985 **The History of the Kongu Vellalas,**
Ph.D., Thesis,
University of Madras,
Madras.

## Inscriptions

Epigraphia India, Vol. XII
Madras Epigraphical Report, 1560 & 1906
South Indian Inscriptions, Vol. VII, No. 863

# பின்னிணைப்புகள்

1. திண்டுக்கல் மாவட்ட வரைபடம்
2. திருமண அழைப்பிதழ் நகல்கள்
3. மங்கலவாழ்த்துப்பாடல்கள்
4. ஆரத்திப்பாடல்கள்
5. தாலாட்டுப்பாடல்கள்
6. ஒப்பாரிப்பாடல்கள்
7. வினாநிரல்
8. தகவலாளர் பட்டியல்

நிழற்படங்கள்

வாழ்க வள்ளுவம்



# திருமண அழைப்பிதழ்

அன்புடையீர்,

திருவள்ளுவராண்டு 2030, கார்த்திகை திங்கள் 26ந்தேதி (12.12.99) ஞாயிற்றுக்கிழமை
காலை 6.30 மணிக்குமேல் 7.15 மணிக்குள்

---

மஞ்சை
*அமரர் கா.கந்தசாமிக்கவுண்டர் - கருப்பாயம்மாள்*
பேத்தியும் Dr.M.K.இராமசாமி MBBS., M.S.,
திருமதி. இந்திராணி தம்பதிகளின் மகளுமான
செல்வி Dr.R.**ஸ்ரீவித்யா**



தாராபுரம் வட்டம் குளத்துப்பாளையம்.
*அமரர் திரு.மு.கிருஷ்ணசாமிக் கவுண்டர் கிருஷ்ணம்மாள்*
பேரனும் திரு.K.K.விஸ்வநாதன் M.A.,M.Ed.,
கமலாதேவி B.A., தம்பதிகளின் தனயனுமான
செல்வன் Dr.V.**கந்தவேள்**
இராமகிருஷ்ணா பல் மருத்துவமனை, தாராபுரம்.

---

ஆகியோர் திருமணம், பழனி - திண்டுக்கல் பெருவழியில் உள்ள **V.V.R. திருமணமண்டபத்தில்** நடைபெறஉள்ளது. மண அணிக்கு தாங்கள் வந்து அனைத்து நிகழ்ச்சிகளிலும் கலந்துகொண்டு மங்கள வாழ்த்து நிறைவுறும் வரையில் இருந்து மணமக்களை வாழ்த்துமாறு மிகவிரும்பி கேட்டுக்கொள்கிறோம்.

வணக்கம்.

தங்கள் அன்புள்ள

**Dr.M.K.இராமசாமி** MBBS., M.S.,
**திருமதி. இந்திராணி இராமசாமி**
K.G.மருத்துவமனை
அண்ணாநகர், பழனி - 624 602

**திரு. K.K.விஸ்வநாதன்** M.A. M.Ed.,
தலைமை ஆசிரியர்,
அரசு மேல்நிலைப்பள்ளி, மூலனூர்
திருமதி.**கமலாதேவி** B.A.,
குளத்துப்பாளையம்.

இருமனை அழைப்பு

## நிகழ்ச்சி நிரல்

11.12.99 சனிக்கிழமை இரவு 8.30 மணிக்கு

### நாதஸ்வர இன்னிசை

இந்திய குடியரசு தலைவர்

விருது பெற்ற இசை பேரறிஞர்

திருவிழா R.**ஜெயசங்கர்** B.A.,

குழுவினர்

### தவிலிசை

இந்திய குடியரசு தலைவர்

விருது பெற்ற இசை பேரறிஞர்

வலையபட்டி A.R.**சுப்ரமண்யம்**

குழுவினர்



மாருதி கம்ப்யூட்டர் பிரிண்டர்ஸ், பழனி. போன்:45484.

# திருமண அழைப்பிதழ்

12.12.99 ஞாயிற்றுக்கிழமை




**மணமக்கள்**

செல்வி Dr.R.**ஸ்ரீவித்யா**

செல்வன் Dr.V.**கந்தவேள்**

உ
ஓம் முருகன் துணை

# திருமண அழைப்பிதழ்

அன்புடையீர்,

நிகழும் மங்களகரமான யுவ ஆண்டு வைகாசி மீ 21 வ (4-6-95) ஞாயிற்றுக்கிழமை சஷ்டி திதியும், ஆயில்ய நட்சத்திரமும் சித்தயோகமும் கூடிய சுபயோக சுபதினத்தில் காலை 7-00 மணிக்குமேல் 8-00 மணிக்குள்

| | |
|---|---|
| ஐ. வாடிப்பட்டி<br>திரு K. பழனிச்சாமி கவுண்டர் குமாரன்<br>திருவளர் செல்வன் :<br>**P. சண்முகம்** | ஒடைப்பட்டி மணியம் திரு குப்புச்சாமி கவுண்டர் பேத்தியும்<br>K. ராமசாமிக் கவுண்டர் குமாரத்தி<br>திருவளர் செல்வி<br>**R. ஜெயந்தி** |

ஆகியோர் திருமணம் பெரியோர்களால் நிச்சயிக்கப்பட்டு ஷை திருமணம் ஒட்டன்சத்திரம்-தாராபுரம் ரோட்டிலுள்ள ஸ்ரீ காமாட்சி கல்யாண மண்டபத்தில் வள்ளியரசன் ஆதீனம் குருமகாசந்நிதானம் ஸ்ரீல ஸ்ரீ கனக சபாபதி பண்டித குரு சுவாமிகள் முன்னிலையில் நடைபெறுவதால் தாங்கள் தங்கள் சுற்றம் சூழ வருகைதந்து மணமக்களை வாழ்த்தியருள வேண்டுகிறோம்

தங்களன்புள்ள,

**K. ராமசாமிக் கவுண்டர்**
**R. பழனியம்மாள்**
மணியம் கிழக்குத் தோட்டம்
**ஒடைப்பட்டி.**

**K. பழனிச்சாமி கவுண்டர்**
**P. ராசாத்தாள்**
குஞ்சாந் தோட்டம்
**ஐ. வாடிப்பட்டி.**

[இரு வீட்டார் அழைப்பு]

★ தங்கள் நல்வரவை விரும்பும் : ★

மணமகன் தாய்மாமன் :

N. வேலுச்சாமி நீலாங்காளிவ

அப்பச்சி : நாச்சிமுத்துக் கவுண்டர் நீலாங்காளிவலசு

மணமகள் தாய்மாமன் ;

S. செல்வராஜ் தாளாளர் விவேகாநந்தா வித்யாலயா
மெட்ரிகுலேசன் மேல்நிலைப்பள்ளி பழனி.

அப்பச்சி ;

நடுப்பண்ணாடி P. செல்லக்குமார் கவுண்டர் ஒடைப்பட்டி

மணமகள் சகோதரன் ;

R செந்தில்குமரன் (பைனான்ஸ், பம்பாய்)

---

வாழ்த்துரை வழங்குபவர்கள் : திருவாளர்கள் :

K. செல்லமுத்து தலைவர் உழவர் உழைப்பாளர் கட்சி தமிழ்நாடு

K. கருப்பண கவுண்டர் ஊராட்சி ஒன்றிய தலைவர் வாடிப்பட்டி

M. நாட்டுத்துரை பெரியகவுண்டர் I. அத்தப்பன்பட்டி

R. ஜோதீஸ்வரன் B. A., ஒன்றிய செயலாளர்

K. துரைராஜ் சூரியா பைனான்ஸ் மங்களூர் I. அத்தப்பன்பட்டி

K. தங்கவேல் ஆசிரியர் ஒடைப்பட்டி

N. குமரகுருபரன் M. A , M. Phil., அ ப. ஆ. கலைக் கல்லூரி, பழனி.

**3 - 6 - 95 இரவு 8-00 மணியளவில் மதுரை இன்னிசைக் குழுவின் இன்னிசை விருந்து நடைபெறும்**

---

ஸ்ரீ சரவணா பிரிண்டர்ஸ் பழனி.

# திருமண அழைப்பிதழ்

**மணநாள் : 04-06-95 ஞாயிற்றுக்கிழமை**

மத்தளங் கொட்ட வரிசங்கம் நின்றூத
முத்துடைத் தாமம் நிரை தாழ்ந்த பந்தர்க்கீழ்
மைத்துனன் நம்பி மதி சூதனன்
வந்தென்னை கைத்தலம் பற்ற
கனாக் கண்டேன் தோழீ நான்!



---

மணமக்கள் :

P. சண்முகம் ★ R. ஜெயந்தி

பின்னிணைப்பு – 3

# மங்கல வாழ்த்து

பெயர் : கருணாகரன்

வயது : 60

ஊர் : கொசவபட்டி

பாடல்.1

நல்ல கணபதியை நாம்கால மேதொழுதால்
அல்லல் வினைகள் அகலுமே – சொல்லரிய
தும்பிக்கை யானைத் தொழுதால் வினைதீரும்
நம்பிக்கை யுண்டு நமக்கு

மாதம் மும்மாரி வளமிகப் பெருகிடத்
தேசமும் நாடும் செழித்துவாழ்ந் திருக்க
கங்கை பாலகர் காராளர் தங்கள்
மங்கல மான மணமது முடிக்க
இந்தமாப் பிள்ளைக்கும் ஏந்திழை யாட்கும்
பொந்தமாம் முகூர்த்தம் பொருந்தி இருத்தலால்
நலமிகு பெரியோர் நால்வரும் கூடி
சிலபே ருடனே தெரிவை ஊர்போக

வாசல் பல்லி வகையுடன் நிமித்தமும்
பொருந்தி யிருக்கப் பூரித்து மகிழ்ந்து
வந்த பெரியோர் வளமனை இருந்து
பெண்ணைக் குறித்துப் பிதாவினைக் கேட்ப
குணமுடன் அவர்களும் கொடுக்கிறோம் என்றார்.

சம்மதம் ஆகித் தம்நகர் புகுந்து
மணம்பெறு வாசல் வளமுறச் செய்து
பூட்டு தாலிக்குப் பொன்னது கொடுத்து

நாட்டார் அனைவர்க்கும் நலம்பெற எழுதி
கலியாண நாளைக் கணித்து அறிவித்தார்

கனமிகு முகூர்த்தக் காலது நாட்டி
பந்தல் மேற்கட்டும் பட்டுடன் துகிலும்
தென்னங் குலையும் தேமாங் கொத்தும்
பந்தல்கள் எங்கும் பாங்குடன் தூக்கி
வாழை கமுகு வளர்கூந்தற் பனை
மாவிலை தோரணம் மகர தோரணம்
முற்றமும் மனையும் முத்துக்கள் பரப்பி
சித்திர கூடம் சிறப்பாய் விளங்க
அலங்காரம் செய்தபின், அனைவரும் வந்து

சாத்திரப் படியே தாம்பூலம் வழங்கி
பெண்ணின் மடியில் பிரியமாய்க் கட்ட
வெற்றிலை பாக்கு வெல்லம் தேங்காய்
ஒற்றைப் படவே ஒருகுலைப் பழமும்
நற்கையில் எடுத்து நடந்தார் பெரியோர்.

பெண்ணின் வீட்டார் பிரியமாய் அனைவரும்
எதிர் வாத்தியத்துடன் இன்பமாய் அழைக்க
அருமைப் பெரியோர் அவருடன் அனைவரும்
விரிந்த ஆசனம் மீதில் அமர்ந்தார்.

பாரிய தட்டில் பாக்கிலை வெல்லம்
தேங்காய்ப் பழமும் சிறப்புடன் நிறைத்து
மங்கையின் மடியில் மகிழ்ச்சியாய்க் கட்டி
பாக்கு வெற்றிலை பல பேர்க்குக் கொடுத்து
வந்த பேர்க்கெல்லாம் வகை விருந் திட்டார்.

வாத்தியம் முன்நடக்க வந்தார்கள் பின்நடந்து
மணவாளன் ஊர்க்கு வந்துசேர்ந் தார்கள்.

பார விருந்து பாங்குடன் செய்து
மங்கலன் தன்னை வருகஎன் றழைத்து
மிக்க மாப் பிள்ளையை விரிமேல் இருத்தி
பழங்கலம் விளக்கு பாங்குடன் அதனில்
உரிய அரிசி ஒரு மூன்று வள்ளம்
சீரிய நெய்யும் தேங்காய் பழமும்
வாரியே வைத்து வரிசை கோணாமல்
தெள்ளிய பாலால் திருமுகம் துடைத்து
அரும்பிய மீசையை அழகுற ஒதுக்கி,
இதமுறக் கூந்தலில் எண்ணையை விட்டு
ஏழு தீர்த்தமும் இனிமையாய் வார்த்து
செந்நெல் சோற்றால் சீக்கடை கழித்து
வண்ணப் பட்டால் மயிர்தனைத் துவட்டி
ஆவின் பாலும் அன்னமும் பழமும்
நீர்மை பொருந்த நிறைநாழி வைத்து
சர்க்கரை வெல்லம் சம்பா அரிசியும்

பொற்கலத்து அமைத்துப் புனிதமாய் வைத்து
சாணங் கொண்டு தரைதனை மெழுகி
கணபதி தன்னைக் கருத்துடன் நாட்டி.
அறுகது சூடி அருள் பொருந்திடவே
குழவிக்கும் கங்கணம் குணமுடன் தரித்து
காப்புடன் கங்கணம் கனமுடன் கட்டி
செப்புமாப் பிள்ளைக்குத் திருநீறு அணிந்து
குப்பாரி கொட்டிக் குலதேவதை அழைத்து
மணக் கோல மாக மணப்பந்தல் தன்னில்
வலமதாய் வந்து மணமுடன் நின்று
செஞ்சாதம் அஞ்சடை சிரமதைச் சுற்றி
திட்டி கழித்து சிவசூரியனைத் தொழுது
அலங்காரஞ் செய்து அழகு மண அறையில்
மகிழ்ச்சியுடன் வந்திருந்து மாப்பிள்ளையைத் தான் இருத்தி
இணையான தங்கையராம் ஏந்திழையைத் தான் அழைத்து
சந்தனம் புனுகு சவ்வாது பூசி
மந்தரை மல்லிகை மருக்கொழுந்து மாலையிட்டு
கூறை மடித்தார் குணமுள்ள மங்கையரும்
பிறந்தவரைச் சுற்றி பேழை முடி சுமந்து
வேழ முகத்து விநாயகரைப் பணிந்து
சந்திரரும் சூரியரும் சபையோர்கள் தான் அறிய
இந்திரனார் தங்கை இணைஓங்க வந்த பின்பு
தேங்காய் முகூர்த்தமிட்டு, செல்வ விநாயகனை
பாங்காகக் கைதொழுது பாரிகொள்ளப் போரமென்று

மாதாவுடனே மகனாரும் வந்திருந்து
போதவே பால் வார்த்துப் போசனமும் தான் அருந்தி
தாயாரின் பாதம் தலைகுனிந்து தண்டனிடப்
போய்வா மகனே என்றாள் பூங்கொடிக்கு மாலையிட

கைத்தாளம் பம்பை கனகதப்புத் தான் முழங்க
துத்தாரி நாகசுரம் சோடிகொம்பு தானூத
எக்காளம் சின்னம் இடிமுரசம் ஆர்ப்பரிக்க
சேகண்டி சங்கு சிறுதவண்டை ஓசைபெறக்
கட்டியங்கள் கூறிக் கவிவாணர் முன்நடக்க
நாட்டியங்கள் ஆடிவர நல்ல குஞ்சம் வீசிவர
நடந்து சம்பந்தி நகர்தனிலே புகுத
சம்பந்தியர் சகல வைபவத் துடனே
வந்தெதிர் தொழுது வாருங்கள் என்றுரைத்தார்.

பந்து சனங்கள் பண்புமித் திரர்வர
வந்தனை யான வாத்தியம் முழங்கிட
பட்டன் புலவன் பண்பாடி தக்கை கொட்டி
திட்டமாய்ச் சோபனம் செப்பிமுன் னேவர
ஊர்வலமதாக ஒழுக்கமாய் வந்து
வினோதம் பொருந்தும் விடுதியில் இறங்கினார்

வன்னக்கிளிப் பச்சையர்க்கு வரிசை அனுப்பு மென்றார்
வன்னவளைச்சியர்க்கு வரிசை கொண்டு போரமென்று
அன்ன நடையாரும் அருமைப் பெரியவரும்
வேண்டிய தெல்லாம் விதமுடன் வைத்து



கொண்டுமே சென்று கோதையார் அனைவரும்

பெண்ணின் மனைதன்னில் பிரியமாய்ப் புகுந்து

நாட்டில் உள்ள சீர்சிறப்பு நாங்கள் கொண்டு வந்தோமென்று

பூட்டு மென்றார் நகையைப் பொன்னாள் திருக்கரத்தில்

குலமது கோதிக் கொண்டை முடிந்து

பொன்பூட்டி வந்தார்க்குப் புதுக்கலந் தான் அனுப்பி

அருமையுள்ள பந்தலிலே அனைவோரும் வந்திறங்கி

நாற்காதம் உள்ள நகரில்உள்ள பந்தலுக்கு

ஐங்காதம் உள்ள அகலம்உள்ள பந்தலுக்கு

அன்னங்கள் நின்று அலங்கரிக்கும் பந்தலுக்கு

தும்பிகள் நின்று துவண்டாடும் பந்தலுக்கு

வண்டுகள் நின்று மனங்குளிரும் பந்தலிலே

நாக்கரசு நாட்டி நல்ல முகூர்த்தமிட்டு

பேய்க்கரும்பு நட்டு பிறமண்ணுந் தான்போட்டு

சாலுங் கரகமும் சந்திரரும் சூரியரும்

அம்மி வலமாக அரசாணி முன்னாக

ஆயிரம் பெருந்திரி அதுவும் வலமாக

பக்தியுடன் அத்தனையும் பாரித்தார் மண அறையில்

தாய்மாமனை அழைத்து சந்தோசம் ஓங்கிடவே

பொட்டிட்டுப்பொன் முடிந்து போதவே அலங்கரித்து

பட்டமும் கட்டினார் பாரில்உள்ளோர் தான் அறிய

அங்குள்ள பெண்ணை அலங்காரம் செய்துபின்னர்

மாமன் எடுத்து மண அறையைச் சுற்றிவந்து

மகிழ்ச்சியது மீதூற வலதுபுறம் தான் இருத்தி

மாப்பிள்ளைக்கு மைத்துனரை வாஎன்று தான்அழைத்து
கலம்பெருக அரிசியினில் கைகோர் வையிட்டு
சிங்காரமான தெய்வச் சபைதனிலே
கங்கா குலம் விளங்க கம்பர் சொன்ன வாழ்த்துரைத்து
அருமைபெற்ற பெரியோர்கள் அறுகுமணம் செய்தபின்னர்

கங்கணம் தரித்துக் கைதாரை செய்கையிலே
தங்களுக்குத் தாங்கள் தாரைக்குப் பொன்கொடுத்து
செங்கையினாலே சிகப்பிட் டிருவருக்கும்
மங்கள சோபனம் வகையாய் முடிந்ததென்று
சாப்பிட் டிளைப்பாறி சந்தோசம் தானாகி
கொண்டுவந்த பொன்முடிப்பைக் கொடுத்துச் செலுத்தும்
என்றார்

பாட்டன் இருந்து பரியம் செலுத்தினார்
பந்தல் செலவு பலபேர்க்கும் ஈந்தார்
கரகம் இறக்கினார் கன்னிமண வாளனுக்கு
புடவைதனைப் போட்டும் பொற்பாய்த் தலைமுழுகி
பண்ணையத்து மாதிகனைப் பண்பாகத் தான் அழைத்து
வில்லை மிதியடி மிதிக்கவே தொட்ட பின்பு
மஞ்சள் நீராடி மறுக்கஇரு அழைப்பழைத்து
மங்கள சோபனம் வகையாய் முடிந்ததென்று
எல்லா வகைச்சீரும் இயல்புடன் கொடுத்து,

ஆல்போல் தழைத்து அறுகுபோல் வேரூன்றி
மூங்கில்போல் கிளைகிளைத்து முசியாமல் வாழ்ந்திருப்பீர்

ஈசன் உமையாளும் எந்நாளும் காத்தளிக்க

பார்த்தவர்கள் எல்லோரும் பதினாறும் பெற்றெடுக்க

கேட்டவர்கள் எல்லோரும் கிளை கோத்திரமாய் வாழ

இருந்தபேர் எல்லாம் இனிதூழி வாழியவே.

பாடல்.2

பெயர் : பெருமாள்

வயது : 70

ஊர் : பழனி

நல்ல கணபதியை நான்கா லமேதொழுதால்

அல்லல் வினையெல்லாம் அகலுமேற் சொல்லரிய

தும்பிக்கை யோனைத் தொழுதால் வினைதீரும்

நம்பிக்கை கொண்டு நமக்கோர் விநாயகனே

அலைகட லமிர்தம் ஆறுமுக மேனியார்

திங்கள் மும்மாரி செல்வம் பொருந்திட

கந்தன் இந்திரன் கரியமால் மூத்தோர்

முந்திய தேவரும் மூவருங் காத்திட

நற்கல் யாணம் நடந்திடும் சீர்தனில்

தப்புகள் வராமல் சரஸ்வதியே காப்பாய்

சீரிய தெனமா தேன்உள கனிமா

பாரிய கதலி பழமுடன் இளநீர்

சர்க்கரை வெல்லம் தனிப்பலாச் சுளையும்

இங்கிதமாக இனிய தோர்சிறு கிழங்கு

எள்அவல் பொரிகடலை இளந் தேங்காயும்

பொங்கல் சாதம் பொரிகறி யுடனே
செங்கற் கையால் திரட்டியோர் பிடித்து
ஆர மணக்க அழகது சிறக்க
போழை வயிரன் பொருத்துடன் வந்து
அடியான் சோதனை அவநீர்க் குறித்து
கடியதாய் வந்து கருத்திலே நின்று
மனத்துயர் நீக்கி மதிகதி சரணம்
கிரேதா திரேதா துவாபுரிக் கலியுகம்
செம்பம் மகிடம் சென்னியோர் தீர்த்தம்
சேரன் ஒருவன் சோழன் ஒருவன்
பாரமாய் முடியும் பாண்டியன் ஒருவன்
இம்மூ வரசர்களும் இராஜ்ஜியபுரம் ஆண்டு
களூர் தன்னை களூர் தோணி
திருவாதி திருப்புகழ் சிறந்த மானிடர்
தாயது சுத்தம் வாழ்தனைப் பொருத்தி
இந்தப் பெண்ணை நாளது குறித்து
இந்த மாப்பிள்ளையை பேர்தனைக் கேட்டு
இருவகை பேரு ராசியால் கேட்டு
ராசியில் பொருத்தம் கயிற்றில் பொருத்தம்
கருத்துடன் கேட்டு உத்திரம் போக்கியே
தெரிசனம் கேட்டு மைத்துனர் ஊருக்கு
சென்று நடந்து சிலபேர் அழைத்து
உரியதார் வந்து உண்மைகள் சொல்லி
புடிதனில் வெற்றிலை மடிதனில் கட்டி

நாளது குறித்து நல்விருந் துண்டு
வாழியோர் மன்னவரும் மனமது மகிழ்ந்து
கற்றோர் புகழும் கணக்கரை அழைத்து
சேத்தடி ஓலை திறந்து எழுதி
திசைதிசை எங்கும் தென்னவ ரழைத்து
வாழை கமுகு மகமே றுடனே
சோழை பிளந்து தோரணம் கட்டி
மூத்தோர் வந்து முழுகி வழித்து
பண்டிலை பாலு பெரிய கலத்தை
கொண்டு வந்து குணமுடன் விளக்கி
நேரிய சம்பா அரிசியாம் அளந்து
பாக்கு வெற்றிலை பார்யோர் வெல்லம்
சீருடன் நெய்யும் தேங்காய் பழமுடன்
சிறப்புடன் வைத்து மாப்பிள்ளை தனக்கு
மனமது பொருந்திய குடிமகன் முழரி
முகமது துடைத்து இளையதோர் கூந்தலுக்கு
எண்ணையோர் தொட்டுக் கொழுவது சீவக்காய்
ஏழுதீர்த்தம் சாம்புவன் தன்னை
தானோர் அழைத்து மேளம் முழங்க
செந்நெல் சோற்றால் சீக்கது கழித்து
வர்ணப் பட்டு நெருங்கக் கொய்து
நிறையார் உடுத்தி அன்ன முப்பழம்
ஆகும் பாலும் மன்னவருடனே
வாசக் கிழரி மதிப்புடன் கூட்டி

சாணாங்கி கொண்டு தரையதை மெழுகி
கணபதி தன்னை கருத்துடன் நாட்டி
நிறமையதாக நிரை நாழி வைத்து
குழவிக்கும் கங்கணம் குறிப்புடன் தரிச்சு
குப்பாரி கொட்டி குலதேவதையைத் தானழைத்து
செப்பமுடன் மன்னவர்க்குத் திருப்பூட்டிக் காப்பணிந்து
மரியா மரிக்கெழுந்து வாடாபுஷ்பம் தானணிந்து
கொத்தரளி கொடியரளி கோத்திரத்து நல்லரளி
முல்லை இருவாட்சி முனைமுரியாச் செண்பகப்பூ
நாருங் கொழுந்தும் நந்தியா வட்டமும்
வேரும் கொழுந்தும் வில்வக்காய் பத்திரம்
கொண்ட மாலை தண்ட மாலை
சிறப்புடன் கட்டி அழகுடன் பூண்டு
சாந்துகள் சந்தனம் தான் பன்னீரும்
சேர்ந்த குங்குமம் சேரவே பூசி
வாடா தென்னை மதிப்புடன் கட்டி
திட்டமுடன் பேழைதன்னை சோறு நிறைநாழிவைத்து
நட்டுமுட்டுத் தான்முழங்க நாட்டார் சபையில்வர
நலமது நன்றாய் வலமது வந்து
செஞ்சோறு அஞ்சடை சுத்தி எரிந்து
திட்டி கழித்தார்கள் சிவசூர்யனைக் கைமுவஞ்சு
அட்டியங்கள் செய்யாமல் அழகுமனை வந்திருந்து
மாந்தளிர் பூந்தளிர் வர்ண வர்ணப் பொட்டு
மேலான வெள்ளைப்பட்டு மேல்பட்டங் கட்டி

நாற்கரசு நட்டு நல்ல முகூர்த்தமிட்டு
பேய்க்கரும்பு நட்டு பிறமண்ணும் போட்டு
சாலும் கரகமும் சந்திரர்க்கு முன்பாக
அம்மி வலமாக அரசாணி முன்பாக
ஆயிரம் பெருந்திரி அதுவும் வலமாக
சுத்தமுடன் கலம் விளக்கி சோறு அரிசி பால்பழம்
பக்தியுடன் இத்தனையும் பாரிச்சா மணவறையில்
மணவறையை அலங்கரித்து மன்னவரைத் தான் நிறுத்தி
இணையான மங்கையர்க்கு ஏந்திழையைத் தானழைத்து
சந்தனம் புனுகு சவ்வாது மிகத்தான்பூசி
மந்தாரை மல்லிகை மரிக்கொழுந்து மாலையிட்டு
கூறை மடித்தார்கள் குணமயிலார் தங்கையர்க்கு
போழமுடி தான் சுமந்து பொறந்தவரைச் சுற்றிவந்து
வேளை முகூர்த்தமிட்டு விநாயகரைத் தான்பணிந்து
சந்திரரும் சூரியரும் சபையோர்கள் தானறிய
இந்திரனார் தங்கை இணைநோக்கி நின்றதிப்போ
தேங்காய் முகூர்த்தமிட்டு செல்வ விநாயகர்க்கு
பாங்காகக் கைமுவஞ்சி பாரி செய்யப் போறோமென்று
மாதாவுடன் மக்களுக்கு மகனாரும் வந்திருந்து
போதவே பால்வார்த்து போசனங்கள் தானணிந்து
தாயாருடை பாதந்தன்னை தலைகுனிந்து தெண்டனிட்டு
போய்வா மகனே என்று பூங்கொடிக்கு மாலையிட
பயணமிடா மன்னவர்கள் மதிகதி அலங்கரித்து
அடியுமென்றார் பேரணிணை அஷ்டதிசை தான் முழங்க

கட்டியங்கள் கூறிவரக் கவிவாணர் முன்னடக்க
வெள்ளைக் குடைவருது வெண்சாமரை வீசிவர
பட்டம் புலவர் பாடி முன்னடக்க
சித்தடியார்கள் சிலசீதனங்கள் சுமந்து வர
அடியாள் ஆயிரம் ஆலாத்தி ஏந்திட
கர்ணன் இனிவர காமனா ஆமனா
மன்னவர்கள் வந்து வாவென்று தானழைத்து
வெகுதாளத் துடனே விடுதிவந்து தானிறங்கி
வாழ்பவரும் மங்கையர்க்கு வரிசை அனுப்புமென்றார்
நாழி அரிசிச் சாடு நன்றாக முன்னனுப்பி
பொன்பூட்ட போழைகளும் பொன்னுகளும் சீப்புகளும்
பட்டு பணிநகையும் பாக்கிலியார் மாங்கல்யம்
திட்டமுடன் மங்கையர்க்குத் திருப்பூட்ட வேண்டுமென்று
அன்னை நடையார்கள் அருமைப் பெரியவர்கள்
பொன்னு வலக்கைனாலே போழமூடி தானேந்தி
இன்னும் சில சீதனங்கள் ஏந்திழையார் சூழ்ந்துவர
கொண்டுவந்து கொழுப்புகுந்தார் கொம்பனையார் மாளிகைக்கு
தெய்வகண் ணாளரையழைத்துப் பொன்நோட்டம்
பாருமென்றார்
துட்டுப் பொன்னும் மதுரைப் பொன்னும்
வெள்ளைப் புள்ளடி வேற்றோர்கள் நாணயம்
ஆண்மாடு பெண்மாடு அதிலோர் புதுக்காசுகள்
முன்னூற்று முப்பதுபொன்னும் ஒரு முடிப்பாய் முடிந்து
பாட்டன் இருந்து பரியம் செலுத்தி
மச்சன மார்கள் மகிழ்ந்துமே சூழ்ந்திட

பந்தற்களரி பாக்கிலியம் தான் விளங்கி
ஆடுவான் பாடுவான் ஆலாத்திக் குட்பட
தேடிவந்து கைமுகையும் சிவாயமென்ற பேர்களுக்கு
கம்பர் வாழிப்புலவன்
சிந்தை மகிழ்ந்து செல்வம் தனைக்கொடுத்து
அரிசி அளந்து அனைவோர்கள் தானறிய
சிறுசீர் முதலானதும் திட்டமுடன் தான் செலுத்தி
கரகம் இறக்கி கன்னியோர் மன்னவர்கள்
ஆடையார் வாரிசுபெற்ற அழகு மணவாளருக்கு
மன்னூழி காலம் மாமன் கொடுக்கும்
வரிசையாய்க் கட்டிலும் மெத்தையும் காளாங்கியும்
கன்னுடன் பால்பசு சுத்தியுட துத்திப்பட்டு
ஆணுடுத்தித் தேபாங்கு மிச்சியோர் நாராயணா
மேலிருக்க தூதுவர்ணம்
பாக்குவர்ணக் கண்டாங்கி பவள வர்ணக் கண்டாங்கி
முன்கை முதாரி முருக்குவளை வெண்தாயத் (து)
உச்சண்டி பச்சண்டி ஒன்பதுவகை ரட்னம்
வட்டக்கலன் சொம்பு வகையுடனே தான்கொடுத்து
குதிரையுடன் பல்லாக்கு குறையாச் செல்வம்
“ஆல்போல் கிளைகிளைத்து அருகுபோல் வேரூன்றி
மூங்கில்போல் கிளைகிளைத்து முசியாமல் வாழ்ந்திருக்க”
கேட்டிருந்த பெரியோர்கள் கிளைகோத்திரமாய் வாழ்ந்திருக்க
வாழியோர் வாழி
மலைமேலிருக்குமந்த மாதுவள்ளி தெய்வானையோர் வாழி
சந்திரர் சூரியர் உள்ளவரை வாழி.

பின்னிணைப்பு – 4

# ஆரத்திப் பாடல்கள்

ஆரத்தி எடுத்தல் என்பது புதுமணத் தம்பதிகளை வாழை மரத்தோரணம் கட்டிய மணவாசலின் வாயிலில் நிறுத்தி கேளிக்கையாகப் பெண்கள் பாடல் பாடியும், கண்ணேறு படுவதற்கு துதிபாடி அவற்றைக் கழிப்பதற்காகச் செய்யும் ஒரு சடங்காகும். தற்காலத்தில் ஒரு தட்டில் பல மங்கலப் பொருட்களுடன் கற்பூரம், எண்ணெய்விளக்கு போன்றவற்றை வைத்து மணமக்களைச் சுற்றி அவர்களுக்குப் பொட்டிடுவதோடு மட்டும் இச்சடங்கு முடிவடைகிறது. ஆனால் பழைய மரபில் இதில் பலவித கேளிக்கைப் பாடல்கள் இடம்பெற்றுள்ளன. அவற்றிலும் ஒரு பாரம்பரிய இலக்கணமுறை காணப்பெறுகிறது.

இதில் கொங்குத்தமிழின் சொந்தமான சந்தத்திற்கேற்ப ஆரத்தி என்ற சொல் "ஆலாத்தி" என்றே ஒலிக்கிறது. முதலில் எச்செயலைச் செய்வதற்கும் இறைவனை வணங்குவது மரபு. ஆலாத்திப் பாடலிலும் இறை காப்பு முதலில் பாடப்பெறுகிறது.

## துதிப்பாடல்

பெயர் : சு.கருப்புச்சாமி
வயது : 45
கல்வி : எம்.எஸ்சி., எம்ஃபில்.,
ஊர் : அரசபிள்ளைப்பட்டி

பச்சைமயிலாடி வர
பசுந்தோகை வீசிவர
பசுந்தோகை வள்ளிக்கும்
பழனிமலை யாண்டவர்க்கும்
(சுப மங்கள நித்ய சுப மங்களம்)

நீலமயிலாடி வர

எல்லவர்க்கும் ஆரத்தி

கிட்டநிக்கும் பெரியவர்க்கும்

கிழவர்க்கும் ஆரத்தி

(சுப மங்கள நித்ய சுபமங்களம்)

## ஆரத்தியின் சிறப்பு

கஸ்தூரி கதம்பப்பொடி

கமகமக்கும் புனுகு மஞ்சள்

பாலாலே ஆலாத்தி ஏந்திடவே

பார்க்கின்ற கண்களெல்லாம் சோர்ந்திடவே

(சுப மங்கள நித்ய சுப மங்களம்)

மல்லிகைப்பூ முல்லைச்சரம்

மரிக்கொழுந்து பக்கச்சரம்

சோதியாலாத்தி ஏந்திடவே

சோரான கண்களெல்லாம் சோர்ந்திடவே

(சுப மங்கள நித்ய சுபமங்களம்)

## கேளிக்கைப் பாடல்கள்

மணப்பெண்ணைக் கேலி செய்து மணமகனின் அக்கா, தங்கை முறையினர் பாடுவது.

பாடல்.1

பெயர் : சு.பழனியம்மாள்

வயது : 65

ஊர் : திண்டுக்கல்

கருநவாப் பழம்போலே

கருத்திருக்கும் பெண்ணாளுக்கு

எலுமிச்சாங் கனிபோலே

எங்க ளண்ணன்

(சுப மங்கள நித்ய சுப மங்களம்)

பேரீச்சம் பழம்போலே

பிசுபிசுக்கும் பெண்ணாளுக்கு

பப்பாளிப் பழம்போலே

எங்க ளண்ணன்

(சுப மங்கள நித்ய சுப மங்களம்)

மணமகளுக்கு மாப்பிள்ளை, வீட்டின் அருகிலேயோ அல்லது சொந்தத்திலோ அமைந்து விடுகிறான். இதை மணமகளின் அக்கா தங்கையர் கேலி செய்து பாடுவது.

பாடல்.2

எண்ணெய் குடத்திலே

எறும்பென்று நாங்கிருந்தோம் – எங்கள்

ஈஸ்வரிக்கு மாலையிட – வந்த

மாப்பிள்ளையு மிவர்தானோ

(சுப மங்கள நித்ய சுப மங்களம்)

தண்ணீர் குடத்திலே

தவளையென்று நாங்கிருந்தோம் – எங்கள்

சரஸ்வதிக்கு மாலையிட – வந்த

மாப்பிள்ளையு மிவர்தானோ

(சுப மங்கள நித்ய சுப மங்களம்)

மணமகனின் அக்கா தங்கையர் தங்கள் குலத்தை உயர்த்திப் பாடுவது.

பாடல்.3

பெயர் : பெ.செல்லம்மாள்

வயது : 55

ஊர் : ஒட்டன்சத்திரம்

வெற்றிலை போலேயல்லோ

விரிந்த முகரைகட்கு – எங்கள்

வீரியரார் வம்மிசங்கள்

எங்கிருந்து வாச்சாரோ

[சுப மங்கள நித்ய சுப மங்களம்]

சுண்ணாம்பு போலேயல்லோ

சுரித்த முகரைகட்கு – எங்கள்

சூரியரார் வம்மிசங்கள்

எங்கிருந்து வாச்சாரோ

[சுப மங்கள நித்ய சுப மங்களம்]

இந்த முறையிலமைந்த பாடல்கள் தற்பொழுது அரிதாகப் பாடப்பெறுகின்றன. ஆனால் பழங் கொங்கில் இன்னும் பல்வேறு மெட்டுக்களில் அமைந்த பாடல்கள் பாடப்பெற்று வந்திருக்கின்றன. மிக அரிதாக அல்லது முற்றிலும் அழிந்துவிட்ட பாடல் மெட்டு ஒன்று.

பாடல்.4

பெருக்காம் புடிச்சதெல்லாம்

போச்சுங்களா மாப்பிள – இப்ப

பெரியெடத்தில பொண்ணுக்கட்ட

ஆச்சுங்களா மாப்பிள

பாம்பு புடிச்சதெல்லாம்

போச்சுங்களா மாப்பிள – இப்ப

பாம்புகரை வேட்டிகட்ட
    ஆச்சுங்களா மாப்பிள

குழிக்குண்டு ஆடினது
    போச்சுங்களா மாப்பிள – இப்ப
குதிரைமேல ஏரிவர
    ஆச்சுங்களா மாப்பிள

ஆட்டுக்குட்டி மேச்சதெல்லாம்
    போச்சுங்களா மாப்பிள – இப்ப
ஆயிரம்பேர் கூடிவர
    ஆச்சுங்களா மாப்பிள

எருமைக்கன்னு மேச்சதெல்லாம்
    போச்சுங்களா மாப்பிள – இப்ப
எல்லோருங் கூடிவர
    ஆச்சுங்களா மாப்பிள.

இதுபோன்ற கேளிக்கைமிகுந்த கொங்குத்தமிழுக்கே சொந்தமான சந்தம் நிறைந்த இனிமையான பாடல்கள் தற்கால நாகரிகத்தாலும் பிற சமுதாயத்தின் தாக்கத்தாலும் இன்று முற்றிலும் அழிந்து விட்டன.

பின்னிணைப்பு – 5

# தாலாட்டுப் பாடல்கள்

பாடல்.1

பெயர் : வ.பாக்யலட்சுமி

வயது : 40

கல்வி : பத்தாம் வகுப்பு

ஊர் : கோடங்கிபட்டி

மானா மதுரைலிங்கம்
மாமதுரை சொக்கலிங்கம்
தானாய் வளர்ந்தலிங்கம்
என் கண்ணே தனுஷ்கோடிராமலிங்கம்
பூவ பெத்த லிங்கத்துக்கு
நீ பூச செய்யும் காசிலிங்கம்
நீ தானாய் வளர்ந்தலிங்கம்
காசிலிங்கம் பெற்றெடுத்த
என் கண்ணே கண்மணியே
நித்திரை போ
என் கந்தையா உன் காவல்
என் அருமைக்கு காற்று பிணி அண்டாமல்
வேலையா உன் காவல் என்
சாமிக்கு வேறு பிணி அண்டாமல்
வழியில் விளையாடலியே
என் கண்ணே வள்ளியம்மாள்
உன் காவல்
இருப்பார் துணையிருப்பார்

என அருமைக்கு இடும்பன்

கடம்பனல்ல

பக்கத் துணையிருப்பாள் – என்

சாமிக்கு பழனிமலை ஆண்டவரோ!

ஆரய்யா மலைமேலே

என் கண்ணே அழுகுதய்யா

உன் குழந்தை

போடய்யா திருநீறு

என் சாமிக்கு ஒரு பீடை

பிணி அண்டாமல்.

பாடல்.2

என் தங்கம் கடைந்து

என் அருமைக்கு தனித்தங்கம்

தூண் நிறுத்தி

வெள்ளி பாளை பூண்டு என்

சாமிக்கு மேகவர்ணம் தொட்டிகட்டி

தொட்டியிலே இரட்டினகிரி

என் அருமை நீ துரை மகனாய்

பொன் ஊஞ்சல்

பொன் ஊஞ்சல் தொட்டிலிலே

என் சாமி நீ பொய் உறக்கம்

செய்த கண்ணே

தொட்டி கட்டித் தாலாட்டி

என் சாமி துரை மகனை போட்டாட்டி

தொட்டிலிக்கும் கீழாலே

என் அருமைக்கு துணை
இருப்பாள் மீனாட்சி
மீனாட்சி அம்மனுக்கு
என் கண்ணே மிகப்பெரிய
சொக்கருக்கு நீ தானாட்சி
செய்ய வந்த என் அருமை
நீ தருமதுரை பேரரசோ
ஆடினாள் வள்ளியம்மன்
என் சாமி நீ ஒழிந்தாய்
வனந்தேடி
தேடினார் வேலவரோ
முருகன் திருக்கண்ணு பஞ்சனையோ
நீ எட்டு வனஞ் சுத்தியல்லோ
வேலவர் வள்ளி இளங்குடியை
காணாமல்
பாரது வனஞ் சுத்தியல்லோ
வேலவர் வள்ளி பசுங் கொடியே
காணாமல்
மானுருவங் கொண்டல்லோ
வள்ளியம்மாள் பகலவனம் போய்
நுழைந்தாய்
ஆறுமுக வேலவரு
முருகர் ஆனைமுகமானாரோ.

பாடல்.3

பெயர் : கு.தவமணி

வயது : 35

கல்வி : மூன்றாம் வகுப்பு

ஊர் : தங்கச்சியம்மாபட்டி

கண்ணே கமலகமே
கண்கள் ரெண்டும் செண்பகமே
செண்பகப்பூவே சிவன்
கொடுத்த பாக்கியமே
பாக்கியமே இலக்கியமே
பரமருடைய கைப் பொருளே
வாசலிலே வன்னிமரம்
சாமி நம்ம வம்சங்கள் ராசகுலம்
ராசகுலம் பெத்தெடுத்த ரத்தினமே
நித்திரைபோ!
நித்திரைபோ நித்திரைபோ என்
அருமை சித்திரைப்பூ தொட்டிலிலே
எங்ககுல முத்தே சாமி
ராசகுல வம்சமோ
சொல்லாயிரம் பெற்ற கண்ணே
நீ சோழ ராசா பேரரசு
என் சக்கரையோ முக்கொழுந்து
சாதி மரிக் கொழுந்து
மரிக் கொழுந்து மடியிலிட்டு
மதுரை ஜில்லா தோளிலிட்டா
காணிக்கை என்று சொல்லி

கடைத் தெருவே போனாலும்

மாணிக்கம் என்று சொல்லி

மதிப்பார் சில கோடி!

பாடல்.4

பெயர் : முத்தம்மாள்

வயது : 52

ஊர் : அத்திக்கோம்பை

கண்ணுமணி பொன்னுமணி

கந்தருடைய வேலுமணி

வேலுமணி வேணுமின்னு

வேண்டிய தவஞ் செய்தாங்க

தவங்கள் முடிஞ்சதிப்போ

தங்கம் பிறந் தெடுக்க

கண்ணுக்கோ கண்ணெழுதி

கடைக் கண்ணுலே மைஎழுதி

உறங்காத கண்ணுக்கு

ஓலை கொண்டு மை எழுதி

மை எழுதி பொட்டு எழுதி மாமன்

மகராசன் பேரெழுதி

ஐந்து கிளியெழுதி

அழகுகிளி ரெண்டெழுதி

ஐந்து கிளியெழுதி

அழகுகிளி ரெண்டெழுதி

கொஞ்சுங் கிளியெழுதி

கொண்டு வருவான் உன் மாமன்.

பாடல்.5

என் ஆரி ராரி ராராரோ — என் கண்ணே
என் ஆரி ராரி ராராரோ — என் கண்ணே
என் கொத்துக் கொத்தாய் சீவக்காயாம் — என் கண்ணே
குடங்குடமா நல்லெண்ணெய்யாம்
என் அரச்சு விழிப்பாரும் — என் கண்ணே
அஞ்சு வகைக் கிண்ணியிலே
என் தேச்சுக் குளிப்பாரும் — என் கண்ணே
தென் பழனி சீமையிலே
என் போய்க் குளிப்பாரும் — என் கண்ணே
பொழுதெறங்கும் பொய் கையிலே
என் வந்து மயிர் உணர்த்தும் — என் கண்ணே
வருணக் குறிஞ்சியிலே
என் காத்தடிக்கும் மூலையிலே — என் கண்ணே
கர்ணருக்குத் தொட்டிகட்டி
என் காத்தடிக்க பூமலர — என் கண்ணே
கர்ணர் மகன் கண்ணசர
வெள்ளிக் குதிரை ஏறி — என் கண்ணே
வெள்ளி மட்டும் சீனி வைத்து
விரலால சவுக்கெடுத்து — என் கண்ணே
வேகமா தட்டிவிட
வெள்ளிமலை நாடுமல்லா — என் கண்ணே
விடியற்காலம் போய்ச் சேரும்.
வேங்கை சரணம் செய்யும் — என் கண்ணே
உன்னைக் கண்டால் வெள்ளானை தண்டலிடும்
கருமலை நாமெல்லோ — என் கண்ணே
காலம்புற போய் சேரும்

கரடி சரணம் செய்யும் – என் கண்ணே
காட்டானை தண்டலிடும்
வாசலிலோ வன்னிமரம் – என் கண்ணே
வம்சங்க ராச குலம்
எங்க ராசர் குலம் ஆளவந்த – என் கண்ணே
ரதமணியே நித்திரையாம்
நித்திரையும் பொய்கலம்மா – என் கண்ணே
சித்திரைப்பூ தொட்டியிலே.

பாடல்.6

பெயர் : தனபாக்கியம்
வயது : 40
ஊர் : குஞ்சுவீரன்பட்டி

ராரி – ராரே ரோய் – என் கண்ணே
ராரி ராரோ ரோய் – என் கண்ணே
ஆட்ட ஆட்டத் தூங்கலியோ – என் கண்ணய்யா நீ
அர்ச்சுனரு பெத்த செல்வம்
தாலாட்டத் தூங்கலியோ – என் கண்ணய்யா நீ
தர்மரு பெத்த கண்ணு – என்
ஊசி முனைமேலே – என் கண்ணய்யா
உனக்குத் தவமிருந்தோம் – என்
பாசி பதம் பெத்தெடுத்த – என் கண்ணய்யா நீ
பசுங்கிளியோ நித்திரைபோ
வடக்கே உரக்கிணறாம் – என் கண்ணய்யா
வாசலெங்கும் பால் கிணறாம் – என்

பாலெடுத்துப் பூசை செய்யும் – என் கண்ணய்யா நீ

பாண்டியரே உங்களய்யா

தெற்கே உரக்கிணறாம் – என் கண்ணய்யா

தெருவெங்கும் பால்கிணறாம் – என்

பாலெடுத்துப் பூசை செய்யும் – என் கண்ணய்யா நீ

பாண்டியரே உங்களய்யா

தெற்கே உரக்கிணறாம் – என் கண்ணய்யா

தெருவெங்கும் பால்கிணறாம் – என்

பாலெடுத்துப் பூசை செய்யும் – என் கண்ணய்யா நீ

பாண்டியரே உங்களய்யா

ஆடுமரம் தூரியிலே – என் கண்ணே நீ

அசையுமாம் பொன் தூரி – என்

பொன்தூறி மேலேயிருந்து – என் கண்ணே நீ

பொய்யொறக்கம் போற கண்ணா – என்

கோடு துறந்து – என் கண்ணய்யா

குறிஞ்சிமேல் உட்கார்ந்து – என்

பேனா வெடுத்து – என் கண்ணே நீ

பிளிச்சூடு தானுடுத்தி – என்

வக்கீலுக்கு வார்த்தை சொல்லும் – என் கண்ணே

வல்லவரோ உங்களய்யா.

பாடல்.7

ராரி ராரி ராராரோ – என் கண்ணே

ராரி ராரி ராராரோ

நித்திரை போவாரோ – என் கண்ணே நீ

சித்திரைப்பூ தொட்டிலிலே – என்

ராமர் மகனோ – என் கண்ணே நீ

இலட்சுமணர்க்குப் புத்திரரோ – என்

சீதை மகனோ – என் கண்ணே நீ

திருச்செந்தூரு வேலவரோ – என்

தங்கக் கடஞ்சு – என் கண்ணே நீ

தமிரெல்லாம் தூண் நிறுத்தி – என்

வெள்ளி வளை பூட்டி – என் கண்ணே நீ

வேந்தருக்கே தொட்டி கட்டி

தொட்டிக்குக் கீழாலே – என் கண்ணே

துணையிருப்பான் வேலவரோ!

பாடல்.8

பெயர் : ச.நாச்சம்மாள்

வயது : 45

ஊர் : ஓடைப்பட்டி

ராரி ராரி ராராரோ

மானத்தக் கீறியல்லோ ராரிராரோ

மழைய வரவழைச்சு ராரிராரோ

பூமியக் கீறியல்லோ ராரிராரோ

பூச்செடியே நாத்து விட்டு ராரிராரோ

பூ மணம் கொல்ல வந்த ராரிராரோ

புண்ணியரார் பேரரசு ராரிராரோ

சிவக்கச் சிவந்தெழுந்து ராரிராரோ

சிவந்து எழுந்த சூரியரோ ராரிராரோ

அதிகச் சிவப்பருக்கு அருமை மகனே ராரிராரோ

மலைய வகுந்து ராரிராரோ
மண்டபங்கள் உண்டு பண்ணி ராரிராரோ
சனத்த வரவழைச்சு ராரிராரோ
சக்தி வழங்குது அங்கே ராரிராரோ
கடலரசு பவளமலை ராரிராரோ
கன்னியர்கள் ஆளும் மலை ராரிராரோ
நிலை அரசு வேனுமுன்னு ராரிராரோ
உன்னப் பெத்த அம்மா நின்று தவஞ்செய்தாள் ராரிராரோ.

## பாடல்.9

ராரி ராரி ராராரோய் – என் கண்ணே
ராரி ராரி ராராரோ
கோட்டையிலே கூடாரம் – என் கண்ணே உங்க
மாமன்மார் கொத்தமல்லி ஏவாரம் – இன்னைக்கு
கொத்தமல்லி வித்தவுடனே – என் கண்ணே உனக்கு
கொலுசு வாங்கி வாராரோ – இன்னைக்கு
மருதையிலே கூடாரம் – என் கண்ணே உங்க
மாமன்மார் மல்லிகைப்பூ ஏவாரம் – இன்னைக்கு
மல்லிகைப்பூ வித்தவுடனே – என் கண்ணே
மாலை வாங்கி வாராரோ
உழுத புழுதியிலே – என் கண்ணே இன்னைக்கு
உன் மாமன் சன்னதியிலே – இன்னைக்கு
தரிசாக் கிடக்குதுன்னு – என் கண்ணே
உன் மாமன்மார் சம்பா வெதச்சாரோ
என் வையாறு பொய்யாறு – என் கண்ணே
வருதைய்யா பாலாறு – என்
பாலாறு நெய்யாறு – என் கண்ணே
பாலகன் பசியாற.

பாடல்.10

பெயர் : மாரியம்மாள்

வயது : 46

கல்வி : ஐந்தாம் வகுப்பு

ஊர் : நெய்காரபட்டி

ராரி ராரி ராராரோய் – என் கண்ணே

ராரி ராரி ராராரோ

வள்ளி அழகுக்கு – என் கண்ணே

வலதுபுறம் தேமலுக்கு

வள்ளியா கூந்தலுக்கு – என் கண்ணே

வாசல் கொண்ட வேலவரே

மயில்பாட குயில் கூவ – என் கண்ணே

மாடப்புறா சங்கு ஊத

சண்முக நதியை விட்டு – என் கண்ணே

சரவணப் பொய்கை விட்டு

திரும்பையா இந்த முகம் – என் கண்ணே

எழுதிருப்பாக் கடலோரம்

குளிக்க கிணறு வெட்டி – என் கண்ணே

கும்பிட கோயில் கட்டி

படிக்க மடம் கட்டுறாரோ – என் கண்ணே

பாண்டியரோ உங்களய்யா

சுருட்டைப் புளியமரம் – என் கண்ணே

சூதாடும் நந்தவனம்

சூடிக்கெளிச்சுவரும் – என் கண்ணே

சூரியரே உங்களய்யா.

பின்னிணைப்பு — 6

# ஒப்பாரிப் பாடல்கள்

## பாடல்.1

பெயர் : நல்லம்மாள்

வயது : 60

ஊர் : நொச்சிப்பட்டி

சீமக் கடிதாசு
தேங்கருணார் கையெழுத்து
சீதைக்கு அனுப்பியிருந்தால்
பேச்சாகக் கலந்திருப்பேன்
பெரியோர் சொல்ல கேட்டிருப்பேன்
சீதைக்கு அனுப்பாம
பேச்சைக் கலருலையே
பெரியோர் சொல்லைக் கேட்கலையே!

மதுரைக் கடிதாசு
மாங் கருணார் கையெழுத்து
மயிலுக்கு அனுப்பியிருந்தால்
நாவால் கலந்திருப்பேன்
நல்ல சொல்லைக் கேட்டு இருப்பேன்
மதுரைக் கடிதாசு
மயிலுக்கு அனுப்பாம
நாவால் கலருலையே
நல்ல சொல்லைக் கேட்கலையே!

## பாடல்.2

ஊருக்கு மேல்புறமா உயர்ந்த ஒரு ஆலமரம்
பாரம் பொறுக்காமல் வேர்சரிந்து கீழே விழ
அடிமரம் அச்சாகும் – என்னைப் பெத்த அப்பா
நுனிமரந் தேராகும்

தச்சரை அழைத்திடுங்கள் என்னைப் பெத்த
அப்பாவுக்கு தங்கரதம் சிங்காரிக்க
கொல்லரை அழைத்திடுங்கள் என்னைப் பெத்த
அப்பாவுக்கு குறிஞ்சி இரதம் சிங்காரிக்க
நடத்துக்குள்ளிருக்கும் நல்லரளி வில்லமரம்
நருக்குத் திடுக்கடஞ்சு நாலுமுகம் தேர்கட்டி
நீ பெத்த மகள் மூத்தமகள் கட்டுந் தேரில்
மூன்று கலசம் வைத்து, முதல்கலசம் மேல் கமுத்தி
நடுமகள் கட்டும் தேரில் நாலு கலசம் வைத்து
நடுகலசம் மேல் கமுத்தி
கடைசிமகள் கட்டும் தேரில் கலசம் கமுந்து இருக்கும்
கண்ணாடி பின் ஒளிரும்
கண்ணனை அழைத்திடுங்கள், வரிவரியா சேலைபோட
பரியாரை அழைத்திடுங்கள் கண்ணாடி மேல் பதிக்க!
இரண்டு சட்டி கொண்டுவரும் குயவரை அழைத்திடுங்கள்
நாலு கோடு கிழித்தி நாடார் இருக்கும்போது
கால்பணம் முழத்துண்டு, காணி பறையன் உண்டு
பூவால பந்தலுண்டு
நந்த நந்த ஒரு பறையன் நாட்டை ஆண்டான் ஒரு பறையன்
தொண்ட, தொண்டான் ஒரு பறையன் அனுதினமும்
தொழுவான் ஒரு பறையன்.

பாடல்.3

பெயர் : சின்னம்மாள்

வயது : 45

கல்வி : மூன்றாம் வகுப்பு

ஊர் : வெள்ளையகவுண்டனூர்

ஆனைமேல் தம்பட்டம் அதிரசம்தான் மேளங்க
குதிரைமேல் தம்பட்டம் கோடிலட்சம்தான் மேளங்க
எருதுமேல் தம்பட்டம் எல்லை லட்சம்தான் மேளங்க
மலைமேல் துடும்படிக்க, மாணிக்கன் கொம்பூத
கொம்பனா மேலிருந்து கொண்டு வந்து மாங்கல்யம்
எரவாறம் தட்டாமல் ஒருநாள் இருந்து வந்த மாங்கல்யம்
நாழிஅரிசிக்கூடை ஒருநாள் நல்லநாள் பாத்தாச்சு
முகூர்த்தக்கால் போட வந்த மூத்தவன் மேல் தோசமில்ல
நாற்காலி போட வந்த நடுவர் மேல் தோசமில்ல
தாலி அறும்பெடுத்த தட்டான் மேல் குத்தமில்ல
சுந்தரம்மா குந்தவச்சு என்னைப் பெத்த அப்பா
என் தாய் கழுத்தில் தாலிகட்டி
கட்டுனது இல்லாமல் கட்டழகன் தன்னிடத்தில்
கலந்து சுகம் வாழலியே!
பந்தல் பிரிக்கவில்லை! மாலை மயங்கவில்லை
மல்லிகைப்பூ சோரவில்லை!
அரசாணிக்குடம் இருக்க – என்னைப் பெத்த
அப்பாவே – இன்னிக்கு
அழும்பு வந்து நேர்ந்ததென்ன – என்னைப் பெத்த
அப்பாவே உங்கள் அருங்கிளியால் வாடுறமே!

பாடல்.4

## தாய் இறந்தால் பாடும் பாட்டு

கரூர் பாதையில கார்போகும் வீதியில
கரூர் வீதியில கலர்வந்து விக்கிதுனு
என்னை வளத்தும் அகம் பக்கம் இருந்தா
கலரே விலை மதிச்சு கன்னி கையில் கொடுத்து
கலரே மடிச்சு உடுத்தி நீங்க வசிக்கும் காசிக்கே வந்துட்டா
கண்ணுகளும் கன்னத்துலே பொட்டு இட்டு
கருப்பே நிறம் குறைஞ்சோம் கண்ணகியா பாடிட்டாளே
சீரங்கத்து வீதியிலே தேர்போகும் பாதையில
சிவப்பு வந்து விக்கிதுன்னு
சிவப்பே விலைமிதிச்சு சீதை கையில் கொடுத்து
சிவப்பே உடுத்தி அல்ல
நீங்க இருக்கும் சீரங்கம் வந்துட்டா
திட்டிகளும் பட்டுதுன்னு
சிவப்ப உரைச்சு மல்ல
செவினிமேல் பொட்டு இட்டு
சிவப்பே நிறம் குறைஞ்சோம்
சீதையம்மா பாடிட்டோம்.

பாடல்.5

## மாமன் இறந்தால் பாடும் பாட்டு

பெயர் : அங்கமுத்து
வயது : 70
ஊர் : மஞ்சநாயக்கன்பட்டி

தெற்கே காத்தடிக்க சிறு மிளகும் செண்டுகட்ட
சின்ன பிறப்போட சேர்ந்து இருக்கும் பாலகரோட

சீதையம்மா பொண் பிறந்தா
சீதையம்மா தன் குறைய
செடுவு அரிய சொல்லிட்டா
மனசும் குறையுமுன்னு
மறுமேனி வாடுமுன்னு
மனசிலே போட்டாச்சு
மாளிகைமேல் பொங்கிட்டே
வடக்கே காத்தடிக்க
வால்மிளகு செண்டுகட்டி
வண்ணபிறப்போட
வரிசை உள்ள பாலகரோட
நான் வண்ணமல்லி தான் பிறந்தேன்
வண்ணமல்லி தன் குறையை
மனசும் குறையுமுன்னு மறுமேனி
வாடுமுன்னு, கும்பியில போட்டச்சு
கோபுரமே பொங்கிட்டே.

பாடல்.6

## தந்தை இறந்தால் பாடும் பாட்டு

கர்ணர் மலைமேல கம்பம் தெரியுதுன்னு
கர்ணர் கம்பம் நிற்கிதுன்னு
நாங்க கன்னி மகிழ்ந்து இருந்தோம்
நாங்க கண்ணகியா பூரணஞ்சோம்
காத்தர் துணைஇருந்தா கம்பம் அவியாது
கர்ணர் கம்பம் சாயாது
காத்தர் துணையில்லாம கம்பம் அவிந்தது என்ன
கர்ணர் கம்பம் சாஞ்சது என்ன

கன்னி மனம் செடிஞ்சோம்

திருநீர் மலைமேல தீபம் தெரியுதுன்னு

தீபகம்பம் நிற்குதுன்னு

சீதை மகிழ்ந்து இருந்தோம்

சீதையம்மா பூரணஞ்சோம்

தெய்வம் துணை இருந்தா தீபம் அவியாது

திருநீர் கம்பம் சாயாது

தெய்வம் துணை இல்லாம

தீபம் அவிஞ்சது என்ன

திருநீர் கம்பம் சாஞ்சது என்ன

நாங்க சீதை மனம் செடுஞ்சோம்

திட்டு இடுச்சு மண் நிறைவி

சீனிபலா நாத்து விட்டு

சிவக்க பழுக்குட்டுன்னு

சீதை வசம் சேருட்டுன்னு

நான் சீதை மகிழ்ந்திருந்தேன்

சிவக்கப் பழுக்காம

சீதை வசம் சேருலயே

சீதை மனம் செடுஞ்சே.

## பாடல்.7

## கணவன் இறந்தால் பாடும் பாட்டு

பெயர் : இராமாத்தாள்

வயது : 65

ஊர் : குமாரபாளையம்

கையால மண்ஓதுக்கி கனகசம்பா

நாத்துவிட்டு கனகசம்பா நெல்லையெல்லாம்

காத்துகண்டு தூத்தியிருந்தா

காத்தும் பகுனாவே

கடப்பாள முத்தாவே

காத்துகண்டு தூத்தாம

காத்து பகுனாகலையே

கடப்பாள நெல்லாச்சு

வெரலால மண்ஓதுக்கி வீரசம்பா

நாத்துவிட்டு வீரசம்பா நெல்லையெல்லாம்

வெய்யக்கண்டு தூத்தியிருந்தா

வெய்ய பகுனாவே

வெப்பாள முத்தாவே

வெய்யக்கண்டு தூத்தாம

வெய்ய பகுனாகலையே

வெப்பாள நெல்லாச்சு.

## பாடல்.8

பத்துப் பிறப்போட பரணியூரு வக்கீலோட

பார்வதியா பொம்பெறந்தேன்

பார்வதியா கட்டுஞ்சேலை

பதக்கையும் பெதசெருக்கு

பவுனுக்கரை ஓட்டியிருக்கு

பார்வதியா துக்கமின்னா

பதக்கையும் தெருச்சுவிழும்

பவுனுக்கரை வெட்டுவிழும்

எட்டுப் பிறப்போட இலங்கையூரு வக்கீலோட

ஈஸ்வரியா பொம்பெறந்தேன்

ஈஸ்வரியா கட்டுச்சேலை

ஏலம் பெதசெருக்கு

இஞ்சிகரை ஓட்டியிருக்கு

ஈஸ்வரியா துக்கமின்னா

ஏலம் தெருச்சுவிழும்

இஞ்சிகரை வெட்டுவிழும்.

பாடல்.9

பெயர் : தெய்வானை

வயது : 55

ஊர் : சின்னகலையம்புத்தூர்

எட்டௌநி கல்கண்டு ஏல அரிசி பாயாசம்

இன்பமுள்ள நாவுக்கு தெவிட்டமுள்ள

தொண்டைக்கு எழுத்துருவார் இங்கிருக்க

ஏமன் உறவு பண்ணி

ஈஸ்வரிய ராசிபண்ணி

ஏமனுடைய பாயாசம்

எடுத்துண்ண போனிங்களா

பத்தௌநி கல்கண்டு பச்சரிசி பாயாசம்

பந்தமுள்ள நாவுக்கு பதட்டமுள்ள தொண்டைக்கு

பார்த்திருவார் இங்கிருக்க

பரமன் உறவு பண்ணி

பார்வதிய ராசி பண்ணி

பரமருடைய பாயாசம்

பார்த்துங்க போனிங்களா

பத்து பவுன் கொடுத்து

படுக்க குறிஞ்சி செய்தோம்

பக்க இருக்க பெஞ்சி செய்தோம்

படுத்தா அழுந்துதுண்ணு

பக்க இருந்தா காந்துதுண்ணு

பரமன் உறவு பண்ணி

பார்வதிய ராசி பண்ணி

பரமருடைய பஞ்சனைக்கு

படுத்துறங்க போனிகளா

எட்டு பவுன் கொடுத்து

இருக்க குறிஞ்சி செய்தோம்

இங்கிருக்க பெஞ்சி செய்தோம்

இருந்தால் அழுந்துதுண்ணு

இங்கிருந்தா காந்துதுண்ணு

ஏமன் உறவு பண்ணி

ஈஸ்வரிய ராசி பண்ணி

ஏமனுடைய வஞ்சனைக்கு

இருந்துறங்கப் போனீங்களா.

## பாடல்.10

பெயர் : துளசிமாணிக்கம்

வயது : 48

கல்வி : ஐந்தாம் வகுப்பு

ஊர் : பாலசமுத்திரம்

மருதமலைமேல மாவும் பிரசாதம்

மதிப்பா நடக்குதுன்னா என்ன

சேந்த சனம் அத்தனையும்
மஞ்சனுக்கு வேணுமின்னு
மங்கைவந்தால் ஆகட்டுன்னு
மாவும் பிரசாதம் மடியேந்தி வாங்கினாங்க
என்னைப்பெத்த மாபாவி
மஞ்சனுக்கு வேணுமின்னு
மங்கைவந்தால் ஆகட்டுன்னு
மனச்செடுவும் கண்ணீரும்
மடியேந்தி வாங்கினாங்க
நாங்க மக்கள் மனசிலெண்ணி
மல்லிகையா வாடுறோமே.

பின்னிணைப்பு – 7

# வினா நிரல்

## கொங்கு வேளாளக் கவுண்டர்களின் பழக்க வழக்கங்கள் [திண்டுக்கல் மாவட்டம்]

---

பெயர் ..

வயது ..

ஆண்/பெண் ..

கல்வித்தகுதி ..

முகவரி ..

---

1. எந்தச் கூட்டத்தை (குலத்தை)ச் சேர்ந்தவர்?
2. குலதெய்வத்தின் பெயர் என்ன? எந்த ஊரில் உள்ளது?
3. குழந்தை பிறந்தவுடன் செய்யும் சடங்குகள் யாவை?
4. பெயர் வைத்தல் எனும் சடங்கு உண்டா? உண்டெனில், பின்பற்றப்படும் முறை யாது?
5. காதணி விழா நடத்துவதுண்டா?
6. பூப்புச் சடங்கு செய்வதுண்டா?

7. திருமணங்கள் பழங்கால வழக்கப்படி நடைபெறுகிறதா?

8. திருமண நடைமுறையில் ஏதாவது மாற்றங்கள் உண்டா?

   (அ) பிராமணரைக் கொண்டு திருமணம் நடத்தப்பெறுகிறதா?

   (ஆ) ஊர்ப்பெரியவரைக் கொண்டு திருமணம் நடத்தப்பெறுகிறதா?

   (இ) அருமைக்காரரைக் கொண்டு திருமணம் நடத்தப்பெறுகிறதா?

   (ஈ) அரசியல்வாதியைக் கொண்டு திருமணம் நடத்தப்பெறுகிறதா?

9. இறப்புச்சடங்குகளில் ஏற்பட்டிருக்கும் மாற்றங்கள் என்ன?

10. பிற செய்திகள்.

தகவலாளர் கையொப்பம்

## பின்னிணைப்பு – 8

# தகவலாளர் பட்டியல்

| வ. எண். | பெயர் | பால் | வயது | கல்வி | சாதி | ஊர் | தகவல் நாள் |
|---|---|---|---|---|---|---|---|
| 1. | என்.சண்முகவடிவேல் | ஆண் | 54 | பி.யு.சி. | கொங்கு வேளாளர் | மஞ்சநாயக்கன்பட்டி | 5.9.99 |
| 2. | ப.கருப்புச்சாமி | ஆண் | 48 | எஸ்.எஸ்.எல்.சி | ,, ,, | ஒட்டன்சத்திரம் | 7.9.99 |
| 3. | இரா. கோதண்டராமன் | ஆண் | 52 | எம்.ஏ., எம்.ஏ., எம்ஃபில்.,எம்.எட்., | ,, ,, | கரியாம்பட்டி | 10.9.99 |
| 4. | காளியம்மாள் | பெண் | 70 | இல்லை | ,, ,, | வேடசந்தூர் | 15.10.99 |
| 5. | கு.கவிதா | பெண் | 34 | எம்.ஏ., | ,, ,, | மூலச்சத்திரம் | 20.11.99 |
| 6. | கே.செல்லமுத்து | ஆண் | 49 | ஏழாம் வகுப்பு | ,, ,, | அரசபிள்ளைபட்டி | 24.11.99 |
| 7. | ஆ.செல்வம் | பெண் | 47 | எஸ்.எஸ்.எல்.சி | ,, ,, | சின்னகலையம்புத்தூர் | 27.10.99 |
| 8. | பெ.சக்திவேல் | ஆண் | 50 | எம்.ஏ.,எம்.எட்., | ,, ,, | தொப்பம்பட்டி | 30.11.99 |
| 9. | கி.லோகேஸ்வரி | பெண் | 42 | எம்.ஏ.,பி.எட்., எம்ஃபில்., | ,, ,, | காசிபாளையம் | 4.12.99 |
| 10. | ஆ.தங்கம் | பெண் | 35 | பி.ஏ., | ,, ,, | பழக்கனூத்து | 4.12.99 |
| 11. | எசு.காந்திமதி | பெண் | 48 | பிஎஸ்.சி., | ,, ,, | பழனி | 6.12.99 |
| 12. | க.சிவசாமி | ஆண் | 50 | எம்.ஏ.,எம்.எட்., | ,, ,, | சிந்தலவாடம்பட்டி | 8.12.99 |
| 13. | இராமாத்தாள் | பெண் | 65 | இல்லை | ,, ,, | குமாரபாளையம் | 4.1.2000 |

| வ. எண். | பெயர் | பால் | வயது | கல்வி | சாதி | ஊர் | தகவல் நாள் |
|---|---|---|---|---|---|---|---|
| 14. | லிங்கசாமி | ஆண் | 50 | 11ம் வகுப்பு | கொங்கு வேளாளர் | போடுவார்பட்டி | 7.1.2000 |
| 15. | சே.சாந்தகுமாரி | பெண் | 40 | பிஎஸ்.சி., | ,, ,, | அம்பிளிக்கை | 9.2.2000 |
| 16. | இர.வளர்மதி | பெண் | 36 | 10ஆம் வகுப்பு | ,, ,, | சவ்வாதுபட்டி | 2.2.2000 |
| 17. | ஈ.மலர்கொடி | பெண் | 45 | எஸ்.எஸ்.எல்.சி | ,, ,, | ஸ்ரீராமபுரம் | 6.2.2000 |
| 18. | எஸ்.செல்லப்பன் | ஆண் | 55 | இல்லை | ,, ,, | புதுச்சத்திரம் | 15.2.2000 |
| 19. | இரா.இராமலிங்கம் | ஆண் | 42 | எம்எஸ்.சி.,எம்ஃபில்., | ,, ,, | சின்னயகவுண்டன்வலசு | 6.3.2000 |
| 20. | க.முருகேசன் | ஆண் | 33 | எம்.ஏ.,எம்ஃபில்., | வேட்டுவக்கவுண்டர் | கஞ்சநாயக்கன்பட்டி | 10.3.2000 |
| 21. | கா.அப்பன்ராசு | ஆண் | 63 | எம்.ஏ., | செங்குந்த முதலியார் | ஓடைப்பட்டி | 14.3.2000 |
| 22. | சி.பிரேமா | பெண் | 40 | எஸ்.எஸ்.எல்.சி | கொங்குச் செட்டியார் | ரெட்டியார் சத்திரம் | 25.3.2000 |
| 23. | இர.இரத்தினசாமி | ஆண் | 40 | எம்எஸ்.சி.,எம்ஃபில்., | ,, ,, | இடையகோட்டை | 2.4.2000 |
| 24. | செல்வராசுகண்ணன் | ஆண் | 30 | எம்.காம்., | ,, ,, | கன்னிவாடி | 6.4.2000 |
| 25. | நடராசன் | ஆண் | 49 | இல்லை | கொங்கு பண்டாரம் | லட்சலபட்டி | 10.4.2000 |
| 26. | கார்த்திகேயன் | ஆண் | 35 | எம்.ஏ.,எம்ஃபில்., | மறவர் | ஆயக்குடி | 12.4.2000 |
| 27. | காமாட்சி | ஆண் | 50 | இல்லை | கொங்குப்பறையன் | சத்திரப்பட்டி | 12.4.2000 |
| 28. | கருணாகரன் | ஆண் | 60 | இல்லை | கொங்கு நாவிதன் | கொசவபட்டி | 13.4.2000 |
| 29. | பெருமாள் | ஆண் | 70 | இல்லை | ,, ,, | பழனி | 13.4.2000 |
| 30. | சின்னான் | ஆண் | 75 | இல்லை | கொங்கு வண்ணான் | நெய்க்காரபட்டி | 10.5.2000 |
| 31. | நல்லதம்பி | ஆண் | 45 | இல்லை | கொங்கு பண்டாரம் | பெரியதிருமங்கலம் | 13.5.2000 |
| 32. | என்.சென்னியப்பன் | ஆண் | 50 | இல்லை | கொங்கு வேளாளர் | நாச்சியப்பகவுண்டன்வலசு | 15.5.2000 |

| வ. எண். | பெயர் | பால் | வயது | கல்வி | சாதி | ஊர் | தகவல் நாள் |
|---|---|---|---|---|---|---|---|
| 33. | பழனியப்பகவுண்டர் | ஆண் | 55 | எஸ்.எஸ்.எல்.சி | கொங்கு வேளாளர் | நடுப்பட்டி | 15.5.2000 |
| 34. | பழனியம்மாள் | பெண் | 85 | இல்லை | ,, ,, | ஓடைப்பட்டி | 17.5.2000 |
| 35. | வேலம்மாள் | பெண் | 65 | இல்லை | ,, ,, | விசயபுரம் | 17.5.2000 |
| 36. | ஆறுமுகம் | ஆண் | 75 | இல்லை | ,, ,, | நாலுபுளிக்கோட்டை | 18.5.2000 |
| 37. | தங்கம்மாள் | பெண் | 60 | 8ஆம் வகுப்பு | ,, ,, | புதூர் | 18.5.2000 |
| 38. | ஆறுமுகம் | ஆண் | 50 | 5ஆம் வகுப்பு | ,, ,, | சட்டையப்பனூர் | 18.5.2000 |
| 39. | கே.பாலசுப்பிரமணி | ஆண் | 55 | இல்லை | பதினான்காம் செட்டியார் | சட்டையப்பனூர் | 18.5.2000 |
| 40. | எஸ்.சின்னசாமி | ஆண் | 54 | இல்லை | பதினேழாம் செட்டியார் | திண்டுக்கல் | 18.5.2000 |
| 41. | சடையப்பன் | ஆண் | 60 | 5ஆம் வகுப்பு | மொடவாண்டிக்கவுண்டர் | ஓடைப்பட்டி | 14.3.2000 |
| 42. | ப.ச.பழனிச்சாமி | ஆண் | 51 | எம்எஸ்.சி.,எம்ஃபில்., | கொங்கு வேளாளர் | பழனி | 20.5.2000 |
| 43. | கே.சின்னராஜ் | ஆண் | 35 | 10ஆம் வகுப்பு | கொங்கு நாவிதன் | தேவத்தூர் | 22.5.2000 |
| 44. | திருமலைசாமிகவுண்டர் | ஆண் | 70 | 5ஆம் வகுப்பு | கொங்கு வேளாளர் | பழனிக்கவுண்டன்புதூர் | 25.5.2000 |
| 45. | கருப்பணகவுண்டர் | ஆண் | 80 | 3ஆம் வகுப்பு | ,, ,, | குமராய்புதூர் | 25.5.2000 |
| 46. | இரா.வேலப்பன் | ஆண் | 59 | 9ஆம் வகுப்பு | ,, ,, | அம்மாபட்டி | 27.5.2000 |
| 47. | பெரியகவுண்டர் | ஆண் | 70 | 2ஆம் வகுப்பு | ,, ,, | காவலப்பட்டி | 27.5.2000 |
| 48. | ப.இராமசாமி | ஆண் | 60 | 5ஆம் வகுப்பு | ,, ,, | போடுவார்பட்டி | 29.5.2000 |
| 49. | எஸ். மாரியப்பகவுண்டர் | ஆண் | 65 | 5ஆம் வகுப்பு | ,, ,, | வில்வாதம்பட்டி | 29.5.2000 |
| 50. | சின்னச்சாமிக்கவுண்டர் | ஆண் | 57 | பி.ஏ., | ,, ,, | புளியம்பட்டி | 30.5.2000 |

# திரட்டிச்சீர் நிகழ்வுகள்



1. குடிசையினுள் விடுதல்



2. மணைச்சீர்

# திருமணச் சடங்குகள்



நிச்சயதாம்பூலம்



முகூர்த்தக்கால் நடுதல்



மணமகனுக்கு, கொங்கு நாவிதன் முகவேலை செய்யும் காட்சி



மணமகனுக்கு ஆக்கை போட்டு நீராட்டல்



மணமகனுக்கு மங்கல நீராட்டல்



தாய்மாமன் மணமகனுக்கு உருமால் கட்டுதல்



அருமைக்காரி மணப்பெண்ணுக்கு நிறைநாழி சுற்றும் காட்சி



அருமைக்காரி மணமக்களுக்குக் கண்ணேறு கழிக்கச்
செஞ்சோறு சுற்றிப் போடுதல்



இணைச்சீர்



இணைச்சீரின் போது மணமகனுடன், மணமகனின் உடன்பிறந்தாள் பேழையைச் சுமந்து கொண்டு மணவறையை வலம் வருதல்



மணமகன் பேழை மூடியினுள் நின்று நாட்டுக்கல்லை வழிபடும் காட்சி



மணமகனுக்குக் கங்கணம் கட்டும் காட்சி



மடைக்கலப்பானைகளை நெருதூபம் காட்டி வழிபடுதல்



மணவறையில் கரகப்பானைகள் முன் மங்கலப்பொருட்கள்
வைத்து அருமைக்காரர் வழிபடும் காட்சி



மணமகன், பெற்றோருக்குப் பாதபூசை செய்தல்



மணமகள், பெற்றோருக்குப் பாதபூசை செய்தல்



மாங்கல்யம், தட்டில் வைக்கப்பட்டுள்ள காட்சி



தாய்மாமன் மணமகளுக்குப் பொட்டு வைத்தல்



தாய்மாமன் மணமகளுக்கு மாலை அணிவித்தல்



தாய்மாமன் மணமகளுக்கு பட்டம் கட்டுதல்



தாய்மாமன் மணமகனுக்கு மாலை அணிவித்தல்



மணமகளுக்கு மணமகன் திருப்பூட்டும் காட்சி



மணமகன் மைத்துனன் கைகோர்வை



மணமகள், மணமகனுக்குச் சட்டுவச்சோறு பரிமாறல்



மணமகளுக்கு, கொங்கு மாதாரி பாதஅணி அணிவித்தல்



பிராமணரை வைத்து நடத்தும் திருமணக்காட்சி



ஆய்வாளர், கொங்கு நாவிதன்
திரு K. சின்னராஜ் அவர்களிடம் பேட்டி காணுதல்



ஆய்வாளர், கொங்குச் செட்டியார்
திரு இரா.ரத்தினசாமி அவர்களிடம் பேட்டி காணுதல்